"குடி அரசு" பதிப்பக வெளியீடு 14.

# இராமாயண ஆராய்ச்சி.

(இரண்டாம் பாகம்.)

## அயோத்தியா காண்டம்.

முதற் பதிப்பு 2000.



1931.

"KUDI ARASU" PUBLISHING HOUSE.
ERODE.

# முகவுரை.

இயற்கை வளமெலா மேந்தி, ஏனைய நாடுகட்கு அறிவும் பொருளு மளித்து தனிப்புகழ் நாட்டி நின்ற தமிழ் நாடு, மூடப்பழக்க வழக்கங் களாம் கொடிய நஞ்சும், புரோகிதப் புரட்டெனும் பொல்லா நோயும் இருபுறம் சூழ, அல்லலுற்று அடிமை வாழ்வில் அழுந்தி நிற்கின்றது. இந்நிலையிலுள்ள நமது, நாடு பண்டைய ஆரியக் கலப்பற்ற தூய தமிழ் நாட்டின் தன்மை யெய்த வேண்டுமாயின், முற்கூறிய கொடிய நஞ்சுக் கும், பொல்லா நோய்க்கும் ஊற்றுக் களன்களாய் நிலவும் வேதம், சாத்திரம், புராணம், இதிகாசமாகிய நூல்களில் மக்கட்குள்ள நம் பிக்கையை அடியோடு தொலைத்தல்வேண்டும். இந்நூல்களிடத்து மக்கள் கொண்ட மோகம் தொலைய வேண்டுமாயின், அவற்றில் எழு தப்பட்டுள்ள தமிழர் நாகரீகத்திற்கு முற்றும் மாறுபட்ட, படிக்கவும் கேட்கவும் கூடாத ஆபாசமான ஆரிய வழக்கங்களையும், தமிழரை இழிவு படுத்தியுள்ள கொடுமையினையும் பாமர மக்கள் மனதில் நன்கு பதியத்தக்க வகையில் ஆராய்ச்சி செய்து வெளிப்படுத்த வேண்டியது அறிஞர்களின் கடமையாகும். அவ்வாறு செய்யப்புகின் அந்நூல்களில் நெடுநாட்களாகக் கொண்டிருந்த மதிப்பின் காரண மாக, உண்மை யுணராத சாதாரண மக்கள் ஆராச்சியாளர்களைப் பழிப்பார்கள். அறிஞர்களோ அவர்களைப் போற்றுவர். போற்று தலையும், தூற்றுதலையும் கொள்ளாது உண்மையை உலகத்திற் குணர்த் தும் பெருமை யொன்றையே அறிஞர் பெரிதும் அவாவுவர். அத் தகைய உண்மையை உணர்த்தும் வீரஞ் செறிந்த அறிஞர்களுள்நமது சந்திரசேகரப்பாவல ரவர்களே முதல்வைத் தெண்ணத்தக்கவராவார்.

திரு. பாவலரவர்கள், மக்களின் ஒழுக்க நிலையினை உலகத்திற் கறிவுறுத்துவான் வேண்டி, கடவுளே மனிதனாய்ப் பிறந்து நடந்து காட்டியதாகக் கூறும் இதிகாசங்களுள் ஒன்றான இராமாயணத்தி லுள்ள பல ஆபாசங்களை ஆராய்ச்சிக் கட்டுரைகளால் "குடியரசில்" வெளியிட்டு வந்தனரென்பது நாமுணர்ந்ததே. அவ்வாராய்ச்சியைத் தொடர்ந்து படித்துவந்த இராமாயண பக்தர்களிற் பலரும், இராமா யணத்தையேயன்றி ஏனைய ஆரிய வழக்கங்களை அறிவிக்கும் நூல் களையும், வெறுக்கும் நிலையடைந்திருப்பதை நான் கண்டிருக்கிறேன். அவ்வப்போது அநேகர் எழுப்பிய வினாக்கட்குத் தக்க விடையிறுத்தி அவர்கள் சந்தேகங்களையகற்றிய பாவலரவர்களின் கல்வித் திறமை

யினையும், ஆராய்ச்சியின் முதிர்ச்சியினையும் கண்டு புகழாதார் எவரே உளர்.

இராமாயணம் ஆபாசம் நிறைந்ததெனக் கூறும் நீங்கள், அதனை ஒதுக்கித் தள்ளாமல் ஆராயவேண்டுவதென்னெனச் சிலர் கேட்கின்றனர். இது உண்மையுணராதார் கூற்றேயாகும். இராமாயண கர்த்தர்களில் ஆரிய மன்னனாகிய இராமனைத் தெய்வமென்று போற்றியும், தமிழ் வேந்தனாகிய இராவணனை அரக்கனென்று தூற்றியும் உள்ள கூற்றினைத் தமிழர்களும் ஏமாந்து ஏற்றுக்கொண்ட தன்மையானது இந்த ஆராய்ச்சி நூல் வெளிவந்த சில மாதங்கட்குள்ளே முற்றும் மாறிவிட்டதொன்றே இந்நூலின் அவசியத்தை வலியுறுத்தும்.

இத்தகைய அரிய ஆராய்ச்சிக் கட்டுரையை, தயங்காது தொடர்ந்து வெளியிட்ட "குடி அரசு"ப் பத்திரிகையையும் போற்றாமல் இருப்பதற்கில்லை. குடியரசு ஒன்றே நமது அறிவைக்கிளர்த்தி ஆராய்ச்சித் திறமையை எழுப்பி, உண்மையை உணர்த்தி ஆபாசப் பழக்க வழக்கங்களை அகற்றுந்தன்மை வாய்ந்ததாயிருக்கின்றது.

ஆகவே உண்மையை நாடும் ஒவ்வொருவரும் இப்பத்திரிகையினைப் படிக்குமாறு வற்புறுத்திக் கூறுகின்றேன். அத்துடன் பாவலரவர்களும் விடாது மற்றைய ஆரிய நூற்களையும் ஆராய்ந்து வெளியிட்டு மக்களை நன்மதிப்படையச் செய்யவேண்டுகின்றேன். இத்தகைய ஆராய்ச்சியை வெளியிட்டு உபகரித்த பாவலரவர்களை மன மொழி, மெய்களால் வழுத்துகின்றேன்.

இந்த இராமாயண பாலகாண்ட ஆராய்ச்சியின் முதற்பதிப்பு இரண்டாயிரம் பிரதிகளும் வெளிவந்த சிலமாதங்களுள் செலவழிந்து, இரண்டாம் பதிப்பு 2000-த்தில் பாதி புத்தகங்களும் செலவழிந்துவிட்டமையொன்றே இப்புத்தகம் எவ்வளவு அவசியமானதென்பதையும், தமிழ் நாட்டில் இதற்கெவ்வளவு மதிப்பிருக்கின்றதென்பதையும் நன்கு உணர்த்தும். இராமாயணத்தின் ஏனைய காண்டங்களும் விரைவில் வெளிப்படுமெனக் கேட்டு மிக மகிழ்கின்றேன்.

தமிழர் ஒவ்வொருவரும் இத்தகைய ஆராய்ச்சி நூற்களை விடாது பயின்று உண்மைநாடுவார்களாக.

காஞ்சிபுரம்
23-1-31

பி. செ. மாணிக்கவாசகன்,
தமிழாசிரியன்.

# அயோத்தியா காண்டம்.



## முதல் அத்தியாயம்.



ரதன் சத்ருக்கனோடு மாமன் வீட்டில் வாழ்ந்து வந்தான். தசரதனுக்குத் தன் மக்கள் நால்வரிடத்திலும் சம அன்பு என்றாலும் ராமனிடத்தில் அதிக அன்பு. இராமனே பிறரால் அறிய முடியாத எண்ணத்தையுடையவன். ஆலோசித்த காரியம் முடியும் வரையில் பிறர்க்குத் தெரியாமல் மறைத்துவைத்துக்கொள்வான். இராமன் எல்லா ஜனங்களுக்கும் தசரதனுக்கும் மகிழ்ச்சியைக் கொடுக்கும் நல்ல நடைகளோடு விளங்கினன். அதனால் ஜனங்கள் இவன் தங்களுக்கு அரசனாகவேண்டுமென்று ஆசை கொண்டார்கள். தசரதனும் "நமது குழந்தை இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்து இந்த முதிர்ந்த வயதில் அதனாலுண்டாகும் ஆனந்தத்தை அனுபவித்து பிறகு சுவர்க்கஞ் சேரவேண்டும்" என்று தீர்மானித்துத் தனது மந்திரிகளோடு யோசித்து இராமனுக்குப் பட்டங்கட்டத் தீர்மானித்தான். அதுவும் சீக்கிரம் நடைபெறவேண்டுமென எண்ணினன். தூதர்களை யனுப்பி அரசர்களை வரவழைத்தான். ஆனால் கேகய மன்னனும் சனகனும் வெகுதூரத்திலிருந்ததால் பிறகு கேட்டு மகிழட்டுமென்று அவர்களுக்குச் செய்தி யனுப்பவில்லை. அவ்விருவரையும் தவிர எல்லா அரசர்களும் வந்து சேர்ந்தனர். அவ்வரசர்களையும் தனது குடிகளையும் பார்த்து தசரதன் பின்வருமாறு கூறினன்.

"எனக்கு வயது முதிர்ந்துவிட்டது. அறுபதினுயிரம் ஆண்டுகள் வாழ்ந்து தளர்ந்துபோன இவ்வுடலுக்கு ஓய்வு வேண்டுகின்றேன். அதனுல் இப்போது இங்கிருக்கும் எல்லோருக்கும் சம்மதமானுல் இளவரசாக இருக்கத் தகுந்தவனென்று நான் குறிப்பிடும் மூத்த மகனுன இராமனை அரசனுகச்செய்து சுகமாக இருக்க நினைக்கிறேன். இராமன் உத்தம குணங்களை யுடையவன். இவ்வெண்ணம் நலமெனத் தோன்றினுல் நீங்கள் அனுமதி கொடுக்கலாம். இது உசிதமல்லவென்ருல் வேறு என்ன செய்யலாமென்று அதையும் சொல்லுங்கள். இராமனுக்குப் பட்டங் கட்டுவதே உசிதமென்று எனக்குத் தோன்றினுலும் மத்தியஸ்தர்களான உங்களோடு ஆலோசித்துச் செய்வதே உசிதமென்று நினைக்கிறேன்" என்று சொன்னுன். அதைக் கேட்ட எல்லோரும் அவனுடைய எண்ணப்படி செய்வதே நலமென்று கூறினர். அவர்களுடைய எண்ணத்தை அறிந்தும் அறியாதவனைப்போல் தசரதன் பாசாங்கு பண்ணி "அரசர்களே! நான் உங்களையெல்லாம் சரியாக அரசாண்டுவரும்போது இராமனுக்கு ஏன் முடிசூட்டச் சொல்லுகிறீர்கள்? உண்மையைச் சொல்லுங்கள்" என்று கேட்டான்.

அப்பொழுது அவ்வரசர்களும் குடிமக்களும் அவனை நோக்கி, "இராமன் உத்தமமான குணங்களோடு நடக்கிருன். அவன் மிகவும் கேவலமானவர்களோடுங்கூட நெருங்கிப் பழகுகிருன். எல்லோருடனும் பிரியமாகப் பேசுகிருன். கிராமங்கள் நகரங்களைப்பற்றிப் பகைவர்களுடன் போராடவேண்டியிருந்தால் இலக்குவனை அழைத்துக்கொண்டு சண்டைக்குப் போய் வெல்லாமல் திரும்புவதில்லை. போர் முடிந்த பிறகு ஊருக்கு வந்து குடிகளைப் பார்த்து 'உங்கள் மனைவி மக்கள் யாவரும் சுகமா?' என்று தந்தை குழந்தைகளை விசாரிப்பதுபோல் சுகம் விசாரிப்பான். ஆதலால் இவ்வளவு நற்குணங்களோடு விளங்கும் இராமனுக்கு முடிசூட்ட நாங்கள் விரும்புகிருேம்" என்று கேட்டுக்கொண்டார்கள். இதைக் கேட்ட தசரதன் மகிழ்ச்சியடைந்து வசிட்டனைப் பார்த்து "பன்னிரண்டு மாதங்களில் இந்தச் சித்திரை சிறந்தது. இதே இராமன் பிறந்த மாதம். இந்த மாதத்தில் அரசனுக்குப் பட்டங்கட்டுவதே உத்தமம். ஆதலின் வேண்டுவன விரைந்து செய்க" என்று கூறினுன். உடனே

வசிட்ட முனி சுமந்திரனைப் பார்த்து "எல்லாவிதமான அலங்காரங்களும் செய்க. பொருள்களெல்லாம் சேர்க்க. காலையில் அநேகமாயிரம் பிராமணர்களுக்கு இஷ்டப்படி தயிர் பால் முதலிய வியஞ்சனங்களுடன் சிறந்த அன்னமும், நெய், தயிர், பொரி, பூர்ணமான தக்ஷிணைகளும் வேண்டிய வரையில் ஆதரவுடன் கொடுக்கப்படட்டும், சூரியோதயத்தில் சுவஸ்திவாசனம் நடக்கவேண்டும். பிராமணர்களுக்கு அதைப்பற்றி ஞாபகம் செய்து தகுந்த ஆசனங்கள் போடப்படட்டும். தாளங்கொட்டிப் பிழைக்கும் நட்டுவன் முதலியவர்களும் வேசிகளும் நன்முய் அலங்கரித்துக்கொண்டு அரண்மனை இரண்டாங்கட்டில் தயாராயிருக்கட்டும்" என்று ஆணையிட்டு ஏனைய காரியங்களையும் செய்து முடிக்க ஏவிவிட்டுத் தசரதனிடத்தில் எல்லாம் செய்யப்பட்டன என்றனன். அரசன் இராமனை அழைத்துவரச் சுமந்திரனை ஏவினன். நான்கு திக்குகளிலுமிருந்து வந்திருக்கும் அரசர்களும் மிலேச்ச தேசத்தரசர்களும் அரசனைச் சூழ்ந்திருந்தனர். இராமனும் வந்து தந்தையை வணங்கி ஓர் உயர்ந்த இருக்கையில் இருந்தான். உடனே தசரதன் "இராமா! உனக்குப் பூச நாளாகிய நாளைக்கு முடிசூட்ட எண்ணியிருக்கிறேன்; நல்லவனாக நடந்துக் கொள்வாயாக" என்முன். இராமனுக்கு நண்பர் சிலர் இச்செய்தியை அவனுடைய தாயாகிய கோசலைக்கு அறிவித்தனர். அவள் அவர்களுக்குப் பரிசளித்தாள். இராமன் தந்தையிடத்தில் விடைபெற்றுத் தனது அரண்மனையை அடைந்தான்.

சபையை விட்டு எல்லோரும் போனபின்பு தசரதன் "பூச நக்ஷத்திரத்தில் நாளைக்கு முடி சூட்டுவே"னென்று முடிவு செய்து உள்ளேபோய் சுமந்திரனைப் பார்த்து இராமனை மறுபடியும் அழைத்து வரச்சொன்னுன். சுமந்திரன் இராமனுடைய அரண்மனையையடைந்து காவலர் மூலமாக வரவைத் தெரிவித்தான். உடனே "இதென்ன! உத்தேசித்த காரியத்திற்கு ஏதாவது இடையூறு நேர்ந்ததோ?" என்று இராமனுக்குச் சந்தேகமுண்டாயிற்று. அவன் சுமந்திரனை உள்ளே அழைத்து "நீர் மறுபடியும் வந்த காரணமென்ன? நன்முகச் சொல்லு"மென்று கேட்டான். சுமந்திரன் "இராமா! உனது பிதா உன்னைப் பார்க்க விரும்பி அழைத்துவரச் சொன்னுர். அதைத் தெரிவித்தேன். அங்கே போவதும் போகாமலிருப்பதும் உன்னிஷ்

டம்" என்றான். சுமந்திரனுடைய சொல்லைக் கேட்டு இராமன் வெகு பரபரப்புடன் வேகமாக அரண்மனைக்குப் போனான்.

தசரதன் இராமனை நோக்கி, "இராமா! உன்னிடம் அரசை ஒப்புவிப்பதைத் தவிர வேறு செயலில்லை. ஆகையால் நான் சொல் வதைத் தவறாமல் கேட்கவேண்டும். நமது தேசத்து மக்களனை வரும் இப்பொழுதே நீ அரசனாகவேண்டுமென விரும்புகிறார்கள். அவர்களுடைய புத்தி எப்பொழுதும் ஒரேவிதமாயிராது. என் புத்தி மாறுவதற்கு முன்னால் உனக்கு முடி சூட்டுகிறேன். இப்படிச் செய்யவேண்டுமென்று எனக்கு இப்போது தோன்றுகிறது. உத் தேசித்த காரியத்தை நாளைக்கே முடிக்கவேண்டும். இவ்விதமான காரியங்களுக்குப் பலவகை இடையூறுகள் நேரும். உன் நண்பர்கள் இன்று உன்னைக் கவனமாகக் காப்பாற்றட்டும். உன் தம்பி பரதன் வெகு நல்ல எண்ணமுள்ளவனே. ஆனாலும் அவன் அம்மான் வீட் டிற்குப் போய் வெகு நாளாயிற்று. சாதுக்களாயும், தர்ம சிந்தை யுள்ளவர்களாயும், பிறரால் கலக்க முடியாதவர்களாயும் இருப்பவர் களின் மனதும் மாறிவிடும். ஆகையால் பரதன் ஊருக்குவருவதற்கு முன் இந்தக் காரியத்தை முடிப்பது நல்லது" என்று சொல்லி இராமனுக்கு விடைகொடுத் தனுப்பினான்.

இச்செய்திகளைத் தெரிவித்தற்கு இராமன் தனது தாய் கௌசலை யிடம் சென்றான். கௌசலை செய்தியுணர்ந்து இராமனை நோக்கி, "குழந்தாய், நீடு வாழ்க. உன் எதிரிகள் நாசமடையட்டும். நீ அர சைப்பெற்று என் பந்துக்களையும் சுமித்திரையின் பந்துக்களையும் காப்பாற்று. உன் பிதா தசரதர் உன் குணங்களால் மகிழ்ந்தார். நீ நல்ல நாளிலே பிறந்தாய். நான் நெடுநாளாகச் செய்த தவமே உனக்கு அரசைக் கிடைக்கச்செய்தது" என்றாள். இராமன் பக்கத் தில் நின்ற இலக்குவனைப் பார்த்து "அப்பா, உனக்காகவே இந்த அரசாட்சி எனக்குக் கிடைத்திருக்கிறது. ஆதலால் அரசாளவேண் டியது உன் வேலை. இந்த நாடும் நான் உயிரோடிருப்பதும் எல்லாம் உனக்கே" என்று கூறி விடை பெற்றுச் சென்றான்.

தசரதனால் அனுப்பப்பெற்ற வசிட்டன் இராமனுடைய அரண் மனைக்குச் சென்று முடிசூட்டலுக்குமுன் செய்யவேண்டிய சில காரி யங்களைச் செய்து மீண்டு, சபையிலிருந்த தசரதனையடைந்து செய்தி

கூறினன். தசரதன் எல்லோருக்கும் விடைகொடுத்து அந்தப்புரம் சென்ருன். இராமனும் தனக்குப் பிரியமான வார்த்தைகளை எப்பொழுதும் சொல்லும் மித்திரர்களுடன் சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்து விடை பெற்று அந்தப்புரஞ் சென்ருன். இராமன் விடிய ஒரு ஜாமமிருக்கும்போது தூங்கி விழித்துக்கொண்டு வேண்டிய அலங்காரங்களெல்லாம் செய்துக்கொண்டிருந்தான். மேலே கண்ட வரலாற்றை ஆராய்வோம்.

மேலே கண்ட வரலாறும் நாம் கேள்விப்படாததாகவே யிருக்கிறது. இவ்வரலாற்றைக் கற்றுவல்ல பெரியோரிற் பலருங்கூட அறிந்திருக்க முடியாது. ஏனெனில் இவ்வரலாறு வடமொழியில் வால்மீகியாற் கூறப்பட்டிருப்பது. அதனுல் வடமொழி கற்ருருள்ளும் இந்நூலை நன்கு கற்போர் மட்டுமே அறியக்கூடியதாக இது உள்ளது. மேலும் இவ்வரலாற்றை முற்றிலும் புரட்டி எழுதியுள்ள பெரும் புரட்டுக்காரரான கம்பரும் தமிழில் இராமாயணம் பாடிவிட்டார். அதனுல் தமிழ் மக்களனைவரும் கம்பர் பாடிய பெரும் புரட்டு நிரம்பிய கவிகளையே படித்து மயங்கிவிட்டனராதலால் வடமொழி இராமாயணப் படிப்பே தமிழ்மக்களுக்கில்லாமற்போயிற்று. இதனுலேயே தமிழ் மக்களனைவரும் மேலே கண்ட உண்மையான வரலாற்றை அறிவதற்கு வழியில்லாமற்போயிற்று. வால்மீகி யெழுதியுள்ள ஆபாசமான கதைகளை யெடுத்துக் கூறி அவைகளைப் பொய்க்கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் எவ்வாறு புரட்டுகிருரென்று எடுத்துக் காட்டியுங் கூடச்சிலர் நம்பாது வாய்க்கு வந்ததை எழுதவும் முன்வருகின்றனரே! ஆதலின் சந்தேகமுள்ளவர்கள் வால்மீகி ராமாயண மூலத்தைப் படித்துப் பார்க்க வேண்டுகின்ருேம். வடமொழி தெரியாதவர்கள் பண்டித நடேச சாஸ்திரியார், பண்டித அநந்தாச்சாரியார், சி. ஆர். சீனிவாசய்யங்கார், பி. ஏ., இவர்கள் எழுதிய வால்மீகி ராமாயணத் தமிழ் மொழிபெயர்ப்பையேனும் சிரத்தையோடு படித்துச் சரிபார்க்க வேண்டுகிருேம். இவை கிடையாதோர் பண்டித மன்மதநாததத்தர் எழுதியுள்ள ஆங்கில மொழிபெயர்ப்பை வாங்கி வாசித்து உண்மையை உணர்வாராக. நிற்க வால்மீகி கூறும் உண்மை வரலாருகிய மேலே கண்ட வரலாற்றைக் கம்பர் எவ்வாறு மறைக்கிருரென்பதைப் பின்னர் ஆராய்வோம். இப்போது இவ்வரலாற்ருல் விளங்கும் உண்மைகளை ஆராய்வோம்.

மேலேகண்ட வரலாற்றால் தசரதன் மிகவும் வஞ்சகன் என்பது புலப்படுகிறது. ஏனென்றால் அந்தப்பரதன் வருகிறதற்கு முன்னாலேயே எப்படியாவது இராமனுக்கு முடிசூட்டிவிட வேண்டுமென்று நினைக்கிறான். இதனால் முன் பாலகாண்ட இறுதியிலே வஞ்சகமாகவே பரதனை அவனுடைய மாமன் வீட்டுக்கு அனுப்பினான் என்றாராய்ந்த உண்மை வலியுறுகிறது. ஆதலினாலே தசரதன் ஏதோ சூழ்ச்சிகருதியே பரதனை அவனுடைய மாமன்வீட்டுக்கு அனுப்பியவனாதல் வேண்டும். இதிலிருந்து பரதன் அயோத்தியிலிருந்தால் இராமனுக்குப் பட்டாபிஷேகம் நடைபெறாதென்பதை தசரதன் நன்றாக அறிவான் என்பது ஊகிக்க இடனாகிறது. இராமன் மூத்தமகனாக இருக்க, மூத்த மகனுக்கே பட்ட முரியதாக இருக்க பரதனிருந்தால் எவ்வாறு தடைபுறும்? இராமனுக்குப் பட்டமில்லாமல் பரதனே பட்டத்துக்கு உரியவனா? என்றாராய்ந்தால், பின்னால் சித்திரகூடம் சென்று அங்கே யிருந்த இராமனைப் பரதன் நாடாள அழைத்தபோது இராமன் பரதனைநோக்கி (வால்மீகி அயோத்தியா காண்டம், சருக்கம் 107) "நமது பிதா கைகேசியிடத்தில் மிகுந்த ஆசைவைத்து இவ்விதமான அநியாயத்தைச் செய்தாரென்று நீ அவரை நிந்திப்பது சரியல்ல. இந்த விஷயத்தில் புத்தி பிசகி அவர் ஏதையும் செய்யவில்லை. முன்பு நமது பிதா உன் தாயான கைகேசியை விவாகம் செய்யும் பொழுது கேகய மன்னனிடத்தில் 'உமது பெண்ணிற்குப் புத்திரன் பிறந்தால் அவனுக்கே என் இராஜ்யத்தைக் கொடுக்கிறே'னென்று பிரதிக்ஞை செய்திருக்கிறார்" என்று கூறியதாகக் காணப்படும் வாக்கியத்தால் பரதனே அரசாட்சிக்கு உரியவன், இராமனுக்கு யாதொரு உரிமையுமில்லை என்ற உண்மைவிளங்குகிறது. தசரதனோ வால்மீகி கூறுகிறபடி இராமனிடத்தில் அதிக அன்புள்ளவன் ஆதலின் தான் செய்துக்கொடுத்திருக்கிற சத்தியத்தின்படி நடக்காமல் அதை மறைத்து எப்படியாவது இராமனுக்குப் பட்டங்கட்ட வேண்டிய சூழ்ச்சிகளைச் செய்கிறான். அதனாலே பரதனை அவனுடைய மாமன் வீட்டுக்கு அனுப்பி விட்டு, இராமனைத் தன்னுடைய குடிகளிடத்தில் நெருங்கிப்பழகி அவர்களுக்கு நல்லவனாக நடந்து அவர்களுடைய அபிமானத்தைப் பெறும்படி வேண்டும் ஏற்பாடுகள் செய்கிறான்.

தசரதன் விரும்பியபடியே இராமனும் நடந்து கொள்ளுகிறான். இராமன் மூத்த மகனானபடியால் கூடியவிரைவில் தங்களுக்கு அரசனாக வந்தால் தங்களுக்கு அநேக நன்மைகளைச் செய்வானென்று எண்ணத் தொடங்கினார்கள். இராமனோ தன் தந்தை செய்துக் கொடுத்தவாக்குத் தத்தத்தையும் அதனால் பரதனுக்கே அரசுரிமையுண்டு என்பதையும் அறிந்தவனே. இது பின் அவன் பரதனிடம் கூறிய மொழிகளினாலே வெட்ட வெளிச்சமாகத் தெரிவதோடு மேலே கண்ட வரலாற்றிலும் ஊகித்தறியத்தக்கதாக இருக்கிறது. இராமனும்எவ்விதமாவது அரசைப்பெற வேண்டுமென்னும் பேராசையை யுடையவனாகவும் தன்னுடைய தந்தையின் புத்திரத் துரோக நயவஞ்சகச் சூழ்ச்சிகளுக்கு உடந்தையாகவும் இருந்ததோடு அதனால் தன்னுடைய தம்பியாகிய பரதனை வஞ்சிக்கவும் துணிந்து பரம சகோதரத் துரோகியாகவுமானான்.

தன்னுடைய விருப்பப்படி குடிகளெல்லோரும் இராமனிடம் பேரன்பு கொண்டதையுணர்ந்த தசரதன் தன்னுடைய மந்திரிமார்களோடு ஆலோசித்து இராமனுக்கு முடிசூட்டத் தீர்மானித்திருக்கிறான். உண்மையை யுணர்ந்தவர்களாகிய வசிட்டமுனி, சுமந்திரன் முதலிய அமைச்சரும் அரசனுடைய சூழ்ச்சிக்கு உடந்தையாயிருக்கின்றனர். இராமனும் முடி சூட்டு விழா மிக விரைவில் நடைபெற வேண்டுமென வேண்டுவன செய்கிறான். தசரதன் தனது வஞ்சகம் வெளிப்பட்டு விடும் என்ற அச்சத்தால் அவன் எல்லா அரசர்களுக்கும் விரைவில் ஓலை விடுகிறான். ஆனால் பரதனிருக்கும் கேகய நாட்டுக்குச் செய்தியனுப்பவில்லை. ஏனென்றால் உண்மை யுணர்ந்த கேகய மன்னன் உடனே வந்து தனது பேரனாகிய பரதனுடைய உரிமையை நிலைநாட்டி அவனுக்கே முடிசூட்டி விடுவான். பின்னர் உண்மை வெளிப்படுமிடத்துச் சாக்குச்சொல்லவே அவன் சனகனுக்கும் செய்தியனுப்பவில்லை.

விரைவில் வந்து சேர்ந்த பல அரசர்களையும் தனது குடிமக்களையும் சேர்த்துச் சபை கூட்டி அவர்களிடத்திலே தனது எண்ணத்தைத் தெளிவாகச் சொல்லுகிறான். பின்னர் அவர்களுடைய அபிப்பிராயம் தெரியாதவன் போலப் பாசாங்குசெய்துவினவுகிறான். அரசனுடைய எண்ணத்துக்கு மாறாக யாவரே வாய்திறப்பர்? அவர்களோ

அவன் விருப்பத்திற்கு அதிகமாக முகஸ்துதி கூறினர். பரதன் பிரிந்தபின் தசரதனுக்கும் மாற்றரசர்களுக்கும் யாதொரு போரும் நிகழாதிருக்க அக்குடிகள் போருக்குச் சென்று திரும்பும் போதெல்லாம் இராமன் அவர்களிடத்தில் வந்து சுகம் வினவிப் போவான் என்று அவர்கள் கூறுகின்றார்கள். உடனே தசரதன் மகிழ்ந்து மறு நாளே முடிசூட்டு விழாவென்று கூறி வேண்டுவன செய்யக்கட்டளையிடுகிறான். வசிட்டனே பிராமணனானதால் அநேக ஆயிரம் பிராமணர்களுக்குச் சாப்பாட்டுக்கும் தக்ஷிணைக்கும் ஏற்பாடு செய்கிறான். அவ்வசிட்டன் "பிராமணர்களுக்கு சுவஸ்திவாசனத்தைப் பற்றிஞாபகப்படுத்துங்கள்" என்று கூறுவதால் அவர்கள் விலாப்புடைக்கஉண்டு மயங்கிக்கிடப்பர், பிறர்நினைப்பூட்டினாலே செயல் புரிவர் என்ற உண்மை அறிய இருக்கிறது. அம்முனி வேசையரையும் வரவழைக்க கூறுகிறான். என்னே இவன் மதி?

அரசர்களுக்கு மத்தியிலிருந்த தசரதன் இராமனை வரவழைத்து "நாளைக்கு உனக்கு முடி சூட்டப்போகிறேன்" என்று கூறுகிறான் சகோதரத்துரோகியாகிய இராமனும் தனது பேராசை நிறைவேறுகிற காலம் வந்து விட்டதென்ற மகிழ்ச்சியோடு ஒன்றும் கூறாமல் இணங்குகிறான்.

பின் விடைபெற்றுச் சென்ற இராமனை தசரதன் மறுபடியும் சுமந்திரனை விடுத்து அழைத்துவரச் சொல்லுகிறான். அப்போது இராமனுக்குச் சந்தேகமுண்டாய்விட்டது. தனது முடிசூட்டலுக்கு ஏதேனும் தடை ஏற்பட்டு விட்டதோ என நடுநடுங்கி தசரதனைக் காண ஓடுகிறான். அப்போது இராமனை நோக்கிச் சுமந்திரன் கூறிய பேச்சும் வியப்பாகவே இருக்கிறது.

திரும்பவும் வந்து சேர்ந்த ராமனை நோக்கி தசரதன் கூறிய சொற்களே மிகவும் கவனிக்கத்தக்கன. "நமதுகுடிகளுக்கு உண்மைதெரிந்தால் அவர்கள் மனம் மாறிவிடும். ஆதலின் அதன் முன்னரும் என் மனம் மாறுவதன் முன்னரும் இக்காரியத்தை முடிக்க வேண்டும். உனக்கு வேண்டிய நண்பர்கள் உன்னைக்கவனமாகப் பாது காக்கட்டும். ஏனென்றால் பரதனுக்கு வேண்டியவர்கள் யாரேனுமிருந்தால் உனக்குக்கேடு நினைப்பர். பரதனோ அவனுடைய அம்மான் வீட்டுக்குப் போய் நெடுநாளாய் விட்டபடியால் அவனுக்கு

உண்மை தெரிந்திருக்கக்கூடும், ஆதலின் அவன் வருமுன் இக்காரியத்தை முடிக்கவேண்டும்'' என்று தசரன் கூறுகிறான். இராமனும் அப்பொழுதும் அவ்வநியாயத்தைக் கண்டிக்காமல் பேராசையாலே தூண்டப்பட்டு அப்பெரிய அநியாயத்திற்கு இசைகிறான்.

இராமன் மிகவும் தந்திரசாலி; தந்தை சொற்படி தனக்கு மிகவும் வேண்டிய நண்பர்களோடு நெடு நேரம் பேசியிருக்கிறான். இராமன் தனது தாயிடம் சென்ற போது பொறுமைக்காரியாகிய கோசலையும் தனக்கு வேண்டியவளாகிய சுமித்திரைக்குப் பரிந்துபேசுகிறாளேயொழிய கைகேசியிடத்தில் பரிவு இல்லாதிருக்கிறாள். இராமன் இலக்குமணனிடம் பேசிய பேச்சு சிறந்த ராஜதந்திர நிபுணனுடையதாகவே காணப்படுகிறது. அவ்விதமான பேச்சில்மயங்கி ஈடுபடாதாரு முளரோ?

இவ்வாறுளது ராமனுடைய யோக்கியதையும். இவ்வித கொடிய மனத்துப் பேராசையனுகிய இராமனையும் அவன் தாயையும் உண்மையறியாப் பாமரஜனங்கள் புகழ்கின்றார்கள்.

மேலே கண்ட வரலாற்றைப் படித்தபின்னராவது உண்மையுணர்ந்து நல்வழிப்படும்படி உலகினருக்கு இறைவன் அருள் செய்வானாக. இக்கட்டுரையில் தசரதன், இராமன், கோசலை முதலியோர் மிகவும் கெட்ட மனதுடைபவர்களென்பதும் வசிட்டன் சுமந்திரன் முதலியோரும் அவர்கள் செய்யத் துணிந்த அநியாயத்துக்கு (இராமன் முடிசூட்டலுக்கு) உடந்தையா யிருந்தார்களென்பதும் தெளிவாகிறது. இனிக் கம்பர் புரளியை ஆராய்வோம். கம்பர், முதன் முதலாக தசரதன் பந்துக்கள் முதலியவர்களையெல்லாம் அனுப்பிவிட்டுத்தனது அறுபதினாயிரம் மந்திரிமாருடன் ஆலோசிக்கிறான் என்று கூறுகிறார். தசரதனுக்கு வாழ்நாளும் அறுபதினாயிரம், மனைவியரும் அறுபதினாயிரம், மந்திரிமாரும் அறுபதினாயிரமாம். இது வியப்பே. இந்த அறுபதினாயிரம் பேருடனும் தசரதன் எவ்வாறு ஆலோசித்தானோ? இத்தனை பேரும் தங்குவதற்கமைந்திருந்த கட்டடம்தான் எப்படியமைந்திருந்ததோ? இவர்கள் ஒன்று சேர்ந்து எவ்வாறு பேசி ஆலோசித்தனரோ? எல்லாம் வியப்பே.

இராமனை முதன் முதலாக அழைத்து வரச்சொன்னது அரசரும் குடிகளும் கூடிய சபையிலல்ல எனவால்மீகி கூறக் கம்பரோ

அதை அமைச்சரோடு கூடி ஆலோசித்த போதென்கின்றனர். அதன் பின்னரே மன்னர்களுக்குக் கடிதமனுப்பி வரவழைக்கிறானென்கிறார் கம்பர். அவர் கள்ளத்தனங்களை யெல்லாம் மறைத்ததோடு நில்லாது இராமனுடைய சகோதர துரோகச் செயல்களையும் மறைக்கிறார். பேராசையனாகிய ராமன் அரசையேற்க ஆவலோடு தன் தந்தையுடன் சூழ்ச்சிக்கு உடந்தையாயிருக்கிறானென்று வால்மீகி எழுத அதை மறைத்து கம்பர்,

> " தாதையப்பரி சுரைசெயத் தாமரைக் கண்ணன்
> காதலுற்றிலன் இகழ்ந்திலன் கடனிதென் றுணர்ந்தும்
> யாது கொற்றவன் ஏவியதது செயலன்றோ?
> நீதியெற்கென நினைந்து மப்பணிதலை நின்றான் "

என்று கூறுகின்றார். இதனால் இராமனை மிகவும் உத்தமன் போலக் கூறி உலகினரை மயக்குகிறார்.

அரசரோடுங்கூடி ஆலோசித்த தசரதன் முன்னரே நாட்பார்த்து நாளையே இராமபட்டாபிஷேகம் நடைபெறுகிறதெனக் கூறியதாக வால்மீகி எழுதியிருக்க அதற்கு மாறாகக் கம்பர் மன்னரை அனுப்பியபின் சோதிடரை வரவழைத்து யோசித்து நாளையென நாள் வைக்கிறானென எழுதுகிறார்.

தசரதன் இராமனைஇரண்டாமுறை யழைத்ததும் இராமன்ஐயுற்று நடுங்கியதும் பின்னர் தசரதனைக்கண்டதும் அவன் கூறிய வஞ்சகச் சொற்களும் ஆகிய இவைகளை யெல்லாம் கம்பர் மறைத்துவிட்டார். உலகத்தாரை மயக்கி பலகேடுகளை விளைக்கக் கம்பர் ஏன பிறந்தார்? இக்கம்பராலேயே இராமன் வரலாற்றில் பல உண்மைகள்மறைந்தன. நல்லவர்களாகிய கூனி கைகேயி முதலியோரை உண்மைக்கு மாறாகக் கெட்டவர்களாகவும் மிகவும் கெட்டவர்களாகிய தசரதன், இராமன் முதலியவர்களை நல்லவர்களாகவும் எழுதி மிகக் கொடும் பாவத்தை கம்பர் ஏற்றார்.



# இரண்டாம் அத்தியாயம்.

---



கேகய நாட்டரசன் வீட்டிலிருந்து கைகேசியுடன் வந்து, அவளோடு வெகு காலமாக வாழும் மந்தரை யென்னும் வேலைக்காரி தற்செயலாய் மாடியில் ஏறி அயோத்தியை முழுவதும் பார்த்தாள். இராம னுக்கு மறுநாள் விடிந்ததும் முடி சூட்டலால் ஊர் நன்கு அலங்கரிக் கப்பெற்றிருந்தது. அதுகண்ட கூனியாகிய மந்தரை ஆச்சரிய மடைந்தாள். உடனே அவள் ஒரு தோழியை நோக்கி "கோசலை பொருளைச் சேர்ப்பதில் ஆசையுடையவளே. அவள் பொருளை மேலும் மேலும் கொடுக்கும்படி உண்டான மகிழ்ச்சிக்குக் காரணமென்னே?" என்று கேட்டாள். அத்தோழி மறுநாள் நடக்கவிருக்கும் இராம னது முடிசூட்டை அறிவித்தாள். உடனே மந்தரைக்குச் சினமிக மூண்டது. அவள் மாடியிலிருந்துக் கீழே வந்து தூங்கிக்கொண் டிருந்த கைகேசியை யெழுப்பி, "அடீ, என்ன தூக்கம்? உனக்குப் பெரிய ஆபத்து வந்துவிட்டது. நீ அரசனுக்கு வேண்டியவளென்று புகழ்ந்துக்கொள்ளுகிறாய். அவனுக்கு உன்னிடத்தில் உண்மையான பிரியம் இல்லையென்று எனக்கு நன்றாகத் தெரியும்" என்று கூறி னாள். கைகேசி "அடீ, உன் முகம் மிகவும் வாடியிருக்கிறதே, காரணமென்ன?" என்றாள். மந்தரை கோபம் பொங்கி "தேவி! அரசர் இராமனுக்கு யௌவன ராஜ்ய அபிஷேகம் செய்யப்போகிறார். அதனால் உனக்கு பெரிய ஆபத்து வந்துவிட்டது. நான் உனக்கு மிகவும் வேண்டியவளல்லவா? அதனால் பெரிய துக்கக் கடலில் முழுகி உனக்கு நலஞ்சொல்ல வந்தேன். நீ சுகமாக இருந்தாற் றானே நானும் சுகமடைவேன். நீ அரச வமிசத்திற் பிறந்து அரச னுக்கு மகிஷியாகியும் உனக்கு இராஜ தந்திரம் தெரியவில்லை. நீயோ நல்ல மனதுள்ளவள். உன் கணவனோ மகா வஞ்சகன். நல்லவனைப் போல பாசாங்கு பண்ணி உனக்குப் பிரியமாகப் பேசினும் மிகவும் தீய நடத்தையுள்ளவன். இப்போது கோசலை மகன் இராமனுக்கு

நாட்டைக் கொடுக்கப்போகிறான். வரும் கெடுதியை அறியாத முட்டாளே! அரசனுடைய கெட்ட எண்ணம் தெரிந்ததா? பரதனை உன் தகப்பன் வீட்டிற்கு அனுப்பிவிட்டான். நாளைக் காலையில் இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய நிச்சயித்துவிட்டான். அவன் உன் ஜென்மப் பகைவன். பாம்புக் குட்டியின் அழகில் மயங்கியதுபோல நீ அவன் அழகில் மயங்கினாய். பாம்பையும் பகைவனையும் கவனிக்கவில்லையென்றால் அவை தீங்கு செய்வனபோல இன்றைக்கு உனக்கும் உன் மகனுக்கும் தீமை செய்யப்போகிறான். கபடமற்றவளே! உனக்கு நன்மை தேடுபவனைப்போலப் பாசாங்கு செய்யும் மகா பாபியான தசரதன் உன்னையும் உன் மகனையும் உன் பந்துக்களையும் நிர்மூலம் செய்வான். இனியாவது மோசம் போகாதே. அவனை வசப்படுத்தும் சக்தி உனக்குண்டல்லவா? அதை உபயோகித்து எங்களைக் காப்பாற்று" என்றாள்.

இராம பட்டாபிஷேகத்தைக் கேட்ட கைகேசி மிகுந்த மகிழ்ச்சியடைந்து ஓர் விலைபெற்ற மணிமாலையை மந்தரைக்குப் பரிசாகக் கொடுத்து "இராமனிடத்திலும் பரதனிடத்திலும் எனக்குப் பேத புத்தியில்லை; எனக்கு இராமன் கலத்தால் நன்மையே. உனக்கு வேண்டியதைக்கேள்" என்றாள். அதைக் கண்ட மந்தரை "அறிவற்றவளே! உனக்குப் பேராபத்து விளையும்போது மகிழ்ச்சியடைகிறாய். இராமன் உனக்குச் சக்களத்திப் பிள்ளையல்லவா? அவன் உனக்கு எமனல்லவா? இந்த நாடு இராமனுக்கும் பரதனுக்கும் பொதுவல்லவா? ஆதலால் இராமனுக்குப் பரதனால் பெரும் பயம் நேரும். அதனால் இராமன் பரதனுக்குக் கேடு செய்வான். இலக்குமணனுக்கும் சத்துருக்கனுக்கும் இந்த நாடு பொதுவானாலும் இலக்குமணன் இராமனிடத்தில் மிகவும் நண்புடையவன். அதனால் இராமனுக்கு அவனிடத்தில் பயமில்லை. அதேபோல் பரதனுக்குச் சத்துருக்கனிடம் பயமில்லை. இராமன் முந்திப் பிறந்தவன். அதனால் அரசாட்சி அவனுக்கு முதலில் கிடைக்கும். பின் வரிசையாகப் பரத இலக்குவ சத்துருக்கருக்குக் கிடைக்கும். ஆகையால் தனக்கடுத்த பாத்தியமுள்ள பரதனை அவன் கொல்லவே முயல்வான். தனக்கு முதலில் அரசாட்சி கிடைக்கும்போது பரதனுக்கு அது கிடைக்குமோ என்ற சந்தேகம் இராமனுக்கு உண்டாக நியாயமில்லையோ வென்றால் இராமன் விவேகி; அரச தந்திரத்தில் நிபுணன். செய்ய

வேண்டிய காரியத்தைத் தகுந்த காலத்தில் செய்கிறவன். உன் மகனை பரதன் மேற்சொன்ன குணங்களில்லாதவன். ஆதலால் இராமன் என்ன செய்வானே என்று நடுங்குகிறேன். கோசலை வெகு அதிட்டசாலி; நாளை அவள் மகன் நாடு பெற நீ அவள் வேலைக்காரியைப்போல அவளுக்குப் பணிவிடை செய்வாய். அவளால் உனக்குக் கேடு நேரும். நானும் அவளுக்குப் பணி செய்ய வேண்டும். உன் மகன் இராமனுக்கு அடிமையல்லவா? அதனல் பரதனுடைய மனைவியர் துக்கப்படுவார்கள்; இராமனுடைய மனைவியர் அதிக மகிழ்ச்சியடைவார்கள்" என்று புகன்றாள்.

இவ்வுரைகளாலும் கலங்காத உத்தமியாகிய கைகேசி "இராமன் நல்லவன். மூத்த மகன். அதனல் இளவரசாகத் தகுந்தவன். இராமன் நூறு ஆண்டுகள்வரை ஆண்ட பிறகு முன்னேர்களின் அரசு பரதனுக்குக் கிடைப்பது நிச்சயம். ஆகையால் தனக்குப் பின் அரசனுகும் பரதனுக்கும் இப்பொழுதே இளவரசுப் பட்டம் சுட்டுவான். என்னிடத்தில் மிகவும் அன்போடு பணிவிடை செய்கிருன். நூறு ஆண்டுகளின் பின் பரதனுக்கு நாடு கிடையாது போயினும் போகட்டும். இராமனுக்கு வந்த நன்மை பரதனுக்கு வந்ததுபோலவே. இராமன் தன் உடன்பிறந்தவர்களைத் தன்னைப் போல் எண்ணுகிருன்" என்றாள்.

மந்தரை அடங்காத் துயரம் கொண்டு "அடீ, கெடுதியை நன்மையென்று நினைக்கிறவளே! பரதனுக்கு நியாயமாய் கிடைக்கவேண்டிய அரசாட்சி கிடைக்காமலிருப்பதும் அவன் நாட்டிலிருந்து துரத்தப்படுவதுமாகிய பெரிய ஆபத்தில் மூழ்கியிருப்பதை நீ அறியவில்லை. நூறு ஆண்டுகளுக்குப்பின் பரதனுக்குப் பட்டம் வருமென்று உனக்குச் சொன்னவர் யார்? இராமன் நாளை அரசனுவான். அவனுக்குப் பின் பட்டம் அவனுடைய மகனுக்கே கிடைக்கும். ஆகையால் அது பரதனுக்குக் கிடைக்க நியாயமே யில்லை. எனெனில் மூத்த பிள்ளைகளே பட்டமெய்துவர். மூத்தவனிருக்க இளையவனுக்குப் பட்டம் கிடைக்காதல்லவா? உன் சக்களத்தியின் பெருமையை உத்தேசித்து உன் மகிழ்ச்சிக்கு அடையாளமாக எனக்கு மணிமாலை கொடுக்க வருகிருய். இராமன் இந்த நாட்டை அடைந்த பிறகு பரதனை இவ்வுலகத்திலிருந்தே துரத்திவிடுவான். இதற்கு அனுகூலமாக நீயும் செய்த கெடுதி என்னவென்றால் பரதனை அவனுடைய அம்மான் வீட்டிற்கு

அனுப்பிவிட்டாய். மரம், செடி முதலியவைகளும் பக்கத்திலிருப்பவைகளையே தழுவுகின்றன. பரத சத்துருக்கனர்கள் பக்கத்திலிருந்தால் அரசனுக்கு அவர்களிடத்தில் அதிகப் பிரீதி உண்டாகும். அதையும் நீயே கெடுத்துவிட்டாய். சத்துருக்கனாவது இங்கேயிருந்தால் அவன் மூலமாக அரசனுக்குப் பரதனிடத்தில் பிரீதியுண்டாகும்; அதுவுமில்லை. முள்ளடர்ந்த புதரின் நடுவிலிருக்கும் மரத்தை முள்ளுக்கஞ்சி விறகுவெட்டிகள் வெட்டுவதில்லை. இராமனும் இலக்குவனும் நெருங்கிய நட்புடையவராதலால் இலக்குவன் இராமனுக்குத் தீங்கு நினையான். பரதனுக்கு இராமன் தீமை செய்யாமலிருக்க மாட்டான். ஆகையால் பரதன் கேகய நாட்டிலிருந்தே காட்டிற்குப் போகட்டும். இங்கே வந்தால் நிச்சயமாய் இறப்பான். பரதனோ சிறுவன். தனக்குக் கிடைக்கவேண்டிய அரசாட்சியும் போய் சுபாவ சத்துருவாயிருக்கும் இராமன் வசத்திலகப்பட்டு அவன் எப்படிப் பிழைப்பான்? ஆதலால் பரதனைக் காப்பாற்ற இதுவே சமயம். தசரதனுக்கு வேண்டியவளென்ற கர்வத்தால் இதுவரையில் நீ அவமதித்த கோசலை தன் மகன் அரசனானதும் தன் மனதிலிருக்கிற வைரத்தை ஏன் தீர்த்துக்கொள்ளமாட்டாள்? ஆதலால் இராமன் எப்போது அரசனாவானோ அப்போதே நீயும் பரதனும் அவமானமடைவது நிச்சயம். ஆதலால் உன் மகனுக்கு நாடு கிடைக்கவும் உன் பகைவனான இராமன் காடு போகவும் ஏதாவது உபாயம் செய்'' என்றாள்.

உடனே கைகேசியின் மனம் மாறிவிட்டது. பரதனுக்கு அரசு கிடைக்கும்படியான உபாயத்தைக் கூறுமாறு அவள் மந்தரையைக் கேட்டாள். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

கூனியாகிய மந்தரையென்ற கிழவி கைகேசிக்கு வேண்டியவளென்பதும் அவள் இராமனுக்கு முடி சூட்டுதலை அறிந்து சினங்கொண்டு கைகேசியையடைந்து எழுப்பி அவளிடத்தில் இராம பட்டாபிஷேகத்தைக் கூறுகிறாள் என்பதும் அதுவரை இராம பட்டாபிஷேகத்தையறியாதவளாகிய கைகேசி அதுகேட்டு மகிழ்ந்து கூனிக்கு மணிமாலையை வெகுமதியாகத் தந்தாளென்பதும் தெரியவருகிறது. இதனால் தசரதன் இராமனுக்கு முடி சூட்டுவதற்காகத் தீர்மானித்துப் பல அரசர்களுக்கும் பல இடங்களுக்கும் கடிதமெழுதி பல நாட்டு மன்னவரும் வந்து சேர்ந்து கூடிப்பேசி அலங்காரம் செய்து

நிற்கும் வரையும் இம்முக்கியமான செய்தியைத் தனது அன்புக்கு இருப்பிடமான மனைவியாகிய கைகேசிக்கு அறிவியாதிருந்தானென்றால் இது மிகவும் வியப்பே. இதில் ஏதோ சூது இருத்தல்வேண்டுமென்பது தெளிவாகிறது. ஆதலினாலே மிகவும் நயவஞ்சகனாகிய தசரதன் பட்டத்திற்குரியவனாகிய பரதனை வஞ்சித்து இராமனுக்கு முடிசூட்ட நினைக்கிறான். இதனாலேயே பரதனை அவன் பாட்டனூருக்கு அனுப்பிவிட்டதோடு இராமனையும் குடிகளோடு நெருங்கிப் பழகச் செய்து இரகசியமாக குடிகளையும் அரசர்களையும் வரவழைத்துப் பேசி உண்மை தெரியாத அவர்களுடைய ஒப்பத்தையும் பெற்று இராமனுக்கு முடிசூட்ட முனைகிறான். தான் கேகய மன்னனுக்குச் செய்துகொடுத்த வாக்குறுதியை கைகேசியும் ஏனையோரும் அறிந்திருந்தால் என் செய்வது! அதனால் தன்னுடைய வஞ்சனை வெளிப்படுமுன் இராமனுக்கு முடி சூட்டவேண்டுமென்று அவசரப்பட்டு இராமனையும் வரவழைத்து அவனுக்கு வேண்டிய நண்பர்களுடைய பாதுகாவலிலிருக்கும்படியும் பரதன் வருமுன் முடி சூட்டல் முடிவு பெற வேண்டுமென்றும் கூறுகிறான்.

இப்பாபி எவ்வாறு நீதி வழங்கினனோ குடிகளுக்கு? மனமாறு முன்னரே இவனைப்பற்றிப் பலவாறு இகழ்ந்த கூனி பேச்சைக்கேட்டும் சினம் கொள்ளாதிருந்ததால் கைகேசியின் கற்புநிலை ஐயுறற்கேதுவாம் நிற்க, புத்திரத்துரோகியாகிய தசரதனுடைய சூழ்ச்சிகள் வெளிப்பட்டு விடுகின்றன. ஆனால் தசரதனுடைய வாக்குறுதியையறிந்தவர் ஒருசிலரேயாவர். அவர்கள் வசிட்டமுனிவனும் சுமந்திரனுமாவர். அவர்கள் எல்லோரும் அரசனுடைய வஞ்சகத்துக்கு உடந்தையாகவே இருக்கின்றனர். மந்தரைக்கும் கைகேசிக்கும் நடந்த பேச்சினாலே அவர்கள் தசரதனுடைய வாக்குறுதியை அறிந்தவராகக் காணப்படவில்லை. இருந்தாலும் அவர்கள் அறிந்திருந்தால் என் செய்வது என்றே தசரதன் அவர்களும் அறியாமல் முடிசூட்டலுக்கு ஏற்பாடு செய்தான்.

மந்தரை கைகேசிக்கு மிகவும் வேண்டியவளாதலால் அவள் நலனும் சுயநலனும்கருதியே இராமபட்டாபிஷேகத்தை தடைபடுத்தி பரதனுக்கு முடிசூட்ட நினைக்கிறாள். கைகேசி வெளுத்ததெல்லாம் பாலென்று நினைக்கிறவள். மந்தரை செய்தி சொன்னதும் மகிழ்ந்து

மணிமாலை தருகிறாள். அதை கூனி வாங்காமலே அவளுக்கு மேலும் புத்திகூறுகிறாள். அதாவது இராமன் முடிசூட்டியபின் தனக்கு அடுத்த பங்காளியான பரதனைக் கொன்றுவிடுவானென்பதும் இராமன் விவேகி, இராசதந்திரி, பரதன் ஒன்றுமறியாத வெள்ளறிவன் என்பதும், கைகேசி கோசலைக்கு அடிமையாகவேண்டிவருமென்றும், பரதனுடைய மனைவிமார் துக்கத்தையும், இராமனுடைய மனைவிமார் இன்பத்தையும் அடைவர் என்பதுமே. இக்கூற்றினால் பரதனும் இராமனும் பலமனைவியருடனிருந்தாரெனத் தெரியவருகிறது. இராமன் ஏகபத்தினி விரதன் என்று உலகினர் கூறும் பேச்சு பொய்ப் பேச்சே. வால்மீகி இராமன் பல மனைவிமாருட னிருந்தவனென்றே கூறுகிறார். ஏமாற்றுக்காரராகிய கம்பரோ அதற்கு மாறாக இராமனை ஏகபத்தினி விரதனைப்போலக் காட்டி உலகத்தை ஏமாற்றுகிறார்.

மேலேகண்ட கூற்றிலும் கைகேசி மனமாறாமல் இராமனிடத்திலிருந்த அன்பைக் காட்டுகிறாள். அவனுடைய ஒழுக்கத்தைப் பாராட்டுகிறாள். வஞ்சகனும் பல தார கமனனுமாகிய இராமன் அவ்வளவுதூரம் கைகேசி ஏமாறும்படி மிக நல்லவனைப்போல நடந்திருக்கிறான். அவன் இலக்குமணனிடம் தான் உயிரோடிருப்பதும் அவன் பொருட்டே என்று இணங்கிப்பேசி ஏமாற்றினனல்லவா? மிகவும் இராசதந்திர நிபுணன்.

நூறு ஆண்டுகளுக்குப்பின் 'பரதனுக்கு பட்டம் வருமென்று மயங்கிய கைகேசியை மறுத்து மந்தரை உண்மையைக்கூறி பரதனும் அவனுக்கு வேண்டியவனாகிய சத்துருக்கனும் இல்லாதபோது தசரதன் செய்யத்துணிந்த தீமையை உணர்த்துகிறாள். கைகேசி தசரதனுடைய மையலில் மயங்கி அவன் தூண்டுதலால் பரதனை அடிக்கடி பாட்டன் வீட்டுக்கனுப்பியதே இத்தனைகேட்டுக்கும் காரணமென்பதையும் கூறுகிறாள். மேலும் கைகேசியால் அவமதிக்கப்பெற்ற கோசலை தன் மகன் பட்டம் பெற்றதும் கைகேசியை மிகவும் அவமதிப்பாளென்றும் இராமன் கட்டாயம் பரதனைக்கொல்வானென்றும் கூறுகிறாள். இதனால் கைகேசி மனம்மாறுகிறது.

## கம்பர் புரட்டு.

இனி புரட்டுக் காரராகிய கம்பர் இதைப்பற்றி யாது கூறுகிறாரெனக் கவனிப்போம்.

வால்மீகி, மந்தரை கைகேசியைச் சத்தமிட்டு எழுப்பினளென, கம்பர் அவள் அவளைக் காலைத்தொட்டு எழுப்பினளென்கிறார். உனக்குக் கேடு வந்ததென்ற கூனியை கைகேசி உன்முகம் வாடியதால் உனக்கு என்ன தீங்கு நேர்ந்ததென்று கேட்டாளென்று வால்மீகி கூற (இதனால் கைகேசி நற்குணம் விளங்கும்) கம்பரோ 'எனக்கென்ன தீமை' என்றனள் கைகேசி என்கிறார். (இதனால் கைகேசி சுயநலம் புலனாகிறது.) மேலும் வால்மீகி கூறாததாகிய 'இராமன் சிறு பிள்ளையாகஇருக்கும்போது வில்லில் ஒரு மண்ணுண்டையை தொடுத்தெய்ய அது கூனிமேல் விழுந்தது' என்ற கதையை இராமன் மேல் கூனி வைரமுடையாள் என்பதற்குக் காரணமாகக் காட்டுகிறார். இப்பொய்க்கதையை இவர் எங்கேதான் கண்டாரோ. கைகேசி கொடுத்த மாலையை கூனி வாங்கவில்லை யென்று வால்மீகி கூற கம்பர் அவள் அம்மாலையைக் கீழேபோட்டு மண்ணில் குழியுண்டாக மிதித்தாள் என்று கூறுகிறார்.

"பரதன் புல்லறிவன், அரசதந்திர மறியாதவன், சமயமறிந்து செயல்புரியத் தெரியாதவ"னென்று கூனி கூறியதாக வால்மீகி கூறக் கம்பரோ அதற்கு மாறாக:—

> "கல்வியு மிளமையும் கணக்கி லாற்றலும்
> வில்வினை யுரிமையும் அழகும் வீரமும்
> எல்லையில் குணங்களும் பரதற்கே யது
> புல்லிடைபுகுத் தமுதேயும் போலென்றாள்"

என்று முற்றிலும் மாற்றிக் கூறுகிறார்.

வால்மீகி ராமாயணத்தில் கைகேசி ஓரிடத்திலேனும் மந்தரையைக் கடிந்து பேசியதாக காணப்படவே இல்லை. அவளுடைய கணவனாகிய தசரதனைப் பலவாறு பாபியெனவும் வஞ்சகனெனவும் தீயோனெனவும் மந்தரை மிக இகழ்ந்து பேசிய இடத்திலும்கூட கைகேசி அவளுடைய பேச்சுகளில் ஒரு சிறிதும் கோபமுற்றவளாக வால்மீகி கூறவே இல்லை. அப்படியிருக்க கம்பரோ, கைகேசி மந்தரையை நோக்கி மிகவும் கெட்டவளென்றும் அவளுடைய நாக்கை அறுப்பதாகவும் இன்னும் பலவாறு கடுமையாகப் பேசியதாகவும் பல பாடல்கள் பாடுகிறார். நல்லவர்களைக் கெட்டவர்களாகவும், கெட்டவர்களை நல்லவர்களாகவும் மாற்றிப் பாடுகிறார் கம்பர்.

கடைசியாக மந்தரை கூற்றாக கம்பர் கூறுவன அழகாகவே உள்ளன. அவை வால்மீகி கூறாதவையே, அவை வருமாறு:—"இராமன் பட்டம் பெற்றவுடன் தேசமெல்லாம் உன்மாற்றவட்காம். நீ அவளுக்கு அடிமையாவாய். பின் உன் உறவினர் இங்குவந்து காண்பது உன் செல்வமோ? உன் மாற்றவள் செல்வமோ? சீதையின் தந்தை சனகன் உன் தந்தைக்குப் பகைவன். இராமன் முடி சூடியவுடனே உன் தந்தையை அவன் கொன்றுவிடுவான். உன் தந்தைக்கு இன்னும் பல பகைவருளர். இவ்வூர்ச் சேனை சென்று உதவாது போனால் உன் தந்தையை அவர்கள் அழித்து விடுவார்கள். இராமன் பெறும் அரசு அவன் பிள்ளைகளுக்கும் அவனை அடுத்துள்ள தம்பியாகிய இலக்குமணனுக்குமேபோகும். ஆதலால் உன்மகனைக் கெடுத்தொழித்தனை." இதைக் கேட்டமாத்திரத்தில் கைகேசி மனம் மாறியதாகக் கம்பர் கூறுகிறார்.

மேலேகண்டதில் சனகனுக்கும் கேகயனுக்கும்பகை யென்ற செய்தியை வால்மீகி கூறவேயில்லை. இவையெல்லாம் கம்பர் கற்பனைகளே! பரதனை இராமன் கொன்றுவிடுவான் ஆகையால் நீயும் கெடுவாய் என்று பலமுறையும் வால்மீகி கூறியிருக்க இதை ஓரிடத்தேனும் கம்பர் கூறினரில்லை. வால்மீகி கூறும் இம் முக்கியமான செய்தியைக் கம்பர் மறைத்தார். நிற்க;

வால்மீகி கூறுகிறபடி ஓரிடத்திலும் கைகேசி கோபமுறாமைக்குக் காரணமென்னை? அவள் வெளுத்ததெல்லாம் பாலென நினைப்பவள். சூதுவாது தெரியாதவள். அதனாலல்லவா தசரதன் செய்த சூதைநெடுநாளாக உணராமலேயேகாலந்தள்ளி வந்திருக்கிறாள். ஆனால் கைகேசி தன் கணவனைப்பற்றி இழித்துக் கூறியும் மந்தரையிடம் சினம் கொள்ளாதிருந்ததென்ன? என்றால் அவளுக்குக் கொஞ்சம் அரசில்ஆசையிருந்தது அதனால் அவள் சினம்கொள்ளவில்லை. மேலும் பரபுருஷ கமனத்தால் பிள்ளை பெற்றவள் தானே. இராமன் அவளிடம் மிகவும் நல்லவனாக நடந்து கொண்டிருக்கிறபடியால் அவள் அவனைப்பற்றிய நல்லபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளவும் முடியாமல் பலவாறு பேசிக் கடைசியாக பரதன் முடிசூடுதலுக்கு இசைகிறாள். தசரதனைப்பற்றி மந்தரை இழித்துக் கூறியவைகளை யெல்லாம் கம்பர் மறைத்தார்.

---

# மூன்றாம் அத்தியாயம்



பரதனுக்குப் பட்டம் கிடைக்க உபாயம் கூறக் கேட்ட மந்தரை மிகவும் மகிழ்ச்சியடைந்து "உபாயம் என்னைக் கேட்கிறாயா? உனக்கு ஞாபகமில்லையா? இருந்தாலும் சொல்லுகிறேன் கேள்" என்றாள். கைகேயி எழுந்து படுக்கையில் உட்கார்ந்தபடியே "பரதனுக்குப் பட்டம் கிடைக்க வேண்டும். இராமனுக்கு ஒரு நாளும் கிடைக்கக்கூடாது உபாயம் சொல்" என்றாள். மந்தரை "முன்னொருகாலத்தில் தேவாசுர யுத்தம் நடந்தபோது தோல்வியுற்ற தேவர்கள் தசரதனை உதவி செய்யும்படி வேண்டினார்கள். அப்போது தசரதன் தன்னைச்சேர்ந்த மகரிஷிகளையும் உன்னையும் அழைத்துக்கொண்டு, தெற்கில் தண்டகாரணியத்தில் மீனக் கொடியுடைய சம்பர னென்ற மகாசூரன் அரசாளும் வைசயந்தபுரத்தை நோக்கிச் சென்றான். அவ்வசுரனோ மகா மாயாவி. தேவர்களால் வெல்லமுடியாதவன். இந்திரனுடன் அடிக்கடி போர்புரிந்து பகலில் காயம்பட்டவர்களை இரவில் தூங்கும்போது அசுரராற் கொல்விக்கிறவன். தசரதன் அவர்களுடன் கொடிய போர் செய்கையில் அசுரர்கள் அவனை அம்பாலும் வாளாலும் மிகவும் காயப்படுத்தினார்கள். அவன் மூர்ச்சையடைந்து அறிவு தப்பினான். அப்போது நீ தேரை வேறிடத்திற்கு ஓட்டிக்கொண்டுபோய் சைத்தியோபசாரஞ் செய்து உணர்வு வரச்செய்தாய். அசுரர்கள் அங்கேயும் வந்து அடிக்கடி அம்பெய்ய, அங்கிருந்தும் அவனை வேறிடத்திற்குக் கொண்டுபோய் பாதுகாத்தாய். இவ்வாறு இரண்டு முறை அவனுடைய உயிரைக்காத்தாய். அவன் உனக்கு இரண்டுவரங்கள் கொடுக்க அவைகளை நீ சமயம் வாய்க்கும்போது கேட்கிறேனெனக் கூறினாய். அவைகளை இப்போதுகேள். அவைகளால் இராமன் முடிசூட்டிழந்து காட்டுக்குப் பதினான்கு ஆண்டுகள் போகவும், பரதன் நாடாளவும் கேள். பதினான்காண்டுகளுக்குள் பரதன் குடிகளின் பிரீ

திலைப்பெற்று இராமனால் அசைக்கமுடியாத ஆட்சிநிலையடைவான். தசரதனிடம் வரம் கேட்கும் உபாயத்தையும் சொல்வேன்கேள். கோப அறையை யடைந்து அலங்கோலமாகக் கிடக்கவேண்டும். அவன் உன்னிடம் மிகவும் மையலுடையவன். அதனால் உனக்காக நெருப்பிலும் விழுவான், உயிரையும் விடுவான். உன் அழகு அத்தகையது. அவனை வாக்குறுதி செய்யச்செய்து பின் வரங்களைச் சொல். இராமனை எப்படியாவது காட்டிற்கு அனுப்பவேண்டும்" என்று கூறினள். கைகேசி அதைக் கேட்டு ஆவேசமடைந்து "உன்னைப்போல் அறிவுள்ளவர்களை இந்த உலகத்தில் கண்டதில்லை. என் எண்ணம் நிறைவேறினால் உனக்கு வேண்டிய பரிசுகள் தருவேன். உன்னைப்போலும் அழகும் அறிவும் உடையவர்களை நான் கண்டதேயில்லை" என்று அவளைப் பலவாறு புகழ்ந்தாள். கூனி அவளைக் கோப அறைக்குப் போகத் தூண்டினள்.

கைகேசி அவ்வாறே கோப அறையையடைந்து தன் நகைகளையெல்லாம் கழற்றி எறிந்துவிட்டு அலங்கோலமாகப் படுத்துக்கொண்டு "நான் நினைத்ததை முடிப்பேன். இராமனுக்கு முடி சூட்டினால் இங்கேயே உயிர்விடுவேன்" என்றாள். மந்தரை மறுபடியும் "எப்படியாவது பரதனுக்குப் பட்டங் கிடைக்கச் செய்" என்றாள். தனக்குத் தெரியாமல் இவ்வளவு தந்திரமாக இராமனுக்கு முடி சூட்ட தசரதன் முயன்றதை நினைக்க நினைக்க கைகேசி மிகவும் சினங்கொண்டவளாய் "இராமன் காட்டிற்குப் போகவில்லையென்றால் நான் உயிர் வாழேன்" என்று புகன்றாள். தான் நினைத்த காரியம் முடிந்துவிடுமென அறிந்த மந்தரை மகிழ்ச்சியடைந்தாள். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

மேலே கண்ட வரலாற்றில் மந்தரை தன் தலைவியின் நன்மையில் எவ்வளவு கவலையுடையவளாயிருந்தாளென்று புலனாகின்றது.

தலைவிக்கு நன்மையைத் தேடுவதில் கூனியைப்போன்ற சிறந்த வேலைக்காரர்கள் அமைவது அருமையே. கூனி கடைசி வரையில் தன் தலைவியை விட்டுப் பிரியாமல் நின்று வேண்டும் நன்மதிகளைக் கூறுகிறாள். இவ்வரலாற்றாலும் கூனிக்கேனும் கைகேசிக்கேனும் தசரதன் கேகய மன்னனிடம் கைகேசி மகனுக்கே (பரதனுக்கே) அரசைத் தருவதாகச் செய்துகொடுத்த சத்தியம் தெரியாதென்றே

அறியக்கிடக்கின்றது. இவ்வளவு தூரம் சிரமப்பட்டு முயற்சி செய்கிற வளுக்கு அவ்வுண்மை தெரியுமேல் மிகவும் சுலபமாய்விடும். அதற் காகப் படாத பாடெல்லாம் படவேண்டுமென்ற அவசியமில்லாது போய்விடும். தசரதனும் அவ்வுண்மை வெளிப்படுமேல் இராமனுக்கு முடி சூட்டல் நின்றுவிடுமெனவே அஞ்சுகிறான். ஒருவேளை கைகேசி யிடத்தில் அவன் முன்னரே கலந்து இவ்வேற்பாடுகள் செய்திருந்தா னென்றால் இச்சதியாலோசனைக்கு அவள் ஒருவேளை இடங்கொடாம லிருந்தாலுமிருந்திருக்கலாம். நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்குமல்லவா? மறைவழிப்பட்டப் பழிமொழி தெய்வம் பறை யறைந்தாங்கு ஓடிப் பறக்கும். ஆதலினாலே தசரதன் செய்த சூழ்ச் சியும் புத்திரத் துரோகமும் உலகமறியப் பரவும் காலம் வந்துவிட்ட படியால் மந்தரை அதற்குக் காரணமாகி முன்வருகிறாள். உண்மை தெரியாமலே அவள் வேறு வகையாக முயன்றாலும் பின்னர் தசரத னுடைய சதியாலோசனை வெட்ட வெளிச்சமாகின்றது. தன்னை மறைத்து அரசன் செய்த சூதை அறிந்த கைகேசி அவன்மீது அடக்கமுடியாத சினமுறுகிறாள். நிற்க;

இவ்வரலாற்றில் தேவாசுர யுத்தம் நடந்ததாகக் கேள்வி யுறுகிறோம். தேவர்கள் அசுரர்கள் இவர்களைப்பற்றிய விரிவான ஆராய்ச்சியை இராவணனைப்பற்றிய இடம் வரும்போது நிகழ்த்து வோமென முன்னரே தாடகையைப்பற்றிய ஆராய்ச்சியிற் கூறினோம். இருந்தாலும் இவ்விடத்து சம்பராசுரனுக்கும் இந்திரனுக்கும் நடந்த போரைப்பற்றிய குறிப்பு வருதலால் இரண்டொன்று அவர்களைப் பற்றிச் சுட்டுவது அவசியமாகிறது.

தேவாசுரப் போரென்பது ஆரியருக்கும் தமிழருக்கும் நடந்த போரேயாம் என்பது இவ்வரலாற்றால் இனிது விளங்குகின்றது. தேவர்கள் சுராபானம் (கட்குடி) பண்ணியதால் சுரரெனப்படுவர். தமிழர் சுராபானம் பண்ணாமையால் அசுரரெனப்படுவர். ஆரியராகிய சுரரால் எழுதப்பெற்ற இராமாயண முதலிய நூல்களில் சுரராகிய ஆரியமக்கள் மேலோரெனவும் அசுரராகிய தமிழ் மக்கள் முரடரென வும் கூறப்பெறுகின்றனர். தமிழ் மக்கள் மிகவும் தீயோராக அந் நூலில் காட்டப்பெறுகின்றனர். இதன் வரலாறெல்லாம் பின்னர் இராவணனைப்பற்றி வருமிடத்து விரித்தாராய்வோம்.

சம்பரன் தமிழ்நாட்டையாண்ட பாண்டியன். அவன் பாண்டிய னென்பது அவன் மீனக்கொடியை யுடையவனாகக் கூறப்படுவதால் விளங்கும். மீனக்கொடி பாண்டியருக்கே உரியது. பாண்டியர்கள் இந்திரனை மதியாதோரெனத் திருவிளையாடற்கதைகள் கூறுகின்றன. சம்பரன் இந்திரன் முதலிய தேவரை எதிர்த்து முறியடித்துப் பல வாறு வருத்த அதனால் மெலிவடைந்த இந்திரன் தன்னையொத்த ஆரிய மன்னனாகிய தசரதனையடைந்து தனக்கு உதவி வேண்டு கிறான். அவனும் மிக மகிழ்ந்து கைகேசியையும் மகரிஷிகளையும் அழைத்துக்கொண்டு சம்பரனோடு சண்டைக்குப் போகிறான். மக ரிஷிகளென்போர் பெண்டு பிள்ளைகளோடு வாழ்ந்து வந்தவர்களா கவே காணப்படுகின்றனர். அவர்கள் அங்கங்கே அந்நிய நாடுகளிற் சென்று தங்கி நல்லவர்களைப்போல பாசாங்கு செய்து வாழ்ந்து உள வறிந்துவந்து தங்கள் ஆரியமன்னர்களிடம் கூறித் தமிழ் மன்னரை வெல்லும்படி சூழ்ச்சிகள் சொல்லும் உளவர்களேயாவர்—ஆதலினா லேயே தசரதனும் அவ்வுளவர்களாகிய மகரிஷிகளையும் சண்டைக் கழைத்துச் சென்றானென்று வால்மீகி கூறுகிறார்- இல்லையென்றால் இரும்படிக்கிற இடத்தில் ஈக்கு என்ன வேலை என்பதுபோல் சண்டையிடு மிடங்களில் தவம் செய்யும் ரிஷிகளுக்கு என்னவேலை யிருக்கும்!

போருக்குச்சென்ற தசரதன் உயிர்பிழைத்தது தம்பிரான் புண் ணியமாயிற்று. கைகேசி இரண்டுமுறை அவனுடைய உயிரைப் பாதுகாக்கிறாள். சம்பர மன்னனுடைய தலைநகராகிய வைசயந்தபுரம் தண்டகாரண்ணியத்துள்ளது—அது இதுவென அறிஞர் ஆராய்வா ராக.

இனி இவ்வரலாற்றைக் கம்பர் எவ்வாறு புரட்டியெழுதுகிறா ரென ஆராய்வோம். தூங்கியிருந்த கைகேசியைச் சத்தமிட்டெழுப் பிய கூனியை கைகேசியின் காலைத் தொட்டெழுப்பினாள் என்று பொய் கூறியதற்கேற்ப கம்பர் இவ்விடத்தும் கைகேசி தன் மகன் பரதனுக்கு முடிபெறக் கேட்டவுடன் கூனி அவளுடைய அடியைத் தொழுதுகொண்டு வரங்கள் கேட்கக் கூறுகிறாளெனக் கூறுகிறார். அது அடிமைத் தன்மையைப் பரவச்செய்யும் குணம் கம்பரிடமிருந்த தற் கறிகுறியாகும்- இவ்விடத்து வால்மீகியோ கூனி வேறு செயல்

புரியாது தந்திரங்களைக் கூறுகிறாள்—என்றுமட்டும் கூறுகிறார். அவள் கூறுகின்ற தந்திரங்களின் விவரமெல்லாம் கம்பர் மறைத்தார்-மேலும் சம்பரன் மீனக்கொடியுடையவன் என்பதையும் அவர் மறைத்தார்—மேலும் தசரதன் மிகவும் காமக்கிறுக்குடையவன்; கைகேசி மையலுக்காகத் தன் உயிரையும் கொடுப்பானென்றெல்லாம் கூனி தசரதனைப்பற்றிக் கூறும் உண்மைகளையெல்லாம் கம்பர் மறைத்துவிட்டார். ஏனென்றால் தசரதனை மிகவும் உத்தமனென்று தாம் உலகத்தாருக்குச் சித்திரித்துக் காட்ட விரும்பும் தம்முடைய முயற்சிக்கு இவ்வுண்மைகளெல்லாம் மாறுகின்றன.

பரதன் முடிசூட்டலுக்கு உபாயம் கூறு, என்று கைகேசி கேட்டவுடனே கூனி அவளை நோக்கி "என் தோழி வல்லள், என் துணை வல்லள்" என்று அடிதொழுது தனது மகிழ்ச்சியை காட்டினள் என்று கூறுகிறார் கம்பர். இவ்வளவு தூரம் அற்ப மதியையுடையவளாகக் கூனியை வால்மீகி காட்டவில்லை—கடைசியாக கைகேசியைத் தூண்டித் தூண்டிக் கடிந்து பேசி அவளைத் தயார் செய்து அவள் அலங்கோலமாகக் கிடந்த பின்னரே தனக்குத் தானே கூனி மகிழ்ச்சியடைந்ததாக வால்மீகி கூறுகிறார். கைகேசி அவளை எவ்வளவோ புகழ்கிறாள்; பல நகைகள் தருகிறாள். அப்போதெல்லாம்கூட அவள் மகிழ்ச்சி காட்டியதாக வால்மீகி கூறவே இல்லை. இவ்வாறாகவும் இவ்வளவு திறமையுள்ள கூனியை சாதாரணமாக வெள்ளறிவாட்டிபோல மகிழ்ந்தாளெனக் கம்பர் கூறுகிறார்.

"நன்று சொல்லினை நம்பியை நளிர்முடி சூட்டல்
துன்று கானத்திலிராமனைத் துரத்த லிவ்விரண்டும்
அன்றதாமெனில் அரசன்முன் ஆருயிர் துறந்து
பொன்றி நீங்குதல் புரிவென்யான் போதி நீயென்றாள்.

கூனி போனபின் குலமலர்க் குப்பை நின்றிழிந்தாள்
.... .... .... பின் அலங்கோலம் செய்கிறாள்" என்று

கம்பர் கூறுகிறார். கூனியை நோக்கி "நீ போ" என்று கூறியதாக வால்மீகி இராமாயணத்திலெங்கும் காணப்படவில்லை. மேலும் கூனி போன பின்னரே சடையவிழ்த்துத் தலைவிரித்துப் பொட்டழித்து நகை சிதறுகிறாள் கைகேசியெனக் கம்பர் கூறுகிறார். வால்மீகியோ கைகேசியை அவசரப்படுத்திக் கூனி கோப அறைக்கு அழைத்துச்

சென்று நகை சிதறி சடையவிழ்த்து முடித்து அலங்கோலமாகக் கிடக்கச் செய்கிறான் என்று கூறுகிறார். கூனி கைகேசியை விட்டுப் பிரிந்தாளென்று அவர் கூறவே இல்லை. கோப அறையொன்றிருந்தது. அங்கே போய்க் கைகேசி அலங்கோலமாகக் கிடந்தாள் என்பவற்றையெல்லாம் கூறாது கம்பர் தான் இருந்த இடத்திலேயே அலங்கோலமானளென்று கூறுகிறார். நகைகளையெல்லாம் கழற்றி யெறிந்து விட்டுக் கடைசியாகச் சடையை யவிழ்த்து நன்றாகச் சேர்த்து முடிந்துகொண்டு கிடந்தாள் என்று வால்மீகி கூறக் கம்பர் முதலில் சடையவிழ்த்து விரித்து நகை சிதறினளெனக் கூறுகிறார்.

---

## நான்காம் அத்தியாயம்.

---



நமது ஆராய்ச்சியுரையில் 23-9-28உ "குடி அரசில்" "இராமன் ஏகபத்தினி விரதனென்று உலகினர் கூறுவது பொய், அவன் பல தாரகமனன் என வால்மீகி கூறுகிறார்" என்றும் "அதற்கு மாறுபாடாகக் கம்பர், இராமனை ஏகபத்தினி விரதனைப்போல காட்டி உலகை மயக்குகிறார்" எனவும் எழுதியிருந்தோம்.

கம்பருடைய மயக்குரையில் ஏமாந்த சில சகோதரர்கள், இது வால்மீகி நூலில் இருக்குமோ என ஐயுறுவதாகத் தெரிகிறது. இவ்வையுறவுக்குக் காரணம் அவர்கள் வால்மீகி இராமாயணத்தையாவது அல்லது அஃதன் மொழிபெயர்ப்புக்களையாவது படியாமையேயாகும். அவர்கள் அன்பு கூர்ந்து வால்மீகி இராமாயணம் அயோத்தியாகாண்டம் எட்டாவது சருக்கத்தைப் படித்து உண்மையைத் தெரிந்து கொள்வார்களாக. வடமொழி தெரியாதோர் மொழி பெயர்ப்புக்களைப் பார்த்துத் தெரிந்து கொள்வார்களாக. அவர்களுடைய சிரமத்தை நீக்கும் பொருட்டு மொழிபெயர்ப்புக்களை இங்கே எழுதுவோம். நாம் இதற்கு முன் எழுதிவரும் கட்டுரைகளைத் தொடர்பாகப் படிப்போர் வங்காளத்தைச் சேர்ந்த பண்டித மன்மதநாத தத்

தர் M. A. என்பார் ஆங்கிலத்தில் வால்மீகி இராமாயணத்தை மொழி பெயர்த்திருப்பதைத் தெரிந்திருப்பார்கள். அவர் 1892-ம் வருஷத்தில் பதித்த புத்தகத்தில் 202-ம் பக்கத்தில் அயோத்தியா காண்டத்தில் எட்டாம் சருக்கத்தில்

"Rama's wives together with their handmaids will be filled with delight; and in consequence of Bharata's name, the daughters-in-law will be afflicted with sorrow"

என எழுதுகிறார். இதன் பொருள் "இராமனுடைய மனைவிமார்கள் அவர்களுடைய வேலைக்காரிகளோடும் மகிழ்ச்சியையடைவார்கள்; அது போலவே உன்னுடைய மருகியர் (பரதனுடைய மனைவிமார்) துன்பத்தை யடைவார்கள்" என்பது. இதைப் போலவே பண்டித அநந்தாச்சாரியாரும், பண்டித நடேச சாஸ்திரியாரும் எழுதியிருக்கின்றனர். இராமாயணத்தை தமிழில் மொழிபெயர்த்த மற்றொரு பண்டிதர் சென்னை, சமஸ்கிருத காலேஜ் உபாத்தியாயர் சி. ஆர். ஸ்ரீனிவாசய்யங்கார் பி. ஏ. என்பார். அவருடைய இரண்டாம் பதிப்பு (1925) அயோத்தியாகாண்டம் சருக்கம் 8-ம் பக்கம் 28-ல் பின்வருமாறு எழுதுகிறார்:—

"இங்கே 'உன்நாட்டுப் பெண்கள்" என்று பரதனுடைய ஸ்திரீகளைச் சொன்னதால் அவனுக்குப் பார்யைகளே யென்றும், அப்படியே 'இராமனுடைய ஸ்திரீகள்' என்றதற்கும் பார்யைகளென்றே கருத்தென்றும், ராமன் ஏகபத்தினி விரதனென்பதற்கு அர்த்தம் பட்ட மகிஷியாக சீதையை விவாகஞ் செய்து கொண்டாலும் அரசர்களுடைய வழக்கத்தை அநுசரித்துப் போகத்திற்காகப் பலரை விவாகஞ் செய்து கொண்டிருக்கிறார்கள். வேலைக்காரிகளென்று கோவிந்தராஜ வியாக்யானத்தின் கருத்து"

இவ்வுரையாலும் இராமன் சீதையோடு பலபோக ஸ்திரீகளை வைத்திருந்தவனென்பது தெளிவாகிறது. வால்மீகி வியாக்யானங்கள் பலவும் மேலே கண்டவாறு கூற கோவிந்தராசர் மட்டும் வேலைக்காரிகளென்று பொருள் கொள்வானேனென்றால், கோவிந்தராசர் வைணவ மதத்தில் அழுத்தமுடையவர். பண்டித ஸ்ரீனிவாசய்யங்காரவர்கள் பீடிகை பக்கம் 7-ல் கோவிந்தராசரைப்பற்றி "அவருக்குள்ள வைணவ மதாபிமானத்தால் சில இடங்களில் சைவ மதத்தை அள

வுக்கு மிஞ்சித் தகுந்த காரணமின்றிக் கண்டிக்கிறார்" என எழுதி யிருக்கிறார். ஆதலின் இந்தக் கோவிந்தராசர் 'மனைவிகள்' என்று கூறாமல் 'வேலைக்காரிகள்' என்று எழுதியது மதாபிமானம் பற்றியே. இராமனுடைய மனைவிமார்கள் அவர்களுடைய வேலைக்காரிகளோடும் மகிழ்ச்சியடைவார்கள் என்று இவ்விடத்தில் அவனுடைய மனைவி யரையும் வேலைக்காரிகளையும் பிரித்து விளக்கமாகக் கூறியிருப்பதை முன்னே கண்டோம்.

இதனால் இராமன் ஏகபத்தினி விரதனென உலகினர் மயங்கி யிருப்பது முற்றிலும் பொய் என்பதும், அவன் தனது மனைவியாகிய சீதையுடனே இன்னும் பலபெண்களை மணந்து போகமாதராக அவர் களை வைத்திருந்தா னென்பதும் தெளிவாகின்றன. அவனைப் போலவே பரதனும் பல மனைவியரோடிருந்தானென்பதும் விளங்கும். தசரதன் அறுபதினுபிரத்து மூன்று மனைவியரை வைத்திருந்தவ னல்லனோ?

---

## ஐந்தாம் அத்தியாயம்.

---



சென்ற கட்டுரையில் இராமன் பலதாரகமனன் என்பதைப்பற்றி விவரித் தெழுதினோம். சில நண்பர்களுக்கு அதில் ஐயுறவு தோன்றியதா லேயே விவரித்தெழுதவேண்டியதாயிற்று. ஏதா வது ஐயுறவு தோன்றுங்கால் உடனே வால்மீகி யையாவது மொழிபெயர்ப்பையாவது நோக்க நண்பர்களை வேண்டுகிறோம். ஏனெனில் நாம் எழுதுவனவெல்லாம் வால்மீகி கூற்றுக்கு ஓர் எழுத்தேனும் அதிகமாக இருக்கா. நமக்கு இராமனிடத்திலாவது வேறுயாரிடத்திலாவது விருப்பேனும் வெறுப் பேனும் இல்லை. உண்மையை உலகத்துக்கு எடுத்துக் காட்டவேண்டு மென்பதே நமது நோக்கம். தமிழ் மக்களைப்பற்றி மிகவும் கேவல மாக எழுதிவைத்துப் பகைத்துவரும் ஆரிய வகுப்பைச் சேர்ந்த

ஒருவனும், சகோதரத் துரோகியும், நயவஞ்சகனும், பலதாரகமனனு மாகிய இராமனைத் தெய்வம்போலப் பாவித்து வணங்குகின்றவர்க ளாகிய தமிழ் மக்களை உண்மையுணரச்செய்வதற்காகவே நாம் இக்கட் டுரையை எழுதுகிறோம். ஆதலின் இதனைப் படிக்கும் எமது உடன் பிறப்பினர் அனைவரும் நாம் எழுதுவன அனைத்தும் உண்மை மொழி யென்பதை இனியேனும் தெரிந்துகொள்ள வேண்டுகிறோம். நிற்க;

மூன்றும் கட்டுரையின் தொடர்ச்சியான வரலாற்றின்மேற் செல் லுதும். கைகேசி கோப அறையில் விழுந்துகிடக்கிறாள் என்பதை முன்னர் ஆராய்ந்தோம்.

தசரதன், முடிசூட்டிற்கு வேண்டியவைகளைச் செய்யக் கட்டளை யிட்டுச் சபையோரிடம் அநுமதி பெற்றுக் கைகேசியின் அந்தப்புரம் வந்தான். அது பலவித அலங்காரங்களோடும் தேவலோகம்போல் விளங்கிற்று. வழக்கமான படுக்கையில் கைகேசியைக் காணாதவனாய், அப்பொழுது அவன் காமத்தை உண்டாக்கும் பொருள்களாற் சூழப் பட்டு அவளைப் புணர்வதற்குரிய காலமாகையால் மன்மத பாணங் களால் அடிக்கப்பட்டு, அவளைத் தேடிக்காணாமையால் அங்கேயிருந்த அந்தப்புர அதிகாரியிடம் கேட்டான். அவன் கைகேசி கோப அறைக்குப் போனதைக் கூறினான். அதுகேட்ட தசரதன் மிகுந்த துக்கத்தோடும் அங்கே ஓடிப்போய் அவளைக் கண்டான்.

தசரதனோ கிழவன், கைகேசியோ பால்யம் வாய்ந்தவள். அவள் வருத்தத்தைக் கண்டு அவன் மனம் சகிக்கவில்லை. அதிக புத்தி மானாயிருந்தும் அவளிடம் வைத்த பிரியத்தால் அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவளுடைய அழகால் புத்தி மயங்கினவனாய் அவன் அவளைத் தடவிக்கொடுத்து, தாமரை யிதழ்களைப்போன்ற அவ ளுடைய கண்களைப் பார்த்தவுடனே எல்லையற்ற ஆசை கொண்டு அவளுக்கு வசப்பட்டு “கைகேசி, அழாமல் உன் வருத்தத்திற்குக் காரணத்தைச் சொல். தகாத பாவச் செயல்களைச் செய்தாவது, என் உயிரைக் கொடுத்தாவது உன் கவலையை நீக்குவேன். என் புண்ணியத் தின்மேல் ஆணை வைத்துச் சொல்லுகின்றேன்” என்றான். அது கேட்ட கைகேசி, தசரதன் மன்மத பாணங்களால் அடிக்கப்பட்டு காம விகாரத்திற்கு வசப்பட்டு, கேட்டதைக் கொடுக்கத் தயாரா யிருக்கிறானென்பதை யறிந்து “எனக்கு உடம்பில் அசௌக்கிய

மில்லை. எனக்கு உம்மால் ஒரு காரியம் ஆகவேண்டும். நான் சொல்லும் விதமாய் பிரதிக்கினை செய்தால் அதைச் சொல்வேன்" என்று கூறினாள்.

அதைச் செவியுற்ற தசரதன் "நான் பயந்தபடி இவளுக்கு உடம்பில் அசௌக்கியமில்லாமற்போனது என் பாக்கியமே" என்று புன்சிரிப்புடன் அவளுடைய முகத்தை நன்றாய் ஆசைதீர பார்க்க வேண்டுமென்று அவளைத் தூக்கி எடுத்துத் தன் மடிமீது வைத்துக்கொண்டு அவளிடத்தில் வைத்திருக்கிற எல்லையற்ற காம விகாரத்தால் என்ன சொல்லுகிறோமென்று யோசிக்காமல் "அழகில் ஈடற்றவளே! என் உயிருக்குயிராகிய இராமன்மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். நீ வேண்டுவதைச் சொல்லி என்னைக் காப்பாற்று. பார்ப்பவர் கண்களையும் மனதையும் கவரும் உன் அழகின் மகிமையையும் என் திறமையையும் நீ முழுதும் தெரிந்தும் இப்படி ஐயுறலாமா?" என்றான்.

கைகேசிக்கு அவ்வாக்குறுதியால் சந்தேகம் தீர்ந்தது. ஆனால் தான் கேட்டபின் அவன் மறுத்தலும் கூடும்; ஆகையால் அவன் வாக்கை உறுதி செய்து அவனைக் கட்டுப்படுத்த எண்ணி கைகேசி "நீர் கூறிய வாக்குறுதி உண்மையானால் அதை முப்பத்து முக்கோடி தேவர்களும் மற்றெல்லோரும் கேட்கட்டும். தேவதைகளே, நீங்களே இவர் வாக்குறுதியை நன்றாகக் கேட்டு இதற்குச் சான்றாவீர்கள்" என்று உரக்கக் கூவினாள். இவ்வாறு அவனைக் கட்டுப்படுத்தினாள். அவன் காமத்தால் மோகித்து எதைக் கேட்டாலும் கொடுப்பானென்ற நிச்சயத்தால், "நான் சம்பரப் போரில் உமது உயிரைக் காப்பாற்றியதற்காக இரண்டு வரங்கள் தந்தீர்; இப்போதும் நான் எதைக் கேட்டாலும் கொடுப்பதாக மறுபடியும் வாக்குறுதி செய்தீர். இப்போது அவைகளைக் கேட்கப்போகிறேன். நீர் தராது மறுத்தால் நான் உம்மால் அவமானம் செய்யப்பட்டு உயிரை மாய்ப்பேன்" என்றாள்.

தசரதன் அவளுக்கு வசப்பட்டு "அவைகளைக் கொடுத்தேன், கேள்" என்றான். இப்படிக் காமத்தால் மோகித்துக் கேட்ட வரங்களைக் கொடுக்கத் தயாராயிருக்கும் தன் கணவனைப் பார்த்து கைகேசி, "முதல் வரம் இராமன் முடிசூட்டுக்குச் சேகரித்த பொருள்

களைக்கொண்டே என் மகன் பரதனுக்கு முடிசூட்டவேண்டும். இரண்டாவது வரமாவது, இராமன் மரவுரி முதலியன அணிந்து பதினன்கு ஆண்டுகள் காடேகவேண்டும். தாமதம் கூடாது; உமது வாக்குறுதியை நினைவுகொள்ளும். கடன் வாங்கினவனைக் கடன் கொடுத்தவன் கேட்கும்போது அவனுக்கு வருத்தமுண்டாகும். ஆனல் அது குற்றமா? இராமன் இன்றைக்கே காட்டிற்குப் போவதை நான் பார்க்கவேண்டும். சத்தியத்தைக் காப்பாற்றுவதே நற்கதிக்கு வழி'' என்று கூறினள். இடியொலி கேட்ட நாகம்போல தசரதன் அறிவிழந்து விழுந்தான். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

இதனல் தசரதன் மிகவும் காம விகாரத்தில் ஈடுபட்டவனென்பது தெளிவாகிறது. அதனலேயே பட்டத்து மனைவியர் மூவரோடு அறுபதினயிரம் காமக் கிழத்தியரையும் வைத்திருந்தவனுவான். தசரதன் கிழவனென்றும் கைகேசி பாலியமானவளென்றும் இவ்வரலாற்றில் கூறப்படுகிறது.

முன் வரலாறுகளால் தசரதனைப்போலவே அவன் மனைவியரும் வயதானவரென்றே தெரியவருகிறது. இங்கே கைகேசி பால்யமானவளென்று சொல்லப்படுகிருள். இது முன்னுக்குப் பின் முரணுக இருக்கிறது. கைகேசியை பால்யமானவளென்று கொண்டால் அவளை அவள் தந்தையாகிய கேகய மன்னன் அறுபதினயிரத்தின் மேலும் வயதான தசரதனுக்கு எவ்வாறு மணஞ்செய்து கொடுத்தாரோ? இவ்வளவு வயதான கிழவனுகிய தசரதனிடம் அவள் என்ன இன்பந்தான் பெற்ருளோ? மகனுக்கு விடிந்தால் முடிசூட்டு. தந்தையாகிய தசரதன் கைகேசியைப் புணர்வதற்கு மிகவும் காம விகாரத்தோடு இவ்வாறு தட்டழிகிருன். என்ன ஆச்சரியம்! கோப அறைக்கு ஓடிப்போய் அவளுக்கு நேயோயென ஐயுற்றுக் கவலைப்படுகிருன். உடம்புக்கு ஒன்றுமில்லையென்று அவள் கூறவே தன் தீய காரியத்திற்கு இடைஞ்சலில்லையென்று மகிழ்கிருன். இவனுடைய காம வெறியைப்பற்றி வால்மீகி முனிவர் மேலே குறித்த கதையாலேயே பல இடங்களில் கூறுகிருர். தசரதன் காம விகாரத்தால் சத்தியம் செய்கிறவன் பின்னல் தன் சொல்லை மாற்றினலும் மாற்றுவானென்றே அவனைக் கட்டுப்படுத்துவதற்கு அவன் வாக்குறுதியைப் பலரும் அறியும்படி கைகேசி சத்தமிட்டுக் கூறுகிருள்.

தசரதனே, தன் இழிந்த தன்மைக்கேற்ப, குற்றமில்லாதவரைக் கொலை செய்தல், கொலை செய்தோரை விட்டுவிடுதல் முதலிய தான செயல்களைக்கூடச் செய்வதாகக் கைகேசியிடம் கூறுகிறான். இவ்வளவு தூரம் கேவலமான புத்தியையும் ஒழுக்கத்தையும் உடையவனாகிய தசரதனை நல்லவனைப்போலக் காட்டி உலகத்தாரை ஏமாற்றினார் கம்பர். தசரதனைப் பற்றிய மேலே கண்ட கேவலமான வரலாறு முழுவதையும் கம்பர் கூறாமல் மறைத்தார்.

சபையாரிடத்திலே விடைபெற்றுக்கொண்டு தனியாகக் கைகேசியை நாடிவந்த தசரதனை அவளுடைய அரண்மனைக்கு மன்னர் பலர் சூழ வந்தான் என்று கம்பர் கூறுகிறார். ஆதலின் உண்மைக் கதையை மறைப்பதே அவருடைய நோக்கம் போலும்! "அவன் தனியே கோப அறைக்குச் சென்று கைகேசியைக் கண்டான்" என வால்மீகி கூற, கம்பரோ வேலைக்காரிகளோடும் சென்று அவளைக்காண்பதாகக் கூறுகிறார். இதெல்லாம் தசரதனுடைய கேவலமான காம வெறித் தன்மையை மறைத்து அவனை நல்லவனைப்போல உலகுக்குக் காட்டி மயக்சப் போலும்!

தசரதன் கைகேசியினுடைய அழகிய முகத்தைப் பார்த்து மகிழ்வதற்காக அவளை யெடுத்து மடிமீது வைத்துக்கொள்கிறான் என்று வால்மீகி கூறியிருக்க, கம்பரோ அவன் அவளை வாரியெடுத்ததாகவும் அவள் அவன் கையைத் தள்ளிக் கீழே மறுபடியும் விழுந்தாளென்றும் கூறுகிறார். தசரதன் தன்னிடம் கைகேசி பேசிய பின்னரே அவளைத் தூக்கி மடிமீது வைத்துக்கொண்டானென்று வால்மீகி கூறுகிறார்; கம்பரோ போனவுடனே அவன் அவளைத் தூக்கியதாகக் கூறுகிறார்.

தசரதன் முதலில் தன் புண்ணியத்தின்மீது ஆணையிடுகிறான்; பின்னரே இராமன்மேல் ஆணையிடுகிறான். அவன் தன் புண்ணியத்தின்மேல் ஆணையிட்டதைக் கம்பர் கூறாது விடுத்தார்.

மேலே கண்ட வரலாற்றை வால்மீகி பத்து, பதினொன்று என்ற இரண்டு சருக்கங்களிலே மிகவும் விவரமாகக் கூறியிருக்கக் கம்பர், அதையே கைகேசி சூழ்வினைப் படலத்தில் முதற் பத்துப் பாடல்களால் மிகச் சுருக்கிக் கூறுகிறார். இது தசரதனுடைய இழிகுணத்தை மறைக்கவே.

---

# ஆறாம் அத்தியாயம்.



இராமன் காடேகவும் பரதன் நாடாளவும் கூறிய கைகேசியின் பேச்சு காதில்விழுந்தமாத்திரத்தில் தசரதன் மிகவும் கலங்கினான். அது கனவோ நனவோ என ஐயுற்றான். தனக்குப் பித்தேறியதோ என எண்ணிக்கொஞ்சம் தெளிந்து கொடுங் கோபத்துடனே கைகேசியை எரிக்கிறவன் போலப் பார்த்து "அடி கெட்டவளே! நானாவது ராமனாவது உனக்குச் செய்த தீமை உளவோ? எல்லாரும் இராமனைப் புகழ்கின்றார்களே! என்னிடம் அளவற்ற அன்பை வைத்திருக்கும் அவனை எவ்வாறு பிரிவேன். அவனைப் பார்க்கப் பார்க்க எனக்கு ஆசை வளர்கிறது. அவனை ஒரு கணம் பார்க்காமலிருந்தாலும் என்னுயிர் போய்விடும். அவனில்லாமல் என்னுடலில் உயிர் நிற்காது. தீயவளே! பிடிவாதத்தைவிடு. என் தலையில் உன் அடிகளை தொட்டு வேண்டுகிறேன். இதுவரை அவனை நல்லவனென்றாயே. இது என்னை மகிழச் செய்வதற்கா அல்லது அவன் உனக்குப் பணிவிடை செய்வதற்கா? உனக்கு யார் இக்கெட்ட புத்தியைச் சொன்னது? இராமன் மிக்க செல்வமாக வளர்ந்தான். அவனைக்காட்டுக்கு அனுப்ப உன்மனம் எப்படி துணிந்தது? அவன் எல்லோருக்கும் பிரியமானவனாயிற்றே உலகம் சம்மதிக்குமோ? அவன் உனக்குப்பணிவிடை செய்வதில் கொஞ்சமாவது தவறுவதில்லையே. பரதனைக் காட்டிலும் அவன் உனக்கு சிறந்த பணிவிடை செய்கிறானல்லவா? அப்படியிருக்க பரதனிடத்தில் என்ன சிறப்பைக்கண்டாய்! மனிதரிற் சிறந்தவனான இராமனைக்காட்டிலும் அதிகமாக உனக்கு ஊழியஞ்செய்கிறவர்கள் யார்? உன்னிடத்தில் அதிக மரியாதையையும் வணக்கத்தையும் வைத்து உன் சொற்படி நடக்கிறவர்கள் இராமனைத் தவிர யார்? அப்படியிருக்க அவனைக் காட்டிற்குத் துரத்த எப்படி உன்மனம் துணிந்தது? அவன் தன் பணியிலும் கொடையிலும் எல்லோரையும் வசப்படுத்துகிறான். அவன் எல்லோருடைய மனம் போலவும் நடப்பவனாயிற்றே. கைகேசி! எனக்கோ

வயதாய் விட்டது. நெடுநாள் பிழைத்திருக்கமாட்டேன். கிழவனுன தால் சொன்னதையே சொல்லிக்கொண்டிருப்பவன். ஆகையால் என்னிடத்தில் இரக்கம் வை. நீ எனக்கு வயதிற்சிறியவளாக இருந்தாலும் உன்கால்களேத் தொட்டுக் கை கூப்பி வேண்டுகிறேன். நான் இராமனுக்குச் சொன்ன சொல்லேத் தவறும்படி செய்யாதே" என்று வேண்டிக்கொண்டான்.

பின் கொஞ்சநேரம் மூர்ச்சையடைந்து எழுந்து தள்ளாடிப் புலம்பிய தசரதனை நோக்கி கைகேசி "உம்மையொத்தமன்னர் உம்முடைய உயிரைக்காத்த கைகேசிக்கு என்ன உதவி செய்தீரென்று கேட்டால் யாது கூறுவீர்? தன்னுயிரைக்கொடுத்து யார் என்னைக் காப்பாற்றினுர்களோ, யாருடைய தயவால் நான் பிழைத்திருக்கிறேனே, அவளுக்கு அப்போது இரண்டுவரங்கள் கொடுத்துவிட்டு இப்போது அவைகளை மறுத்து விட்டேனென்று சொல்வீரோ? சிபி முதலியவர்கள் குலத்திற் பிறந்தவரா நீர்? கெட்ட எண்ணமுள்ளவனே! நீ அதர்மமாக நடந்து இராமனுக்கு முடிசூட்டி கௌசலேயோடு சுகமாக வாழ எண்ணங்கொண்டிருக்கிறுயல்லவா? இராமனுக்கு முடி சூட்டினுல் உன்னெதிரிலேயே நஞ்சைக்குடித்து இப்போதே இறப்பேன். கௌசலேயைக் காட்டிலும்உனக்கு நானே அதிக சுகத்தைக் கொடுக்கிறவளல்லவா? ஆதலின் கோசலேயை எல்லோரும் வணங்குவதை நான் பார்ப்பதைவிட உயிரையே விடுவேன்" என்று கூறினுள். தசரதன் எவ்வளவு கெஞ்சியும் மறுமொழி கூறவில்லே. அவன் கொஞ்ச நேரம் அவளை இமைகொட்டாமற் பார்த்திருந்து, இராமா என்று கூவிக் கீழே விழுந்தான்.

பின் அவன் வணக்கமாய் "பெண்ணே! உன்னை சிறு பெண்ணுக மணந்தேன். அப்போது உன் கெட்ட குணத்தை அறிய முடியவில்லே. இப்போது வயதானபிறகு உன் தீய குணம் வெளியாகிறது. குடிகளுடைய கோபத்தைத் தேடாதே. பரதன் மிகவும் நல்லவனல்லவா? ஆதலின் அவன் இராமனிருந்தாலே நாட்டிலிருப்பான். என்னுடைய நான்கு பிள்ளைகளுக்கும் இந்தநாட்டை சமமாகப் பிரித்துக் கொடுக்கிறேன், அல்லது பரதனுக்கு முடி சூட்டுகிறேன். இராமன் மாத்திரம் வயதான என்னருகிலிருக்கும்படி செய், பல நாளாகச் சிந்தித்துச் செய்த இத்தீர்மானத்தை இப்படிக் கெடுக்கலாமா? பலருக்கு முன்பாக இராமனுக்கு முடி சூட்டு நாளை என்ற என் வாக்

குப் பொய்யாகுமே! கோசலை மிகவும் உத்தமி. அவள் முன் என்ன சொல்வேன்? உனக்காக அவளைச் சரியாக நான் நடத்தவில்லை. எத்தனையோ வுபகாரம் செய்த எனக்கு இத்தீமை நினைத்தாயே. இராம மனைத்துராத்துவதை யறிந்தால் சுமத்திரை தன் மக்களை எப்போது துரத்திவிடுவானோ என்று என்னை கொஞ்சமும் நம்புவாளா? சீதை இறப்பாளே. நானும் சாவேன். நீ விதவையாக உன் மகனோடு இந் நாட்டை ஆளப்போகிறாயா? நெடு நாளைக்குமுன் செய்து தந்த வாக்குறுதி இப்போது எனக்கே கேடாய் முடிந்ததே! ஒரு பெண்ணின் பிரியத்தைச் சம்பாதிக்க அரசன் தன்மகனைக் காட்டிற்குத் துரத்துவானு என்று எல்லோரும் என்னை இகழ்வார்களே. இராமன் இக்கட்டளையை மீறிக் காட்டுக்குப் போகேனென்றால், அது அதர்மமாகத் தோன்றினும் எனக்கு மிகுந்த பிரியத்தை உண்டாக்கும். இராமன் அப்படிச் செய்யமாட்டானே; இராமனைக் காட்டிற்கனுப்புவது பரதனுக்குப் பிரியமானால், நான் இறந்த பிறகு அந்தப்பாபி உத்தர கிரியைகளைச் செய்ய வேண்டாம். ஐயோ! இராமன் காட்டில் என்னென்ன துன்பமடைவானோ? இராமன் காடேகவும் பரதன் நாடாளவும், இந்த எண்ணம் எவருக்குத் தோன்றியது; இக்கொடிய சூழ்ச்சியை யார்உற்பத்தி செய்தார்கள்? பெண்களையெல்லாம் சுடவேண்டும். ஐயோ, ஒரு பெண்ணுக்காகப் பெண்களெல்லோரையும் நிந்தித்தேன்! இராமன் இயற்கையிலேயே மிகவும் அழகுள்ளவன்; பல அணிகளால் அவ்வழகு இன்னும் வளரும். அவனைக் கண்குளிரப் பார்க்க வேண்டும். அவன் காட்டிற்குப் போனால் நான் இறப்பது நிச்சயம். தீயவளே இவ்வளவு கொடுமையாகப் பேசிய உன் பற்கள் தூள் தூளாக உதிரவில்லையே! சேத்தாலும் சரி; நீ ஆயிரம் சுக்கல்களாக வெடித்து மண்ணோடு மண்ணானாலும் சரி, எனக்கு நன்மை தராத இந்தக்காரியத்தை உன்பேச்சைக் கேட்டுநான் செய்யவேமாட்டேன், உனக்குச் சாவு வரக்காணோமே ஐயோ! உன் கால்களைப் பிடித்து வணங்குகிறேன். தயவு செய்; " என்று பிதற்றிக்காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்கும் கைகேசியின் பாதங்களைப் பிடிக்கக் கீழே குனிந்து வேரற்ற மரம்போல் அவைகளைத் தொடமுடியாமல் கீழேவிழுந்தான்.

கைகேசி திரும்பவும் அவனைப்பார்த்து நீ மிகவும் யோக்கியனைப் போலப் பேசிக்கொள்கிறாய். எனக்குக் கொடுத்திருக்கிற

இரண்டு வரங்களுக்கு என்னிடத்தில் என் கடன் பட விரும்பு கிருய்" என்ருள். அதைக்கேட்ட தசரதன் மூர்ச்சையடைந்தான்.

பின் அவன் தெளிந்து கடுங்கோபத்தோடு "கொடியவளே விண்ணுலகத்தில் தேவர்கள் என்னைப்பார்த்து பெண்ணுக்காக மகனை எப்படிக் காட்டுக்கனுப்பினீரென்று கேட்டால் நான் எப்படி உயிரை வைத்துக்கொள்வேன்? இராமனுக்கு முடிசூட்டுகிறேனென்று கூறிய வாக்குப் பொய்யாகுமே. அறுபதினுயிரம் ஆண்டுகளுக் கப்பால் பெற்ற பிள்ளையாயிற்றே. இப்பிடிவாதத்தை விட்டு விடு" என்று புலம்பினுன்.

சூரியன் மறைந்தான் இரவு ஆரம்பித்தது. மூன்று யாம நில வுள்ள அவ்விரவு அவனுக்கு ஒரு யுகம்போலிருந்தது—"இரவே விரைவில் விடியமாட்டாயா" என்று அவன் ஏங்கினுன்; பிறகு வேறு கதியில்லையென்று கண்டு கைகுவித்து வணங்கி அவளைச்சமாதானஞ் செய்ய முயன்ருன். அவன் "பெண்ணே! நீ நல்லவளாயிற்றே. தயவு செய். நான் உனக்குச் செய்த வாக்குறுதியோ ஒருவருக்கும் தெரி யாது. இராமனுக்கே பலரறியச் செய்தது. நாளை முடிசூட்டு என்று பலரறியச் சொல்லிவிட்டேன். அது நடைபெறவில்லையென் ருல் என்னை எல்லோரும் இகழ்வார்கள். ஆகையால் நீ விட்டுக் கொடுக்கவேண்டும். நான் உனக்குச்சொன்னபடி இந்த நாடு உன் னதே. நீ என்னிடத்திலும் இராமனிடத்திலும் கிருபை செய்து நீ இந்த நாட்டை அவனுக்குத் தானங்கொடு; அதனுல் உனக்கு மிகவும் புகழுண்டாகும். பருத்த துடைகளை உடையவளே, பரதனும் மகிழ்ச்சியடைவான். அவன் மிகவும் நல்லவனுயிற்றே" என்று வேண்டினுன். இவ்வேண்டுதலாலும் கைகேசி மனம் இளகவில்லை. உடனே அவன் மூர்ச்சித்தான். இவ்வாறு அவன் துக்கத்தோடும் அன்றிரவைக் கழித்தான். பொழுதும் விடிந்தது, எழுப்ப வந்தவர் களை வேண்டாமென்று தடுத்துவிட்டான்.

கைகேசி அவனைப்பார்த்து "சொன்ன வார்த்தையைத் தாண் டாதேயும். என் தரையிற்கிடந்து புரளுகிறீர். சத்தியமே சிறந்தது; இராமனைக் காட்டிற்கனுப்பும்; உம்மை மும்முறை எச்சரிக்கிறேன். இல்லையானுல் என் உயிரைவிடுகிறேன்" என்ருள். அதைக்கேட்ட

தசரதன் 'பாபி; இந்த முடி சூட்டு விழாவைத் தடுத்தால் நீயும் உன் மகனும் எனக்கு உத்திரக்கிரியைகளைச் செய்யவேண்டாம்' என்றான். கைகேசி திரும்பவும் 'உமது வார்த்தைகள் என் மனதை வருத்து கின்றன. இராமனை இப்போதே வரவழைத்துக் காட்டுக்கனுப்பி பரதனை அரசனாக்கி உமது வாக்கை நிறைவேற்றும்' என்று கூறி னாள். தசரதன் தர்ம பாசத்தால் நான் கட்டுப்பட்டிருக்கிறேன். ஆனாலும் என் மகனை இன்னு மொருமுறை பார்க்க விரும்புகிறேன்'' என்று கதறினான்.

பொழுது விடிந்தது. வசிட்ட முனி முடிசூட்டுக்கு தயாராக வந்தவன் அந்தப்புரத்தருகே சுமந்திரனைக் கண்டான். உடனே வசிட் டன் தான் வந்திருப்பதையும் முகூர்த்தம் நெருங்குவதையும் தசரத னிடம் போய்க் கூற அவனை அனுப்பினான்.

சுமந்திரன்உள்ளே போய் தசரத னிருக்குமிடத்தை யடைந்து அவனருகே சென்று அவனிலையை அறியாமல் பலவிதமாகப் புகழத் தொடங்கினான். தசரதன் அச்சொற்களால் இன்னும் மனம் நொந்து "சுமந்திரரே! சொல்லமுடியாத துக்கத்தை அடைந்து கொண்டிருக் கும் என்மனத்தை உமது சொற்கள் இன்னும் அதிகமாகப் புண் படுத்துகின்றன'' என்று பரிதாபமானகுரலுடன் சொன்னான். அதைக் கேட்டுச் சுமந்திரன் திடுக்கிட்டு துக்கத்தால் சோர்ந்திருக்கும் மன் னனை உற்றுப்பார்த்து ஒன்றும் பேசாமல் கை கூப்பிக் கொண்டு அங் கிருந்து போகப்புறப்பட்டான். அரசன் துக்க மேலீட்டால் ஒன் றும் கூற முடியாது தவித்ததை கண்ட கைகேசி 'அரச நீதியை அநு சரித்து இராமனுக்கு முடி சூட்டும் பேச்சைப் பேசி இரவு முழுதும் மகிழ்ச்சியால் தூக்கமில்லாமல் சோர்ந்திருக்கிறார் மன்னர். இராமனை இப்பொழுதே போய் அழைத்து வாரும் சீக்கிரம் என்று கட்டளை யிட்டாள். சுமந்திரனும் இராமனுக்கு நன்மை வருமென மகிழ்ந்து அழைத்து வரச் சென்றான்.

வாசலில் பல மன்னர் கூடியிருந்தனர், அவர்களைக்கண்ட சுமந் திரன் "நீங்கள் காத்திருப்பதை அரசனிடம் தெரிவிக்கிறேன், என்று கூறி மறுபடியும் தசரதனிருக்குமிடம் சென்றான். மன்னனிருந்த இடத்தினருகே சென்று அங்கே போட்டிருந்த திரைக்கு எதிரே நின்று கொண்டு அவன் "விடிந்து நெடுநேரமாயிற்று, உத்தரவுப்படி

எல்லாம் தயாராயிருக்கிறது, தயவுசெய்து எழுந்து மேலே நடக்க வேண்டியதைக் கட்டளையிட வேண்டும். எல்லோரும் காத்திருக்கிறார்கள்'' என்று கூறினான். இச்சொற்கள் தசரதனுடைய காதில் விழ அவன் விழித்துக்கொண்டு "சுமந்திரரே! உம்மிடம் இராமனை அழைத்து வரும்படி கைகேசி சொன்னாளல்லவா? இன்னும் ஏன் என் கட்டளைப்படி அழைத்து வரவில்லை. தூங்குகிறேனென்று நினைக்க வேண்டாம், சீக்கிரமாய்ப்போய் இராமனை அழைத்து வாரும்'' என்று மறுபடியும் உத்தரவு செய்தான். சுமந்திரன் தலைவணங்கி இராமனுக்கு ஏதோ நன்மை உண்டாகப் போகிறதென்று மகிழ்ந்து இராமனை அழைத்து வரப்புறப்பட்டான். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

மேற்கண்ட வரலாற்றினாலே தசரதன் மிகவும் அற்ப அறிவும் அற்ப குணமுமுள்ளவன் என்பது தெரியவருகிறது. அவன் கைகேசியை மணஞ் செய்யும்போது அவள் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைக்கே அரசைத்தருவதாக வாக்குறுதி செய்தான். பின் அவ்வாக்குறுதிக்கு மாறாக இராமனுக்கு முடிசூட்ட நினைத்து பலவாறு முயல்கிறான். அதனால் பரதனை வஞ்சித்து அவன் பாட்டனுடைய ஊருக்குத் தந்திரமாக அனுப்பிவிடுகிறான். எல்லோருக்கும் நல்லவனாக நடந்து எல்லோருடைய அன்பையும் பெறவேண்டும், அப்படியானாலே அரசைப் பெறலாம் என இராமனிடம் கூறி எல்லோரிடமும் முக்கியமாக கைகேசியிடத்தில் மிகவும் நல்லவனாக நடந்துகொள்ளுமாறு தூண்டுகிறான். கிரமமாக அரசாட்சி பரதனுக்கே உரியதாகும், அதனால் அதைப் பெறுவதற்குத் தன் தந்தையினுடைய சூழ்ச்சிகளின்படி தான் நடந்து கொண்டாலே நினைத்தது கைகூடுமெனத் துணிந்து இராமன் அவ்வாறே நடக்கிறான். தசரதன் வசிட்டன் சுமந்திரன் முதலிய அமைச்சரையும் தன் வசப்படுத்தி குடிகளையும் குறுநில மன்னரையும் அழைத்து, பாசாங்குபண்ணி உண்மையறியாத அவர்களையும் இராமனுக்கு முடிசூட்டச் சம்மதிக்கச்செய்து, அம்முடிசூட்டும் மறுநாளே நடைபெற வேண்டுமெனவும் முடிவு செய்கிறான். யாவரும் இசைகின்றனர். அரசனுடைய வஞ்சனையை வசிட்டனும் சுமந்திரனும் உணர்ந்தும் அவனுக்கு உடந்தையாயிருக்கின்றனர். இராமனை வரவழைத்து அரசனிடம், உண்மை தெரிந்து பரதனுக்கு வேண்டியவர்களாக யாராவது இருந்தால் அவர்கள் அவனுக்குக்கேடு சூழக்கூடும், ஆகையால் மிகவும் வேண்டிய நண்பர்களின் பாதுகாவலி

விருக்கவேண்டுமென்று சொல்கிறான். பரதனுக்கு தெரிவதன் முன்னரே முடிசூட்டல் நடைபெறவேண்டுமெனவும் தசரதன் விரைகிறான். இராமனும் அரசாட்சிப் பேராசையால் இவ்வளவு வஞ்சனைகளுக்கும் இசைந்திருக்கிறான். அரசன் திரும்பவும் கூப்பிடுகிறானெனச் சுமந்திரன் கூறியபோது முடிசூட்டுக்கு இடையூறோ என நடுங்கின இவ்விவரங்களெல்லாம் நாம் முன் கட்டுரைகளில் விவரமாக ஆராய்ந்தவை.

ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டொன்றாகுமல்லவா! தற்செயலாக இராமனுடைய முடிசூட்டை அறிந்த கூனி கைகேசிக்கு வரும் ஆபத்துக்களை எடுத்துக் கூறி வசப்படுத்தி தசரதனிடம் இரண்டு வரங்களையும் கேட்கத் தூண்டுகிறாள். தசரதன் கைகேசிக்கு இவ்விவரம் தெரியாதென முற்றும் நம்பி, இதை எதிர்பார்க்காமலும் காமவசப்பட்டும் முன்னைய வரங்களைக் கொடுக்க இசைந்துவிட்டான்.

மேற்கண்ட வரலாற்றில் தசரதன் தன்னை மிகவும் வயதானவனென்றும் சாவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறதாகவும் கூறுவதைக் காணலாம். இவ்வளவு தாழ்ந்த நிலையிலிருப்பவன் விடியத் தன் மகனுக்கு முடிசூட்டை வைத்துவிட்டு அந்த அவசரத்திலும் காமப்பித்தேறி கைகேசியைத் தேடி வருகிறான். இவ்வரலாற்றில் அவன் இராமனை மிகவும் அழகுள்ளவனாகப் புகழ்கிறான். அவனுடைய அழகை விவரிக்கிறான்! அவனைப் பிரியமுடியாமல் வருந்துகிறான்; கடைசிவரை அவனுக்கு எப்படியாவது முடி சூட்டவேண்டுமென்று முயல்கிறான். மத்தியில் அரசைப் பரதனுக்குக்கொடுப்பதாகவும், ஆனால் இராமனைக் காட்டுக்கனுப்பாமல் கிழவனாகிய தன் பக்கத்திலே வைத்துப்பார்க்க அனுமதி கொடுக்கவேண்டுமென்றும் மன்றாடுகிறான்; மற்றைய பிள்ளைகளைக் காட்டிலும் இராமனிடமே மிகவும், அளவிலடங்காத ஆசை தனக்கிருப்பதாகக் கூறுகிறான்; அதனால் தன் ஆசைக்கிருப்பிடமானவளாகிய கைகேசியின் மகனாகிய பரதனை வஞ்சிக்கப் பலவாறு முயல்கிறான். இவ்வாறு மற்றைய மக்களைக் காட்டிலும் இராமனிடம் அதிக ஆசை வைப்பதற்கும், அதற்காக ஒரு மகனைத் துணிந்து வஞ்சிப்பதற்கும், மகனாகிய பரதனை வேண்டுமென்று வேறு நாட்டுக்கு அனுப்பியவனே, மற்றொரு மகனாகிய இராமனைப் பிரியமாட்டாமல் தவிப்பதற்கும் தகுந்த காரணமிருத்தல் வேண்டும்.

ஓர் பெண்ணாகிய கைகேசியிடத்திலிருந்த ஆசையைக் காட்டிலும் ஓர் ஆணாகிய இராமனிடத்தில் தசரதன் கொண்டிருந்த ஆசைக்கோர் அளவில்லைப் போலும். உலகத்துச் சிலரைப் போல இத் தசரதன் ஆண்பித்தும் கொண்டவன் போலும்! கிழவனாகிய இவன் தன்னருகிலேயே இராமனை வைத்துப் பார்க்க வேண்டுமென்று பித்து நிரம்பக் கொண்டு புலம்புகிறான். இப்பித்தே இராமனுக்கு உண்மையில் உரிமையில்லாத அரசாட்சியையும் கள்ளத்தனமாக வஞ்சித்து அவனுக்குக் கொடுக்குமாறு தசரதனைத்தூண்டியது போலும்!

இவ்வளவு கேவலமான பித்தேறிய புத்திபுடைமையாலேயே தசரதன் தனக்குக் கேடாதல் பற்றி கைகேசியின் வேண்டுதலுக்கு ஒரு நாளும் இசையேனெனக் கூறுகிறான். தகாத காரியமாகிய அவள் காலைத் தொட்டுப் பணிந்து பல முறை வேண்டுதலைச் செய்கின்றான், பலவாறு அவளை இகழ்கிறான்; பலவாறு அவளையும் பரதனையும் புகழ்கிறான்; காட்டுக்குப் போக மாட்டேனென்று சொல்லி இராமன் மறுத்து விடமாட்டானா எனக் கூறுகிறான். கடைசியாக தன் ஆசைக்கிருப்பிடமான இராமன் தன் முன் அப்போது இல்லாமையாலும், தன் ஆசைக்கிருப்பிடமான கைகேசி தன் முன் இருந்தமையினாலும் கைகேசிபுறமே சாய்கிறான்.

பலரறியக்கூறாத வாக்கானதால் அதனை வற்புறுத்தாமல் விட்டுவிடுமாறு தசரதன் கைகேசியை வேண்டுகிறான்—அவள் எதற்கும் அசைய வில்லை. புத்தி மயக்கத்தால் தசரதன் விண்ணுலகத்தில் தேவர்கள் பெண்ணுக்காக மகனைத் துரத்தலாமா? என்று கேட்டால் எவ்வாறு உயிர் தரிப்பேனென்று புலம்புகிறான். விண்ணுலகம்போன பின் உயிர் இம்மண்ணுடலில் தரிப்பதெப்படி? இவ்வுயிர் போயன்றோ விண்ணுலக மடைதல் வேண்டும்?

இராமனைக் குடிகளுக்கும் முக்கியமாகக் கைகேசிக்கும் வேண்டியவனாக நடந்து கொள்ளுமாறு அவன் தூண்டியிருக்கிறானென்பது அவன் பேச்சினாலேயே தெரிகிறது. இராமன் மிகவும் தந்திரசாலியாதலின் அவ்வாறே நடந்துவந்திருக்கிறான். அதனாலேயே கைகேசியும் அவனை நல்லவனென மயங்கியிருந்திருக்கிறாள். தசரதன் மிகவும் தீயவனாதலால் தன் தீய எண்ணத்திற்கேற்ப பரதனையும் இகழ்கிறான். உண்மையாக அரசாட்சிக்கு உரியவனாகிய பரதனை வஞ்

சித்து நாட்டைவிட்டு ஓட்டிப் பாட்டன் நாடடையுமாறு விடுத்ததோடு நில்லாமல், அவனுக்கு உரிய அரசாட்சியையும் இராமனுக்குக் கொடுக்கத் துணிந்து நின்ற தசரதனினும் கொடியவருளரோ? இவ்வஞ்சகனுடைய சூழ்ச்சியை ஒருவாறு கண்டுகொண்டு, பரதனே உண்மையில் ஆட்சிக் குரியவனெனத் தெரியாமலிருந்தாலும் அவனுக்கு முடி சூட்டவும், அக்கிரமமாக முடி சூட முனைந்து உலகை ஏமாற்ற நல்லவனைப்போல பாசாங்கு செய்து நிற்கும் இராமனை நாட்டை விட்டுக் காட்டுக்கு அனுப்ப வேண்டுமென்று தற்காப்பின் பொருட்டு முனைந்து நிற்கும் கைகேசி எவ்வாறு கொடியவளாவாள்? ஐயோ! புலவர்கள் நல்லவர்களைக் கெட்டவர்களாகவும், கெட்டவர்களை நல்லவர்களாகவும் உலகுக்குக் காட்டி மயங்கச் செய்கின்றார்களே! என்னே பரிதாபம்! மேன்மைத் தமிழ் மக்களே! பெரியோர்களே! உண்மையாராய்ச்சியாளரே! இவ்வுண்மைகளை யெல்லாம் நன்கு சிந்தித்துப் பார்த்து உங்கள் நண்பர்களுக்கும் உண்மையை எடுத்துக்காட்டி நல்வழிப்படுத்த முன்வாருங்கள்; முன்வாருங்கள்.

இனி தசரதனுடைய வஞ்சகச் சூழ்ச்சிகளுக்கு உடந்தையாயிருந்த சுமந்திரனுடைய செயலைப்பாருங்கள். அவன் அரசனை நெருங்கி அவனுடைய உண்மை நிலையை ஆராயாமலே பேசுகிறான். இது எவ்வளவு அற்ப புத்தி? பின் தன் பேச்சால் அரசன் வருந்துகிறானென்று தெரிந்தும், அவ்வருத்தத்துக்குக் காரணத்தை அறிய முயலாமல் அவனைவிட்டுப் போய்விட முயல்கிறான். இதனாலெல்லாம் இவன் ஏதோ தன் மனத்தில் களங்கத்தோடு நடக்கிறானென்பது ஊகித்தறியவிருக்கிறது. இவனுக்கு, அரசனுடைய சூழ்ச்சிகேட்டை அடையக் கூடுமென அச்சமும், ஐயமும் இருக்கின்றன. அதனாலேயேகைகேசி இராமனை அழைத்துவரச்சொன்னவுடன் போனவன் பின் ஏதோ சந்தேகப்பட்டு நொண்டிக் குதிரைக்குச் சருக்கினது சாக்கெனத் திரும்பவும் வந்து தசரதனை அடைந்து 'முடிசூட்டுக்கு எல்லாம் தயாராயிருக்கிறபடியால் மேல் உத்திரவு என்ன' வென்று கேட்கிறான். இதனாலேயே இவன் தசரதனுடைய சூழ்ச்சியிலீடுபட்டு எவ்வாற்றானும் இராமனுக்கு முடி சூட்ட முயல்கிறானென்பதும் கைகேசியினுடைய பேச்சில் ஐயங்கொண்டே திரும்பி வந்தானென்பதும் தெளிவாகும். கைகேசியினுடைய மையலிற் சிக்குண்டு கிடந்த தசரதன், அவள் பேச்சுக்கிசைந்து இராமனை அழைத்து வரு

மாறு தானே கட்டளையிடுகிறான். அதன் பின்னர் சுமந்திரன் நேராக இராமனை நாடிப்போகிறான். இனி இவ்வரலாற்றைக் கம்பர் எவ்வாறு புரட்டுகிறாரென ஆராய்வோம்.

இராமன் பதினான்கு ஆண்டுகள் காடேக வேண்டுமென்று வரங் கேட்டதாக வால்மீகி கூற கம்பரோ:—

'ஏய வரங்களிரண்டி னொன்றினாலென்
சேயரசாள்வது சீதை கேள்வனொன்றால்
போய் வனமாள்வதெனப்பு கன்று நின்றாள்'

எனவே கூறுகிறார், கூனி கூற்றாக இராமன் பதினான்காண்டு காடேக வரம் கேளெனவும், பின் கைகேசி கூற்றாக இராமனிடம் பதினான்காண்டு காடேகிவா என அரசன் கூறினானெனவும், கம்பர் கூறுகிறாரேயன்றி தசரதனிடம் இவ்விரு வரத்தைக் கைகேசி நேரிற் கேட்டதாகக் கம்பர் கூறவேயில்லை. முக்கியமான இடமாகிய இதில் கம்பர் பிழைப்பட்டார். இராமன் உயிருள்ளளவும் காட்டில் வாழ வேண்டுமென்று கேட்டதாக வல்லவா தசரதன் நினைத்துக் கொண்டான்? இவ்விதமாக மயங்கவைத்தார்கள்.

தசரதனுக்கும் கைகேசிக்கும் நடந்த வாக்குவாதத்தை கூறும் போது வால்மீகி மிகவும் இயற்கையான முறையிற் கூறியிருக்கிறார். கம்பரோ உலக இயற்கைக்கு மாறுபடக் கூறுகிறார். முதன்முதலாக "உனக்குப்புத்தி மயங்கியதா? அன்றித்தீயோர் செய்த சூழ்ச்சியா? உள்ளதைக்கூறு" என்று தசரதன் கேட்பதாகக் கம்பர் கூறுகிறார். இது தசரதனை சூது வாது அறியாதவனாக உலகுக்குக்காட்ட அவர் செய்யும் முயற்சியே. வால்மீகியோ வஞ்சகத் தசரதன் இச் சந்தர்ப்பத்தில் எவ்வாறு பேசுவானோ அவ்வாறே பேசுவதாக எழுதுகிறார். பலமுறை கைகேசியைக் காலைத்தொட்டு வணங்குவதாகத் தசரதன் கூறியதாகவும், ஓர் முறை அவன் காலில் விழுந்ததாகவும் ஆனால் அவள் காலைத்தொட முடியவில்லையென்றும் வால்மீகி எழுதுகிறார். கம்பரோ "தசரதன் அவள் கால் மேல் விழுந்தான்" என்று கூறுகிறார். பெண்களையெல்லாம் சுடவேண்டும் என்று கூறிய தசரதன் "ஒருத்தி கெட்டவளாயிருக்கப் பெண்களையெல்லாம் நிந்தித்தேனே" எனத் தன்னைக் கண்டித்துக் கொள்கிறானென வால்மீகி கூறுகிறார். கம்பரோ, 'பெண்களே எழுலகத்திலுமில்லை யென்னும்

படி கூரிய வாளால் கொன்று குவிப்பேன்' என்று தசரதன் பொங்கிக் கூறுவதாகப் பாடவேதோடமைகிறார். இதனால் உண்மையில் மிகவும் கேவலமானவனான தசரதனைத் தம்மையறியாமலே தமது நோக்கத்துக்கு மாறாக மேலும் கெட்டவனாக அவர் காட்டுகிறார்.

இராமனுக்கு முடிசூட்டவும், அவனைக்காட்டுக்கனுப்பாமலிருக்கவும் ஆக இவ்விரண்டுக்கும் சேர்த்தே தசரதன் கடைசிவரை மன்றாடுவதாக வால்மீகி கூறுகிறார். கம்பரோ முதலில் அவன் இரண்டுக்கும் சேர்த்துப் போராடியதாகவும்,பின் பலியாதென எண்ணி பரதனுக்கு முடி சூட்ட இசைந்து பின் இராமன் காடேகாமைக்கு மட்டும் மன்றாடுகிறதாகவும் எழுதுகிறார். அப்பாட்டு வருமாறு:—

" நின்மகன் ஆள்வான் நீஇனிதாள்வாய் நிலமெல்லாம்
உன்வயமாமே ஆளுதிதந்தேன் உரைகுன்றேன்
என்மகன் என்கண் என்னுயிர் எல்லாஉயிர்கட்கும்
நன்மகன் இந்தநாடிறவாமை நயஎன்றான் "

கைகேசியும் " தந்தவரத்தைத் தவிர்கென்றல் நல்லறமாமோ" என்று இராமன் காடேகுவதை விட்டுக்கொடேனென்று கூறுவதாகக் கம்பர் கூறுகிறார். பின்னரும் கம்பர் கூற்றுப்படி தசரதன் இராமனைப் பிரியமுடியாமலே வருந்துகிறான். கைகேசியும் " இராமனைக் காட்டுக் கனுப்பவில்லை யென்றால் இறப்பேன் என்றாள். உடனே இராமனைக் காட்டுக்கனுப்ப தசரதன் இசைகிறான்.

" ஈய்ந்தேன், ஈய்ந்தேன் இவ்வரம் என்சேய்வனமாள " என்பது கம்பர் கூற்று. இவ்வாறாக ஒவ்வொரு வரத்தையும் தனித்தனியே கொடுத்ததாகக் கம்பர் கூறுகிறார். இது வால்மீகி கூற்றுக்கு முற்றிலும் மாறுபட்டது.

பின் விடியுமட்டும் கைகேசி தூங்கினதாகக் கம்பர் கூறுகிறார். இது இயற்கைக்கு முற்றும் பொருந்தாது. வால்மீகியோ அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போதே விடிந்து விட்டதென்று கூறுகிறார். கைகேசி தான் மற்றைய பெண்களைவிட தசரதனுக்கு அதிகஇன்பந் தந்ததாகக் கூறுவதையும், தசரதன் கடைசிவரை அவளைப் பலவாறு ஏமாற்றித்தன் வசப்படுத்த முயன்று கெஞ்சியதையும் கம்பர் கூறவில்லை. விடியும்போது தசரதனை எழுப்பவந்தவர்களைத் தசரதன் தடுத்ததையும் கம்பர் கூறவில்லை,

பின்னர் சுமந்திரன் வந்ததையும், சந்தேகித்துத்திரும்ப வந்ததையும், இன்னும் அவனுடைய செயல்களையும் கூறுது கம்பர் மறைத்தார். இவருக்கு சுமந்திரன் முதலியோரை மிகவும் நல்லவராகக் காட்டி, அவர்களுடைய தியசெயல்களை மறைக்க வேண்டு மென்பதே முக்கிய நோக்கமாக இருந்திருக்கிறது. ஆதலின் சுமந்திரனுடைய கள்ளச்செயல்களை யெல்லாம் மறைத்துப் பின்வரும் பாடல்களைப் பாடுகிறுர்.

"விண்டொட நிவந்தகோவில் வேந்தர்தம் வேந்தன்றன்னைக்
கண்டிலன் வினவக்கேட்டான் கைகயள் கோயினண்ணி
தொண்டைவாய் மடந்தைமாரிற் சொல்லமற் றவருஞ்சொல்லப்
பெண்டிரிற் கூற்றமன்னுள்பிள்ளையைக் கொணர்க வென்றுள்"

இப்பாடலின் கருத்து "சுமந்திரன் தசரதனை அவனுடைய அரண்மனையிலே தேடிக் காணுமல் கைகேசி அந்தப்புரமடைந்து பணிப் பெண்கள் மூலமாகச் சொல்லிவிட, கைகேசி இராமனை அழைத்துவர அவனை ஏவினுள்" என்பது; இதனுல் சுமந்திரன் தடையொன்று மின்றி நேராகக் கைகேசியரண்மனையில் தசரதனை யடைந்து பேசியதும், தசரதன் கூறியதும் சுமந்திரன் திரும்பிவந்த போது தசரதன் அவனைக்கண்டித்து இராமனை அழைத்து வரக் கட்டளையிட்டதுமாகிய வால்மீகி கூறும் உண்மை வரலாறுகளை யெல்லாம் கம்பர் மறைத்துவிட்டார். உண்மையை மறைக்கும் கம்பரின் இவ்விழி செயலென்னே? இதனுல் கம்பர் தமது காலத்திருந்த வைணவரிடம் புகழ் பெறவே இவ்வாறு பல முக்கியமான உண்மை வரலாறுகளை யெல்லாம் மறைத்தாரென நாம் முன்னரே கூறியது மேலும் மேலும் வலி பெறுகின்றது. இவ்வுண்மைகளை யெல்லாம் அறிஞர்கள் உணர்வார்களாக. திருமாலிடத்திலே உண்மையான பக்தியுடையவர்கள் இக்கதையின் உண்மையை யறிந்து, இத்தகைய இழி குணமுள்ள ஆரியமன்னனுகிய இராமனைத் தங்கள் தெய்வமாகிய திருமாலின் தோற்றமெனக் கூறி உலகை ஏமாற்றிய செயல்களை நன்கு தெரிந்து இன்னும் இம் மயக்கத்தமுழ்ந்தியிராமல் உண்மையை நாடி உணர்வார்களாக.

---

# ஏழாம் அத்தியாயம்.



இராமனை உடனே அழைத்து வரும்படி தசரதனாலே நேரில் ஏவப்பெற்ற சுமந்திரன் பல தெருக்களையும் கடந்து இராமனுடைய அரண்மனையையடைந்து காவலுள்ள பல கட்டுக்களையும் கடந்து உட்கட்டிற் புகுந்தான். அங்கேயும் பல இளமையான வீரர்கள் காவல் புரிந்தனர். அங்கே தொண்ணூற்றைந்து வயதுக்கு மேற்பட்ட சில கிழவர்களும் கையிற் பிரம்பேந்தி நின்றனர். இராமன் தன் தந்தையின் அரண்மனையில் உண்டி முடித்துக்கொண்டு திரும்பி வந்தவுடன், அவனை அக்கிழவர்கள் தமதுமடியில் வைத்துக்கொண்டு உச்சி நுகர்ந்து மார்புறத்தழுவிப் போகச் சொல்லுவார்கள். அதனால் இராமனுடைய உடலிலிருந்த குங்குமப்பூக்களாலும், கஸ்தூரி முதலிய நறுமணங்களாலும் அவர்களுடைய உடல் பூசப்பட்டிருந்தது.

சுமந்திரன் விடைபெற்று உட்சென்று இராமனைக் கண்டு, வந்த செய்தியைக் கூறினன். இராமனுடைய உடலில் குங்குமம் கலந்து பன்றியினுடைய இரத்தம்போல் சிவந்த சந்தனம் பூசப்பட்டிருந்தது. இராமன் சீதையைப் பார்த்து "எனது சிறிய தாய் எனக்கு மிகவும் வேண்டியவள். ஆதலின் என் தந்தையும் அவளும் எனது முடி சூட்டை அவசரப்படுத்தியிருப்பர். அதனல் நான் போய்வருகிறேன்" என்று கூறி அவளுடைய பாதங்களைத் தொட்டு அவளைச் சமாதானப்படுத்திச் சென்றான். சீதையும் சிறிது தூரம் பின்சென்று வாழ்த்தினள். இலக்குவன் இராமனுக்குக் காவல் செய்து சென்றான்.

கைகேசியின் அரண்மனையை யடைந்து இராமன் உள்ளே சென்று தசரதன் வாடினமுகத்துடன் படுத்திருப்பதையும், கைகேசி பக்கத்தில் நிற்பதையும் கண்டு இருவரையும் தனித்தனி வணங்கினன். தசரதன் 'இராமா' என்று ஒருமுறை கூப்பிட்டான். பின் கவலையால் நீர் பெருகிய கண்களுடன் பேசமுடியாமலிருந்தான். அத்துயரத்திற்குத் தான் காரணமாயிருக்கலாமோ என்று இராமன் சந்

தேகித்தான். அக்கவலை தன்னால் நேர்ந்திருக்கலாமென்றே எண்ணி இராமன் கைகேசியை நோக்கி "அம்மா நான் ஏதேனும் குற்றம் செய்தேனோ? அன்றி அவருக்கு நோயோ? அல்லது தாங்கள் ஏதாவது கடுமையாகப்பேசி வருத்தமுண்டாக்கினீரோ? உண்மையைக் கூறும்" என்றுகேட்டான். கைகேசி "இராமா, அவர் உன்னிடத்தில் ஏதோ சொல்ல விரும்புகிறார். ஒருவேளை நீ கேட்கமாட்டாயோ என்ற அச்சத்தால் கலங்குகிறார். இவர் எனக்கு வாக்குறுதி செய்து தயங்குகிறார். அது நன்மையோ தீமையோ அப்படியே நடக்கிறேனென்று நீ வாக்குறுதிசெய்தாலுன்னிடமவருக்குப்பதிலாக நானேசொல்லுகிறேன்" என்றாள். இராமன் தன்மேல் அவ்வாறு ஐயமுற்றதற்காக வருந்தி எதைச் சொன்னாலும் கேட்பதாக வாக்குறுதி செய்தான். உடனே கைகேசி "நான் கேட்ட இரண்டு வரங்களால் பரதன் நாடாளவும் நீ பதினான்காண்டு காடாளவும் உனது தந்தை வாக்குறுதி செய்திருக்கிறார். நீயும் இப்போது செய்த வாக்குறுதிப்படி உடனே காட்டுக்குப்போ. இதை உன் தந்தை உன்னிடம் சொல்லமாட்டாமல் தயங்குகிறார்" என்று கூறினாள். தசரதன் தன் கண் முன்னாலேயே இக்கொடிய சொல்லைக்கேட்டுத் தவித்தான்.

அது கேட்ட இராமன் "அம்மா! அப்படியே ஆகட்டும். ஆனால் ஒன்றுமட்டும் என் மனதைப் புண்படுத்துகிறது. பரதனுக்கு முடிசூட்ட வேண்டியதைப்பற்றி அவர் ஏன் என்னிடம் சொல்லவில்லை. எனக்கு வருத்தமுண்டாகுமென்று சொல்லவில்லையென்றால், பரதன் என் தம்பியல்லவா? சீதையை நான் மணம் செய்யும்போது அவளைத் தனக்குவேண்டுமென்று அவன்கேட்டாலும் உடனேகொடுப்பேனே. இவ்வரசாட்சி எனக்கு ஒரு பொருட்டா? பரதன் நாடாளட்டும். நான் காடேகுகிறேன்" என்றுபுகன்றான். கைகேசி அவனை உடனேகாடேக அவசரப்படுத்தி "உன் தந்தை வெட்கத்தால் உன்னோடு பேசவில்லை. நீ காடேகினாலொழிய அவர் குளிப்பதுமில்லை, உண்பதுமில்லை" என்றாள். அதைக்கேட்ட தசரதன் 'என்ன அநியாயம்' என்று கூவி மூர்ச்சித்து விழுந்தான். இராமன் ஓடி அவனை யெடுத்தான். இராமன் "அம்மா! குடிகளை என் வசப்படுத்தி அரசாள முயல எனக்கு எண்ணமில்லை. அவ்வாறு தாங்கள் வருந்தவேண்டாம். நான் தாமதித்திருந்தால் ஒருவேளை பரதன் எனக்கு அரசைக் கொடுத்து விடுவானோ என்று அஞ்சுகிறீரோ? நீங்களே என்னிடம் கட்டளையிட்டால்

உடனே போகேனே? இந்த அற்பமான காரியத்தை தாம் அரசரிடம் கேட்கவும் வேண்டுமோ? இதோ என் தாயிடமும் சீதையிடமும் விடைபெற்றுப் போகிறேன். அது வரை தாமதியும்'' என்று கூறி அவளேயும் தசரதனேயும் வணங்கிச் சென்றான். தசரதன் வாய்விட்டலறினன். இராமன் துக்கத்தை வெளிக்காட்டினல் தன் நண்பர் வருந்துவாராதலால் அடக்கிக்கொண்டு வெளியே வந்தான். அப்போது அங்கிருந்த பெண்கள் யாவரும் "இந்த இராமனே காட்டுக்கனுப்பி மிகுந்த துக்கத்தை உலகுக்கு உண்டாக்கப் போகிருர் அரசர்'' என்று வாய்விட்டுக் கதறி தசரதனே நிந்தித்தார்கள். இக்கூக்குரல் தசரதனுடைய காதில் விழ அவன் வெட்கமும் துக்கமும் கொண்டு மூர்ச்சித்தான். அக்கூக்குரலே கேட்ட இராமன் பெருமூச்சு விட்டுக்கொண்டு போய் இலக்குவன் பின் தொடர்ந்து வரக் கோசலே யின் அரண்மனேயையடைந்தான். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

சுமந்திரனுடைய இழி குணத்தையும், செயலேயும் பெண்வழிப் பட்ட தசரதன் கண்டித்தமையை முன் கட்டுரையிற் கண்டோம். தசரதன் இராமனே அந்தரங்கமாக அழைத்து அவனுக்கு மிகவும் வேண்டியவர், இரவு முழுதும் சாக்கிரதையாகக் காவல் புரியச் சொல்லியதையும் அதன்படி சகோதர வஞ்சகனுகிய இராமனும் தனக்குற்ற நண்பர்களே யழைத்துப் பேசியிருந்ததையும் முன் கட்டுரையிற் கண்டோம். அதன்படியே அவன் மிகவும் வேண்டியவர்களாலே காவல் புரியப் பெற்றிருந்ததைச் சுமந்திரன் காண்கிருன். காவல் வீரரோடும் சில கிழவர்களும் இருந்தார்களாம். அவர்கள் இராமனே மார்போடணேத்து மடிமேல் வைப்பார்களாம். இராமன் பால்குடி மறவாத பிள்ளேயல்லவா! அவனே அவ்வாறுதான் செய்தல் வேண்டும், என்னே அநியாயம்! சீதையை மணம் செய்து முடிசூட்டுக்கு தயாராக இருந்தோடு பல தாரங்களோடு கூடி மகிழ்ந்திருந்த முழு ஆண்மகனுகிய இராமனே கிழவர்கள் மார்போடணேப்பதாம்! மடிமீதிருத்துவதாம்! என்னே விந்தை! அதனல் இராமன் மேலிருந்த வாசனேப் பூச்சுக்களெல்லாம் அக்கிழவர்கள் மேல் ஒட்டுவதாம்! அவன் ஒவ்வொரு நாளும் அவனுடைய தந்தையாகிய தசரதனிடம் போய் உண்டி முடித்து வாசனேப் பூசித் திரும்பும்போதெல்லாம் இக்கிழவர்கள் இச்செயல் புரிவார்களாம்! இவ்விழி செயலுக்கு இராமனும் உட்பட்டிருந்தனனும்! அநியாயம்! அநியாயம்! இவ்விதமான இழிசெயல்

புரிந்தே தசரதனும் இராமனிடம் மயங்கி, அவனை எப்போதும் தன் பக்கத்திலேயே வைத்துப் பார்க்கவேண்டுமென்கிறானென்று நாம் முன் கட்டுரையில் விவரித்த உண்மைகளை, மேலே குறித்துள்ள உண்மைகள் நன்கு வலியுறுத்தப் போதிய சான்றுகளாகின்றன.

இராமனுடைய மார்பிலே பூசப்பெற்றிருந்த செஞ்சந்தனத்துக்கு உவமையாகப் பன்றியின் இரத்தத்தை வால்மீகி கூறுகிறார். இவ்வால்மீகியின் இழிந்த மனப்பான்மைதானென்னே! சிவந்த நிறத்துக்கு உவமை கூறப் பன்றியிரத்தந்தான் சிறந்த உவமையாகும் போலும்!!

தன்னைவிட்டுப் பிரிய மனமில்லாத வளாகிய சீதையை அவளுடைய கால்களைத்தொட்டு இராமன் சமாதானம் செய்தானும். என்னே விந்தை! கணவன் மனைவியிடம் விடை பெறும்போது ஆரியர்களுடையமுறைஇதுதான் போலும்! இவ்விதமான ஒழுக்கங்களைத் தற்கால உலகம் கற்றுக்கொள்ளவேண்டியது அவசியம், அவசியம். இதனுல் தசரதன் கைகேசியைப் பலமுறை பணிவுடன் அவள் காலைத் தொட்டு வேண்டுவதாகக் கூறியதும், ஓர்முறை அவள் காலில் வீழ்ந்ததும் வியப்பிற் கிடமாவன அல்ல. ஏனெனில் இவ்வாறு மனைவியின் காலைச் சாதாரணமாக விடைபெறும் போதே தொட்டு வேண்டி விடைபெறுவது அவ்வாரிய வகுப்பினரில் இயற்கையாக இருக்கிறது. என்னே இவர் தம் நாகரிகம்!!

சகோதரனுகிய பரதனை வஞ்சித்து நாடாள எண்ணி, புத்திரத் துரோகியாகிய தசரதனோடு கூடி முயன்ற தீயவனுகிய இராமன், கைகேசி வீட்டில் தசரதன் வாடிய முகத்தோடிருந்ததைக் கண்டவுடனே திகிலடைந்தான். தசரதனுக்கு அவ்வருத்தம் தன்னையொட்டியே ஏற்பட்டிருக்கவேண்டுமென எண்ணுகிறான். அதாவது தன் முடிசூட்டைக் கைகேசி கலைத்திருக்கவேண்டும். அதனுலேயே தசரதன் வருத்தமுற்றுளானெனத் தீர்மானித்து, உண்மையை அறிய ஆவலோடும் கைகேசியிடம் தந்திரமாக "நான் ஏதாவது தவறுதல் செய்தேனு, அன்றி அரசற்கு நோயா, அல்லது நீ அவர் மனம் வருந்தக்கூடிய பேச்சைப் பேசினுயா" என்று கேட்கிறான். இராமனைப்போலும் தந்திரசாலிகளைக் காண்பதரிது. சரித்திரங்களிலும் இவனைப்போன்றார் ஒரு சிலரே காணப்படுகின்றனர். முதலில் குற்

றத்தைத் தன்மீதேற்றிக் கடைசியில் கைகேசி ஏதாவது கேடு செய்த துண்டா எனத் தன் குறிக்கோளைக் கேட்கிறான். கைகேசியும் சாமானியமானவளா! இராமனிடத்திலே வாக்குறுதி வாங்கிக்கொண்டு உண்மையைக் கூறுகிறாள். இராமன் தன்மீது கைகேசி ஐயமுற்ற தற்காக வருந்துவதுபோலும் பாசாங்கு செய்கிறான். அவனுடைய மனம் அவனுடைய முடிசூட்டுக்குக் கேடு வந்ததை எண்ணியெண்ணி வருந்தியது. ஆனால் அவன் மிகவும் தந்திரசாலியாதலின் தன் வருத்தத்தை ஒரு சிறிதும் வெளிக்காட்டாது மறைக்கிறான்.

"கைகேசி அன்றே பரதன் முடிசூடவேண்டுமென்று கூறினாளாதலின் எப்படியும் பரதன் அன்று வந்துவிடுவான்; அவன் அன்று வந்து சேர அவள் முன்னேற்பாடு செய்திருக்கவேண்டும். அதனால் அவன் வரும் வரை ஏதாவது சாக்குக் காட்டிக் காடேகாமல் தாமதித்துவிட்டால், அவன் மிகவும் கண்ணோட்டமுள்ளவனும் சூதுவாது தெரியாதவனுமாதலின் எப்படியாவது தனக்கு நாட்டினைக் கொடுத்துவிடுவான்" எனத் தந்திரமாக எண்ணிய இராமன், "பரதனுடைய முடிசூட்டைப்பற்றித் தசரதன் என்னிடம் ஏன் கூறவில்லை" என்று கேள்வி கேட்கின்றான். ஆனால் தந்திரசாலி யாதலின் தான் காடேகுவதில் தடையில்லையென்றும் கூறிக்கொள்கிறான்.

தான் செய்த சூழ்ச்சியெல்லாம் வீண் போயிற்றேயென்று சிந்தித்தபோது இராமனுக்கு அளவிலடங்கா ஆத்திரமுண்டாகியது. அதனால் வெறுப்பையும் காட்டி, "அம்மா! பரதன் என் மனைவியைக் கேட்டாலும் அவனுக்குக் கொடுத்துவிடுவதில் தடையில்லை. அப்படியிருக்க இவ்வரசாட்சி ஒரு பொருட்டா?" என்று கூறுகிறான். இக்கூற்று மிகவும் ஆத்திரமும் அகங்காரமும் கொண்டு அரசாட்சி கிடையாது போயிற்றே என்ற பெருங் கவலையிற் கூறிய கூற்றாகுமே யன்றி உண்மையுடையார் கூற்றாகுமா? தன் தம்பியாகிய பரதனுக்குப் பெண்டாட்டியைக் கொடுப்பதிலும் தடையில்லையென்கிறானே இராமன்! அந்தோ, இவன் தன் மனநிலையை என்னென்பது? பரிதாபம்! பரிதாபம்!! நாடு கிடைக்கவில்லை; உரிமையற்ற தனக்கு, உரிமையுள்ள பரதனுக்குக் கிடைக்கப்போகிறது என்ற செய்தியைக் கேட்டால் இவ்வாறெல்லாமா பேசுகிறது? இவ்வளவு இழிமகனாகிய இராமனைத் தெய்வமாக வணங்குகின்றனர். தமிழ் மக்களிலும் சிலர்!

இவனுடைய இழிசெயல்களையெல்லாம் மறைத்துத் தமிழுலகத்தை ஏமாற்றினரே பாபியாகிய கம்பர்! கம்பர் முன்னிலையிற் சுயநலமே நின்றது.

இராமனுடைய சூழ்ச்சிகளையும் மனநிலையையும் அறிந்தகைகேசி, அவனை ஒரு சிறிதும் தாமதியாமல் காட்டுக்குப் போகவேண்டுமென்று அவசரப்படுத்துகிறுள். அதனல், தான் அப்போது எண்ணிய சூழ்ச்சியும் வீண்போவது கண்டு பெரிதும் வருத்தமடைந்த இராமன் ஏக்கம் பொறுக்கமாட்டாமல் தன்னை மறந்து பேசிவிடுகிறுன். அதனல் அவன் உள்ளக்கிடை முழுதும் வெளியாகிறது. அதாவது "எங்கள் அப்பன் குதிருக்குள் இல்லை" என்பது போன்ற ஒரு பழமொழிக்குத் தகுந்த எடுத்துக்காட்டாக அப்போது இராமன் ஆகிறுன். அது இராமன் அச்சமயம் பேசிய, பேச்சு வரலாற்றில் உள்ளதெனினும் தெள்ளிதின் உலகத்தாரறியுமாறு மறுபடியும் இங்கே குறிப்போம். அப்பேச்சு வருமாறு:—"அம்மா! குடிகளை என் வசப்படுத்தி அரசாள முயல எனக்கு எண்ணமில்லை. அவ்வாறு எண்ணித் தாங்கள் வருந்தவேண்டாம். நான் தாமதித்திருந்தால் ஒருவேளை பரதன் எனக்கு அரசைக் கொடுத்துவிடுவானே என்று அஞ்சுகிறீரோ?"

மேலே கண்ட பேச்சினல் இராமன் சிந்தனை பின்வருமாறு சென்றதாகும். குடிகளை வசப்படுத்தி ஏமாற்றி அரசைப்பெற நினைத்தது வீண்போயிற்று. மேலும் குடிகள் உண்மையில் அரசுக்குரியவன் பரதனேயென்பதை உணர்வார்களேயானல், அவர்கள், பரதனை வஞ்சித்து இராமன் அரசாளச் சம்மதிப்பார்களா? ஒருநாளும் சம்மதியார்கள். மேலும் தங்களை ஏமாற்றிய தீய செய்கைக்காகவும், பரதனை வஞ்சிக்கத் துணிந்தமைக்காகவும், இராமன் மீதும் தசரதன்மீதும் அளவிலடங்காத சினங்கொண்டு தீமை செய்யவும் துணிவர். இவ்வளவு தூரம் நிகழ்ச்சிகள் விளைந்தபின் இராமன் முடிசூடுவதும் முடியாத காரியம். பரதன் முதலியோர் வருகையை அவன் அன்றே எதிர்பார்த்தமையின் அவனுக்கு வேண்டியவர்களால் எப்படியும் உண்மைவெளியாகாமற்போகாது. ஆதலின் இனி முடிசூட்டிக்கொள்ள முயலுதல் அறிவீனமெனத் துணிந்த தந்திரசாலியாகிய இராமன் பரதன் வரும்வரை தாமதிக்கத் துணிகிறுன். பரதன் வெள்ளறி

வாளனாதலினாலே எப்படியும் அரசைத் தனக்குத் தருவான்; தான் தந்திரமாக அவனை நேரில் ஏமாற்றி அரசைப் பெறுதலே அதற்கு வழி என்று முடிவாகத் தீர்மானிக்கிறான். அத்தீர்மானமும் நிறை வேறுதபடி கைகேசி மிகவும் அவசரப்படுத்திக் காடேகக் கூறியதனா லேயே, "நான் தாமதித்திருந்தால் பரதன் ஒருவேளை எனக்கு அர சைக் கொடுத்துவிடுவானோ என்று அஞ்சுகிறீரோ?" என்று வினவு கிறான். உண்மையில் இராமன் தாமதித்ததற்கும், கைகேசி அவ னைத் தாமதிக்கவிடாமல் அவசரப்படுத்தியதற்கும் அதுவே காரண மாகும். பரதனுடைய குணத்தையும் மன நிலையையும் இராமனும் அறிவான். கைகேசியும் அறிவாள்.

பரதன் வரும்வரை தாமதிக்கலாமென நினைத்த தன் முயற்சி யும் பாழாவது கண்ட இராமன், "எப்படியாவது பரதன் தன்னைக் காண வருவான், அப்போது அவனை ஏமாற்றி அரசாட்சியைப் பெற லாம்" என்ற துணிவு கொண்டிருந்ததனாலும், அப்போது காடேகா மல் நிற்பது தன் எண்ணங்களுக்கும் சூழ்ச்சிகளுக்கும் இடையூறாகு மெனத் தீர்மானமாகத் தெரிந்தமையாலும் இராமன் உடனே காடே கத் துணிகின்றான். இவ்வுண்மையை இதனைப் படிக்கும் எமது உடன்பிறப்பாளர் மறவாது மனத்திற்கொண்டிருக்குமாறு வேண்டு கிறேன். ஏனெனில் இச்சூழ்ச்சியும் எண்ணமுமே இராமன் பின்னர் செய்யப்போகும் செயல்களுக்கெல்லாம் காரணமாக முன்நிற்பதாகும்.

இனி, கம்பர் புரளியைக் காண்பாம். வால்மீகி கூறியுள்ளபடி கிழவர்கள் பிரம்பேந்தி நின்றமையையும், அவர்கள் இராமனைக் கட்டியணைத்து மடிமீதிருத்தும் செயல்களையும், அச்செயலுக்கிணங்கி யிருந்த இராமன் சீதையினுடைய காலைத் தொட்டு விடை பெற்ற மையையும் கம்பர் முற்றிலும் மறைத்தார்; இலக்குவன் இராமனைப் பாதுகாத்துப் பின்னே வந்தமையையும் பிற்பாடு இராமன் கோசலை வீட்டுக்குப் போகும்போதும் இலக்குவன் அவன் கூடவே வந்தமை யையும் கம்பர் கூறவேயில்லை.

இராமன் நேரே தசரதனிருக்குமிடத்தை யடைந்ததாக வால் மீகி கூறக் கம்பரோ, முதலில் இராமன் "மன்னனுறை கோவில் புக்கான்" பின் "சிற்றன்னை கோவில் புக்கான்" என்றும், "அண்ண லும் அயர்ந்து தேறாத் தூயவனிருந்த சூழல் துருவினன் வருதல்"

என்றும் கூறுகிறார். இது அறிவுக்குப் பொருத்தமற்ற கூற்றுமா கும். சுமந்திரன், சிற்றன்னை கோவிலில் அவளுடன் இருந்த தசரதன் அழைத்ததாகக் கூறக்கேட்ட இராமன் இவ்வாறு தேடிக்கண்டு பிடித்து வந்தான் எனல் அறிவுக்குப் பொருந்திய கூற்றாமா? அழைத் துவரப் போன சுமந்திரன் கொண்டுவந்து விடாமல் அவ்வளவில் ஒழிந்தனனோ?

அதன்பின் நிகழ்ந்தவைகளாகிய,இராமன் தசரதனையும் கைகேசி யையும் பணிந்ததையும், இராமனுடைய தந்திரப் பேச்சுக்களையும், கைகேசி அவனிடமும் வாக்குறுதி பெற்று உண்மையைக் கூறியதை யும், மூர்ச்சித்துவிழுந்த தசரதனை இராமன் தூக்கியதையும், அவன் தாமதிக்க முயன்றதையும், கைகேசி அதைத் தடுத்து அவனைக் காடேக அவசரப்படுத்தியதையும், அவன் போகும்போது பெண்கள் தசரதனை இகழ்ந்ததையும் முற்றிலும் கம்பர் மறைத்து விட்டார். இராமன் வருவதைக்கண்ட கைகேசி அவன் தசரதனைப் பார்க்காத படி தடுத்தற்காக, தானே முன்னேறி வெளிக்கட்டுக்கு வந்து அவ னைக் கண்டு பரதன் நாடாளவும் அவன் காடாளவும் தசரதன் உரைத்ததாகக் கூறியதாகவும், உடனே இராமன் அதற்கு இணங்கி,

"மன்னவன் பணியன்றாகி னும்பணி மறுப்பனோ என்
பின்னவன் பெற்றசெல்வம் அடியனேன் பெற்ற தன்றோ
என்னினி யுறுதி யிப்பால் இப்பணி தலைமேற் கொண்டேன்
மின்னொளிர் கானமின்றே போகின்றேன் விடையுங் கொண்
[டேன்"

எனக்கூறி அவளடி பணிந்து போற்றி தன் தந்தையின் அடி களைத் திசைநோக்கிக் கும்பிட்டுச் சென்று கோசலை அரண்மனையை யடைந்தான் எனவும் கம்பர் கூறுகிறார். இவ்வாறு வால்மீகி கூறும் உண்மையான வரலாற்றை மறைத்து மேலேகண்டபடி கம்பர் பொய் கூறியது தசரதனையும், இராமனையும் மிக நல்லவர்களாகக் காட்டவும் அவர்களுடைய இழிவான செயல்களையும் குணத்தையும் மறைக்க வுமே. தசரதனும் இராமனும் ஒருவரை யொருவர் பார்க்காதபடியே, கூசாமல் பொய்க்கதை கூறிப்போகிறார். இவர் தம் துணிவு என்னே? உண்மையை உணரும் உலகம் இப்பொய்மையாளரும் வஞ்சகருமாகிய கம்பரை இகழாது என் செய்யும்? அதனை உணர்ந்த கம்பரும் "வைய

மென்னையிகழவும்" என்று முதலிலேயே கூறுவதாக இவ்வாராய்ச்சித் தொடர்ச்சியிலேயே எடுத்துக் காட்டினேம். இனத்துரோகிகளாகிய தசரதனும் இராமனும் போலவே இக்கம்பரும் இனத்துரோகம் செய்தார். தம்முடைய இனமாகிய தமிழ்மக்களை உண்மையை உணர விடாதபடி பொய்க்கதை கூறி ஏமாற்றி, தமிழ் மக்களுக்கு நேர் விரோதியான இராமனைத் தமது தெய்வம் போலும் எண்ணச் செய்து விட்டாரே. ஆரியனாகிய இராமன் தமிழ் மக்களுக்கு நேர் விரோதி யென்னும் உண்மைகள் மிகத் தெளிவாக வரவர விளங்கும்.

---

## எட்டாம் அத்தியாயம்.

---



திருமாலை வழிபட்டிருந்த கோசலைபலநாளாகக்காணாத இராமனை எதிர் கொண்டழைத்து "வாக்குத்தவராத வராகிய உன் தந்தை உனக்கு இன்று முடிசூட்டுவார். நீ இங்கேயே உண்ணவேண்டும்" என்று ஓர் இருக்கையில் அவனை உட்காரச்சொன்னாள். இராமன் அதில் இருக்காமல் வெட்கத்துடன் "அம்மா! உனக்கும், சீதைக்கும், இலக்குமணனுக்கும் துக்கத்தைக் கொடுக்கும் ஒரு பெரிய பயம் நேர்ந்திருக்கிறது. தந்தை என் முடிசூட்டை நிறுத்தி விட்டார். பரதனே இளவரசாகப் போகிறான். நான் பதினான்காண்டுகள் காட்டில் வாழக்கட்டளை யிட்டிருக்கிறார். இதோ புறப்படப் போகிறேன். மாமிசத்தை விலக்கி காய் கனிகளைத்தின்று காட்டில் வாழப்போகிறேன். ஆதலின் இந்த இரத்தின ஆதனம் எனக்கு இப்பொழுது தகாது" என்று கூறினான். அதைக்கேட்ட கோசலை உணர்ச்சியற்றுக் கீழே வீழ்ந்தாள். இராமன் அவளைத்தூக்கினான். அவள் உணர்ச்சிவந்து இலக்குவன் கேட்டுக்கொண்டிருக்க "இராமா எனக்கு ஒருவரும்படாத துக்கம் ஏற்பட்டிருக்கிறது. நான் அரசனுடைய முதல் மனைவி, இருந்தாலும் எனக்கு அதற்குரிய செல்வம், நகை, அதிகாரம் ஒன்றும் கிடையாது. மன்னனும் என்னை வெறுக்கிறான். உன்மேலுள்ள அன்பால் அவன் என்னையும் நேசிப்பான்,

அதனால் அதிகாரம் பெறலாம் என்ற ஆசையாலேயே இதுவரை உயிர் வைத்திருந்தேன். இனி இதைவிடத் துக்கத்தை அடையவேண்டி யிருக்குமே. இபற்சையாக நான் அனுபவிக்க வேண்டிய சுகம் எனக் கில்லை. என் சக்களத்திகள் இனி என்மேல் பிரியத்தைக் குறைக்கக் கூடிய வார்த்தைகளை மன்னனிடம் தெளிவாகக் கூறுவார்கள். 'என் னுடைய கணவனுக்கெதிரே நிற்காதேபோ' என்பார்கள். மன்னன் என்வீட்டிலிருக்கும்போது 'இங்கே உனக்கென்னவேலை. என் அந் தப்புரம்போவோம் வா' என்று பலாத்காரமாக அவரைக் கையைப் பிடித்து இழுப்பார்கள், பெண்களுக்கு இதை விடத் துன்பம் உண்டோ? என் துக்கத்துக்கும் அழுகைக்கும் எல்லை யில்லை. நீயும் காட்டுக்குப் போய்விட்டால் நான் என்ன செய்வேன்? நீ பிறந்த பதி னேழு ஆண்டுகளாய் துன்பங்களை யெல்லாம் பொறுத்திருந்தேன். இனிமேல் எல்லோரும் என்னை அவமதிப்பார்களே. எனக்கோ வய தும், பலமும், அழகும்போய்விட்டன. இனி மன்னர் என்னை விரும் பக்காரணமில்லை. என் எண்ணமெல்லாம் வீணாயினவே. உன்னை யும் பிரிந்து அவமானப்பட்டு உயிரோடிரேன்'' என்று வாய்விட்டு அழுதாள்.

அதைக்கேட்ட இலக்குவன் "ஓர் பெண்ணிடத்தில் காம பரவ சனுபிருக்கும் விபரீத புத்தியுடைய விவேகமற்ற மன்னனுடைய பேச்சைக் கேட்டு, தனக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய நாட்டை விட்டுப்போதல் எனக்கும் தகுந்ததாகத் தோன்றவில்லை. காமப்பித் தேறி யிருக்கும் மன்னனுடைய சொல்லை அரச நீதி தெரிந்த எந்த மகனாவது கவனிப்பான்? ஆதலால் அண்ணா! உடனேவில்லை யெடுத்து இந்த நாட்டைக் கைப்பற்றும். பரதனுக்கு வேண்டியவர்களை யெல் லாம் நாசஞ்செய்து விடுகிறேன். நமது தந்தை கைகேசியால் தூண் டப்பட்டு நமது பகைவர்களுக்கு உதவி செய்தால், அந்தத் தீயவனை ஏன்சிறையில் வைக்கக்கூடாது? ஏன்கொல்லக்கூடாது? இதுவே மநு நீதியும். உம்மையும் என்னையும் பகைத்துக்கொண்டு இவரால் இந்த அரசைப்பரதனுக்குக் கொடுக்கமுடியுமா? தாங்கள் படும் துன்பத்தை என்வீரியத்தால் அழிக்கிறேன்''என்றான். உடனேகோசலை"இராமா, தம்பி சொன்னது காதில் விழுந்ததா? தந்தை கட்டளையை விடத் தாயின் சொல்லே மிகவும் மேலானது. ஆதலின் நீ காட்டுக்குப்போவ தில் எனக்கு விருப்பமில்லை. நீ என் கட்டளையை மீறிக்காட்டுக்குப்

போனுல் நான் உயிரைவிட்டு விடுவேன். முன்காலத்தில் சமுத்திர மன்னன் தன் தாய்க்குத் துக்கத்தை உண்டுபண்ணின பாபத்தால் பிராமணனைக் கொன்றவர்கள் அடையும் நரகத்தை அடைந்தான். நீயும் இந்த லோகத்தில் என்றும் அழியாத துக்கத்தை அடைவாய்' என்ருள்.

இராமன் "அம்மா! தந்தை கட்டளை முந்தியது. ஆதலின் அதையே நான் முதலில் நிறைவேற்ற வேண்டும். முன் தந்தை சொல்லைக்கேட்டுக் கண்டு முனிவர் பசுவைக்கொன்ருர். பரசுராமர் தாயையே கொன்ருர். ஆதலின் தந்தைசொல்லே சிறந்தது" என்ருன். பின் இராமன் "தம்பி! இலக்குவா! தந்தையின் கட்டளையை நிறைவேற்றுவதே கடமை. ஆதலின் நமது தகப்பனுயிருந்தாலும் அவரைக்கொன்று நாடாளுவோம் என்ற கேவலபுத்தியைவிட்டுவிடு" என்று தம்பியிடம் கூறி பின் தாயைப் பார்த்து "பதினன்கு ஆண்டுகள் காட்டிற் போயிருந்து பின் உமது அருகேயிருந்து பணிவிடை செய்வேன். ஆணையிட்டுச் சொல்லுகிறேன், எனக்கு விடை தர வேண்டும்" என்ருன். மறுபடியும் கோசலை "நான் உத்தரவு தர மாட்டேன். உன்னைப் பிரியேன்" என்ருள். அதனுல் இராமனுக்குக் கோபம் உண்டாயிற்று. அவன் "தம்பி! நமது தந்தை நமக்குப் பெரியார், அரசர். அவர் சொல்லைத் தட்டக்கூடாது. அவர் இருக்கும்போது என் தாய் கணவனை இழந்தவளைப்போல என்கூட வரலாமா! அம்மா! எனக்கு விடைதாரும்" என்ருன். பின் அவன் "தம்பி! நான் காட்டுக்குப்போகத் தீர்மானித்து விட்டேன். என்னுடைய எண்ணத்தை மாற்ற முடியாது. எல்லாம் தெய்வச் செயல் என் கையிற் கிடைத்த அரசாட்சி தவறிப்போனதும் என்னிடத்தில் அளவிலா அன்பு வைத்திருந்த கைகேசி மனம் மாறினதும் தெய்வச் செயலே அதை எதிர்க்க யாராலும் முடியாது. நமக்கு நாடு கிடைக்காமைக்காக வருந்தாதே" என்று புகன்ருன்.

இலக்குவன் மிகச்சினத்தோடு 'அண்ணு! வீரமற்றவர்களும், பித்தேறியவர்களும் பேசுமாறு விதியின் பெருமையைப் பேசினீர். தங்களுக்குக்கேடு சூழ்ந்த அந்தப் பாபிகளான கைகேசி தசரதர்களின் சூழ்ச்சி உமக்குத் தெரியவில்லையா? மூத்தமகனுகிய உமக்குக் கிடைக்கவேண்டிய அரசாட்சியைப் பரதனுக்குத்தர அவர்கள்செய்த

சூழ்ச்சி இது. 'நான் இராமனுக்கு முடிசூட்ட ஆரம்பிக்கிறேன், அப்போது நீ தடுத்துவிடு' என்று தசரதன் கூறிய சூழ்ச்சியே இது. தங்களுக்குச் சித்தப் பிரமையே தவிர வேறில்லை. காமத்துக்கு அடிமையாகிய அவர்கள் வார்த்தைக்கு யார் தான் கட்டுப்படுவர்? விதியை நமது முயற்சியால் வெல்லலாம். தேவரேயாயினும் யாவரே யாயினும் தங்களுடைய முடி சூட்டைத் தடுக்க முடியாது. கைகேசி தசரதர்களையே காட்டுக்குத் தூரத்துகிறேன். நமது தந்தை நிலை யான மனமுடையவரல்லர். அரசாட்சி அடிக்கடி மாறுமென்று தங் களுக்குச் சந்தேகமுண்டாகி தங்களுக்கு அரசாட்சி வேண்டாமென் ருல் நானே அரசாட்சியை ஏற்றுக்கொண்டு நாட்டைக் காப்பாற்று வேன். ஆதலின் இப்போதே முடிசூட்டிக் கொள்வதில் மனதைச் செலுத்தும். எனது திறமையை இன்றே காண்பீர்; நமது தந்தை யின் அதிகாரத்தை அவரிடத்திலிருந்து பிடுங்கித் தங்களுக்குக் கொடுக்கப் போகிறேன். தடை செய்வோன் இந்திரனேயாயினும் கொல்வேன்" என்ருன். இராமனே "தம்பி! பொறுமையாயிரு. பெற்ருேர்கள் சொல்லைத் தட்டக் கூடாது. நான் எப்படியாலுைம் காட்டுக்குப் போகிறேன்" என்று கூறினன்.

கோசலை "அப்படியானல் நானும் உன் கூட வருவேன்" என் ருள். இராமன் "கணவனுக்குப் பணிவிடை செய்வதை விட்டு என் னுடன் வருதல் கூடாது" என்ருன். கோசலை அவனைக்காட்டுக் கனுப்பவும் தான் அயோத்தியிலிருக்கவும் இணங்கினள். தன் சக் களத்திகளின் கொடுமையை நினைத்து மறுபடியும் தன்னை அவ னுடன் அழைத்துப் போகவேண்டுமென்ருள். அப்போது இராமன் அழுதுகொண்டு "சக்களத்திகள் தங்களுக்கு கேடு செய்ய நியாய மில்லை. பரதனும் நல்லவன். தந்தையோ கிழவர். என்னைப் பிரிந்த தால் ஏற்படும் துக்கத்தால் அவர் இறக்காமல் தாங்கள் பாதுகாக்க வேண்டும். அவருக்கும் பணிவிடை செய்துகொண்டு நான் திரும்பி வரும் காலத்தை எதிர்பார்த்திரும்" என்று சொன்னன். கோசலை அவனை வழி அனுப்புவதற்குச் செய்ய வேண்டிய ஓமங்களைச் செய் யத் தொடங்கினள். தேவதைகளை வேண்டினள். பின் ஓர் பிராமண னல் ஓமம் வளர்த்து, வேண்டிய அளவு காணிக்கைப் பொருள் கொடுத்தாள். பின் இராமனை வாழ்த்தி வழியனுப்பினள்.

இராமன் சீதையிருக்குமிடம் வந்தான். அங்கே தன் பரிவாரங்கள் தன்னுடைய முடி சூட்டுக்காகச் செய்து கொண்டிருந்த அலங்காரங்களையும் அவர்கள் மகிழ்ச்சியையும் பார்த்து வெட்கத்தால் சற்றுத் தலைகுனிந்தான். தன் கணவன் துக்கத்தால் வாடின முகத்துடன் கவலையால் இந்திரிய சுவாதீனமின்றி வருவதைக்கண்டு சீதை இருக்கையிலிருந்து திடீரென்று எழுந்து, 'நமது கணவன் எப்பொழுதும் போலில்லாமல் கவலையோடு தலைகுனிந்து ஏன் வருகிறார்' என்று நினைத்து நடுங்கினாள். இராமனுக்கு இதுவரையில் வருத்தமென்பதேகிடையாது. அடக்கமுடியாத கவலையோடும் அவன் தன் மனோ தைர்யத்தை இழந்து தான் பிரிந்தால் சீதை என்ன பாடுபடுவாளோ என ஏக்கம் மேலிட்டான். முகத்தில் ஒளி குறைந்தது. 'கையில் கிடைத்த அரசாட்சியை யிழந்தேன். நானும் காட்டுக்குப் போகவேண்டியதாயிற்று' என்று எப்படிச் சொல்வது என்றசோகத்தால் உடம்பு வியர்த்தது. தன் மனதிலுள்ள கவலையை அவன் அடக்க முடியாததைக்கண்டு சீதை "முடி சூட்டானதற்கு அடையாளமான குடை, சாமரை, தேர்முதலியன ஒன்றுமின்றி கவலைகொள்ளக்காரணமென்ன" என்று புலம்பினாள். இராமன் அவளுக்கு நடந்ததைச் சொல்லி "நான் பதினான்காண்டு காட்டில் வாழப்போகிறேன். நீ பரதனிடம் என்னைப் புகழாமல் அவன் மனப்படி நடந்துகொள்ளவேண்டும். அரசர்களுடைய மனப்படி நாம் நடந்துக்கொண்டால் அவர்கள் நம்மேல் தயவு வைப்பார்கள்" என்று கூறினான்.

சீதை கோபங்கொண்டு "இராமா! இவ்வளவு அற்பமான வார்த்தைகள் உமது வாயிலிருந்து வந்ததேன்? தாங்கள் என்னை அழைத்துக்கொண்டுபோனால் தங்களுக்கு சுகமேயொழிய துக்கமில்லை; பாலைவனத்தில் பிரயாணம் செய்கிறவர்கள் தங்களுக்கு வேண்டிய தண்ணீரைக் குடித்துவிட்டு மிகுந்ததைக் கொட்டமாட்டார்கள். பிறகு வேண்டியிருக்குமென்று கொண்டுபோவார்கள். அப்படிச் செய்வதால் அவர்களுக்கு சுகமே. அப்படியே என்னையும் அழைத்துக் கொண்டு போகவேண்டும். இல்லையேல் உயிரை விடுவேன். மனைவி கணவனுடைய உடலில் பாதியல்லவா?" என்றாள். இராமன் காட்டிலே சிங்கம் முதலிய மிருகங்களால் உண்டாகும் பலவித துன்பங்களை எடுத்துக் கூறினான். சீதை "எத்தனை ஆயிரமாண்டுகள் காட்டில் நான் தங்களுடன் வாழ்ந்தாலும் எனக்குக் காலம் போவதே தெரி

யாது. நான் தங்களுடனிருக்கையில் இந்திரனுனும் என்னைக் கண்ணெடுத்துப் பார்க்கத் துணிவானு? சோதிடர்களும் உறுப்பு நூல் வல்லாரும் எனக்கு காட்டில் வாழும் காலம் ஏற்படுமென்று சொல்லியிருக்கிறுர்கள். அக்காலம் இப்பொழுது வந்திருக்கிறது. அது பூர்வகர்மத்தின் பலனே. பூர்வ கர்ம பலனை அனுபவிக்காமல் முடியுமா? ஆனுல் தங்களுடன் காட்டிற்குப் போவேனே யொழிய நான் மாத்திரம் போகமாட்டேன். பெண்களுக்குக் கணவனே தெய்வம் என் நடத்தையில் இது வரையில் தங்களுக்கு ஏதேனும் குற்றம் தோன்றிற்ரு? தங்களை விட்டுப் பிரியவேண்டுமென்ற எண்ணத்தாலேயே இவ்வளவு வருத்தப்படும் என்னை அழைத்துப்போகாமலிருந்தாய் நஞ்சைக் குடிப்பேன், நெருப்பில் விழுவேன், நீரில் குதிப்பேன் எப்படியாவது உயிரைப்போக்கிக் கொள்வேன்'' என்று வேண்டினுள். அவள் எவ்வளவு சொன்னுலும் இராமன் இணங்கவில்லை.

சீதைக்குக் கோபம் வந்துவிட்டது. அவள் "நீரோ உமது தேகத்தின் அழகாலேயே பிறரை மோகிக்கச் செய்கிறீர். அதைத் தவிர உம்மிடத்தில் வேறு யோக்கியதை இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஒருத்தியைக் காப்பாற்றச் சக்தியில்லாமல் என்னை இங்கேவிட்டுப் போகிறீரென்ற சொல் என்னுடைய தந்தை காதில் விழுந்தால் "ஐயோ, மோசம் போனேனே. அப்பொழுதே தெரியாமல் போயிற்றே. இவனை உண்மையாக ஆணென்று எண்ணி என் பெண்ணை இவனுக்கு மணம் செய்து கொடுத்தேனே. இப்பொழுதல்லவா உண்மை வெளியாயிற்று. அவன்பார்வைக்கு ஆணேயொழிய உண்மையாகப் பெண்பிள்ளையே'' யென்று எண்ணமாட்டாரா? தெரிந்திருந்தால் என்னை உமக்கு ஒரு நாளும் மணம் செய்து கொடுத்திருக்கமாட்டாரே. உலகத்தார் 'ராமனிடம் ஆண்மைவிளங்குகின்றது' என்பது முழுப்பொய். அறியாத்தனத்தால் அப்படிச் சொல்வதேயொழிய உம்மிடத்தில் யாதொரு அபூர்வமான சக்தியும் விளங்குவதை நான் காணேன். அதுமாத்திரமல்ல. சாமானியமனிதனிடத்தில் உள்ள சக்திகூட உம்மிடத்தில் கிடையாது. என்னைத் தாங்கள் விட்டுப்போக நினைப்பதைப் பார்த்தால் இவளைக் கூட்டிக் கொண்டுபோனுல் யாராவது நம்மை உபத்திரவிப்பார்களென்று யாரைக்கண்டோ பயப்படுகிறதைப் போலிருக்கிறது. எனக்குத் தங்களைத்தவிர வேறுகதி யில்லையென்று நான் எத்தனை முறை பிர

மானஞ் செய்தாலும் என்னிடத்தில் நம்பிக்கையில்லாமல் பரதனிடத்தில் இப்படிப்பேசவேண்டும், இப்படி நடக்கவேண்டும், என்று போதிப்பதைப் பார்த்தால் தனது மனைவியைப் பிறரிடத்தில் ஒப்புவித்து அதனால் பிழைக்கிறவனைப்போல தாங்கள் என்னை பரதனிடத்தில் தானம் செய்ய நினைத்திருப்பதைப் போலிருக்கிறது. தாங்கள் என்னை எவருக்குக் கட்டுப்படுத்தப் பார்க்கிறீர்களோ அவருக்குத்தாங்களே வேண்டியவராக நடந்துகொள்ளுங்கள். தாங்களே பரிசாரகனாக இருங்கள். நான் அப்படியிருக்கவேண்டிய அவசியமில்லை. தங்களுடனிருப்பதே சுவர்க்கம் தங்களைப்பிரிவதே நரகம். என்னை வெறுக்கும் பரதன் முதலியவர் வசத்தில் இருப்பதைவிட உயிர்விடுவேன் இப்பொழுதே பாரும்" என்று கதறினாள். அதைப் பார்த்த இராமன் அவளைத் தழுவி "உன் உண்மையான எண்ணம் தெரியாததால் உன்னை அழைத்துப்போகச் சம்மதிக்கவில்லை. கவலைப்படாதே, அழைத்துப்போகிறேன். நீ என்னுடன் வனத்தில் வசிக்கவேண்டுமென்று முன்னமே கடவுளால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. உன் நகைகளையும் பொருள்களையும் பிராமணர்களுக்குக் கொடு. பிறகு அவர்களுடைய உத்தரவால் வேலைக்காரர்களுக்கும் கொடு" என்றான். சீதை மகிழ்ந்து அவ்வாறே செய்தாள்.

சீதைக்கும் ராமனுக்கும் நடந்த பேச்சைக் கூட இருந்துகேட்ட இலக்குவன் சீதையை அழைத்துப்போகவே இவ்வளவு சிரமத்துடன் இசைந்தானே என்று வருந்தி தானும் உடன்வருவதாகக் கூறினான். இராமன் "நீயும் வந்தால் கோசலையையும் சுமத்திரையையும் காப்பது யார்? அரசரோ மன்மத பாசங்களால் கட்டுப்பட்டு பிறருடைய மனப்படி நடக்கிறார். கைகேசியோ நன்மைசெய்யவே மாட்டாள். பரதனோ அவளுக்கு உட்பட்டவன். அதனால் அவள் தன் சக்களத்திகளைத் துன்புறுத்துவதைத் தடுக்கவேமாட்டான். நீ இருந்தால் உன் வல்லமையால் கோசலையைப் பாதுகாப்பாய். பெரியோர்களைப் பேணுவதே கடமை" என்றான். இலக்குவன் "பரதன் நமக்குப் பயந்தாவது சரியாக நடந்துகொள்வான். கோசலையோ மிகவும் பொருளுடையவள். அவள் தன்னைச் சேர்ந்தவர்களுக்கு அநேக மாயிரம் ஊர்களைக் கொடுத்திருப்பதை நாம் பார்த்ததில்லையா? ஆதலின் நானும் உடன்வருவேன்" என்றான், இராமனும் இசைந்து "சரி,

தம்பி! நிலையில் நம்மிருவருக்கும் வருணனால் நேரில் கொடுக்கப் பட்ட இரண்டு விற்களையும், அம்பறை, கவசம், கத்திகளையும் வசிட் டருடைய வீட்டிலிருந்து எடுத்துவா; நீயும் புறப்படத் தயாராயிரு" என்றான். இலக்குவன் அவைகளை எடுத்துவந்தான். பின் அவன் இராமனது ஆணையால் வசிட்டருடைய மகனை சுயக்ஞனையும், அகத் தியருடைய மகனையும், விசுவாமித்திரன் மகனையும், ஏனைய பிரா மணர்களையும் அழைத்துவந்து அவர்களெல்லோருக்கும் வேண்டும் பொருளை யெல்லாம் தந்தான். சுயக்ஞன் இராமன் அணிந்த நகைகளை யும் படுத்த கட்டிலையும் வாங்கிக்கொண்டு சீதையின் அணிகளைத் தன் மனைவிக்கு வாங்கிப்போனான். திரிசடன் என்ற ஏழைப் பார்ப் பனனுக்கு வேண்டும் பொருள் கொடுத்து "பிராமணர்களுடைய உபயோகத்திற்காகவே என் பொருள் முழுவதையும் சேகரித்திருக் கிறேன்" என்று கூறினான். பின் இராமன், இலக்குவன், சீதை ஆகிய மூவரும் அரசனிடத்தில் விடை பெறச் சென்றார்கள். இவ் வரலாற்றை ஆராய்வோம்.

இராமன் வெட்கத்துடன் "கோசலைக்கும் சீதைக்கும் இலக்குவ னுக்கும் துக்கத்தைக் கொடுக்கக்கூடிய ஒரு பெரிய பயம் நேர்ந்திருக் கிறது" என்கிறான். இதனால் தனக்கு நேர்ந்த கதியை நினைத்து அவன்மிகுந்த கவலையடைந்தவனாகிறான். இருந்தாலும் அவன் உலக இயற்கையை நன்கறிந்தவனாதலாலும் எப்படியாவது தன்னைப்பார்க்க வரும் பரதனை ஏமாற்றி நாட்டைப் பெறலாமென்ற தீர்மானத்தை உடையவனானதாலும் ஒருவாறு கவலையை அடக்கிக்கொள்ளுகிறான்.

"மாமிசத்தை விலக்கிக் காய் கனிகளைத் தின்பேன்" என்று இரா மன் கூறுவதால் அவன் புலாலுண்பவனேயாகும். இதையே மொழி பெயர்ப் பாசிரியராகிய சினிவாச ஐயங்காரும் அயோத்தியாகாண்டம் இரண்டாம் பதிப்பு 88ம் பக்கத்தில் "இராம லக்ஷ்மணர்கள் மாமிசத் தைப் புசித்ததாகச் சில விடங்களில் சொல்லப்படுகிறது" என்று எழுதியிருக்கிறார். இவ்விதமாகப் புலாலுண்டு சாதாரணமாகத் திரிந்த ஆரியனாகிய இராமனைத் தமது தெய்வமெனக் கருதி வழிபடுகின்ற னரே தமிழ் மக்களிற் சிலரும்! இனியாவது அவர்கள் உண்மையை யுணர்ந்து நல்வழிப்படுவார்களாக.

"நான் அரசனுடைய முதல் மனைவியாக இருந்தாலும் அதற் குரிய செல்வம் நகை என்னிடம் இல்லையென்று" கோசலை கூறுகிற

தாக வால்மீகி எழுதுகிறார். அவரே பின் கோசலையோ மிகவும் பொருளுடையவள். அவள் தன்னைச் சேர்ந்தவர்களுக்கு அநேக மாயிரம் ஊர்களைக் கொடுத்திருப்பதை நாம் பார்த்ததில்லையா' என்று இலக்குவன் இராமனிடம் கூறியதாக எழுதுகிறார். இவ்விரண்டும் தம்முள் முரண்படுகின்றமை காண்க. வால்மீகி இவ்வாறு முன்னுக்குப்பின் முரணானவற்றை எழுதுவதோடு முன் நடக்காத செய்திகளையும் நடந்ததாக பின்னால் எழுதுகிறார். இதற்கு உதாரணம், இராமன் இலக்குவனைத் தன்னுடன் அழைத்துப்போக இசைந்தவுடன் அவனை நோக்கி மிதிலையில் வருணன் தங்களுக்கு நேரில் கொடுத்த இரண்டு வில் முதலிய பொருள்களை வசிட்டர் வீட்டிலிருந்து எடுத்து வரச் சொல்லுவதே. இது முழுப்பொய்யான செய்தி. வருணன் இவர்களிடம் ஒன்றும் கொடுக்கவேயில்லை, இதைப்பற்றியே தமது குறிப்பாக நமது திரு. சீனிவாச ஐயங்காரும் அயோத்தியாகாண்டம் பக்கம் 138-ல் 'இப்படி வருணன் ஆயுதங்களைக் கொடுத்தாரென்று பால காண்டத்தில் சொல்லப்படவில்லை. பக்கம் 77-ல் பரசுராமர் போனபிறகு தன் கையிலிருந்த விஷ்ணுவின் வில்லையும் பாணத்தையும் மற்றவர்களால் பார்க்கப்படாமல் நின்ற வருணனிடத்தில் இராமன் கொடுத்தானென்று மாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது' என்று எழுதியிருக்கின்றனர். இதனால் வால்மீகி முனிவருடைய ஞாபகசக்தி புலனாகிறது. மேலும் அவரது கவித்திறம் இத்தன்மையதென விளங்குகிறது. இதனை அறிஞர் சிந்திப்பாராக.

கோசலை தன் மகன் காட்டுக்குப் போகிறானென்று கவலைப்படவேயில்லை. அவன் காட்டுக்குப் போவதால் பல கேடுகள் தனக்கு விளையுமே என்றே ஏங்குகிறாள். தான் கிழப்பருவமடைந்து விட்டதால் தசரதன் தன்னை விரும்பிக்கூடான், அப்படியே கூட வந்தாலும் தன்னுடைய சக்களத்திகள் அவனை வந்து கைப்பிடித்து இழுத்துக் கொண்டு போய்விடுவார்கள். இவ்வாறு கைக்கெட்டியதும் வாய்க் கெட்டாது போகுமே, பெண்களுக்கு இதைவிட துன்பம் உண்டோ என்பதை எண்ணியே தவிக்கிறாள். இராமன் போய்விட்டால் சக்களத்திகள் செய்யும் கொடுமை அதிகமாகுமென்றே அவள் இராமனைத் தடை செய்ய முயல்கிறாள். அதற்காக அவள் 'நீ என்னை விட்டுப் பிரிவாயேல் இந்த உலகத்தில் என்றும் அழியாத துக்கத்தை அடைவாய்' என்று கூடச் சபிக்கிறாள். இலக்குவன் தசரதனைச் சிறையில்

வைத்தோ அல்லது கொன்றோ அரசைக் கவரவேண்டுமென்று கூற, கோசலை இராமனை அவன் சொல்லுக்கு இணங்கச் சொல்லுகிறாள். இதனால் தசரதனாகிய தன் கணவன் செத்தாலும் சரி, தனக்கு அதிகாரம் வந்தால்போதும் என்ற மிகவும் இழிவான அற்பகுணமுடையவளாகக் காணப்படுகிறாள் கோசலை.

இலக்குவனுடைய பேச்சிலிருந்து அவனுக்கு தசரதன் கைகேசியைத் திருமணஞ் செய்யும்போது செய்து கொடுத்த வாக்குறுதி தெரியாதென்றே தோன்றுகிறது. தந்தையைக் கொன்றேனும் அரசைக் கைப்பற்ற வேண்டுமென்பதே அவனுடைய கேவலமான எண்ணமாக இருக்கிறது. இவனைப்போலும் பிள்ளைகள் வேண்டுவது அவசியமே! இராமனும் கூட அவனை நோக்கி நமது தகப்பனாராயிருந்தாலும் அவரைக் கொன்று நாடாளுவோமென்ற கேவல புத்தியை விட்டு விடு என்று கூறுகிறான். இலக்குவன் இவ்வளவோடு நின்றதாகத் தெரியவில்லை. இலக்குவனுடைய பேராசை அதன்மேலும் அளவுகடந்துசெல்லுகிறது. அவன் 'அண்ணா, தசரதனையும் கைகேசியையும் காட்டுக்கனுப்பி உமக்கு அரசைத் தருகிறேன். அரசாட்சி அடிக்கடி மாறுமென்று தங்களுக்குச் சந்தேகமுண்டாகி தங்களுக்கு அரசாட்சி வேண்டாமென்றால், நானே அரசாட்சியை ஏற்றுக்கொண்டு நாட்டைக் காப்பாற்றுவேன்' என்று கூறுகிறான். இதனால் அவன் உள்ளக்கிடை இதுவென விளங்குகிறது.

இராமன் தனக்கு அரசாட்சி கிடைக்கவில்லையென்ற கவலையாலோ அல்லது உள்ளபடி உலகத்திலுள்ள வெறுப்பாலோ அரசாட்சி வேண்டாமென்றால் தானாவது அதைக் கைப்பற்றிக் கொள்ளலாம் என்ற கெட்ட எண்ணம் இலக்குவனிடமிருந்ததாகத்தெரிகிறது. இதனால் அவன்தான் இராமனை அணுகியிருந்து எப்படியாவது ஒரு காலத்தில் தானே அரசனாக வரலாம் என்ற பேராசையுடையவனாக இருந்தானென்பது புலனாகிறது. தந்திரசாலியாகிய இராமன் இலக்குவனை இவ்வளவு தூரம் வசப்படுத்தி வைத்திருக்கிறான். அயோத்தியாகாண்டம் சருக்கம் நாலில் பின்வரும் செய்தி காணப்படுகிறது. முடிசூட்டுத் தீர்மானத்தைத் தன் தாயிடம் கூற வந்த இராமன் தன் பக்கத்தில் நின்று கொண்டிருந்த இலக்குவனை நோக்கி 'என் இரண்டாவது பிராணனாகிய உனக்காகவே இந்த ராஜ்யலட்சுமி எனக்குக் கிடைத்திருக்கிறது. ஆகையால் இராஜ்ய பரிபாலனம் செய்வது உன்

வேலே. சுமித்திரையின் புத்ர! தாயின் உத்திரவுப்படி இஷ்டமான போகங்களையும் விலையற்ற ரத்னுபரணங்கள் வஸ்திரங்கள் முதலியவைகளையும் அனுபவிக்கலாம். இந்த இராஜ்பமும் நான் பிழைத்திருப்பதும் எல்லாம் உனக்கேயன்றி வேறில்லை' என்று கூறினதாகக் காணப்படும் செய்தி இங்கே சிந்திக்கத்தக்கது.

இதைப்பற்றி நாம் அயோத்தியா காண்டம் முதற் கட்டுரையிலே ஆராய்ந்துள்ளோம். இவ்விதமாக இராமன் அடிக்கடி இலக்குவனிடம் தனக்கு அரசாட்சியில் உண்மையில் பற்றில்லாததுபோல் பலதடவை பாசாங்கு செய்திருக்கிருன். அதனுலேயே இலக்குவன் உமக்கு நிலையில்லாத அரசாட்சியில் பற்றில்லையானுல் நானே அரசாளுவேன் என்று கூறத்துணிகிருன். இராமன் இதைப்போலவே கைகேசியிடமும் கூறினதை முன் கட்டுரையில் கண்டோம்.

இராமன் மகாதந்திரசாலி. பின் வருவதையெல்லாம் நன்ருக முன்னுலேயே தேர்ந்தறியும் நுண்ணிய அறிவுத் திறமுடையவன். அவன் தன் தந்தை மனப்படி செய்த சூழ்ச்சி பலிக்காது போகவே எப்படியாவது பரதனிடமிருந்து தந்திரமாக அரசைக் கைப்பற்ற வேண்டுமென்ற எண்ணமே அவனுக்கு மேலிடுகிறது. அதனுல் அவன் அப்போது போரிட்டாலோ வேறு சூழ்ச்சி செய்தாலோ தனக்கு அரசு கிடைக்காதென நன்கறிவான். ஏனெனில் பரதன் வந்துவிட்டானேயானுல் அவனே அரசாட்சிக்குரியவன் என்பது யாவருக்கும் தெரிந்துவிடும். அந்த மும்முரத்தில் பரதன் அரசாட்சியைத் தனக்குக் கொடுக்கத் துணிந்தாலும் கைகேசி முதலியோர் அதற்கு இடங்கொடார். ஆதலின் தான் விரைவில் காட்டுக்குப் போய்விட வேண்டும். அப்படியானுல் தன்னைப்பார்க்கக் கட்டாயம் பரதன் வருவான்; அவனிடத்தில் தந்திரமாக அரசைக் கவரலாம் என்று துணிந்தவனுதலாலேயே கோசலையோ இலக்குவனே கூறிய பேச்சுக்கும் வேண்டுதலுக்கும் அவன் செவி சாய்க்காதும் இணங்காதும் கட்டாயம் காட்டுக்கே போவேன் எனக் கூறுகிருன். இருந்தாலும் அவன் மனிதனேயாதலின் அப்போது அவனடைந்த அவமானத்தால் மிகவும் துக்கமும்வெட்கமும் தன்னையறியாமலே அவனைப் பற்றிக்கொள்கின்றன. அதனுல் அவன் கோசலை தன்னை ஓர் ஆசனத்திலிருக்கச் சொன்னபோது வெட்கமடைகிருன். மேலும் தன் அரண்மனையில் தன் பரிவாரங்கள் தன்னுடைய முடிசூட்டுக்காகச் செய்துகொண்டிருந்த

அலங்காரங்களையும் அவர்கள் மகிழ்ச்சியையும் பார்த்து வெட்கத்தால் சற்றுத் தலைகுனிகிறான். அவன் துக்கத்தால் வாடின முகத்துடனும் கவலையால் இந்திரிய சுவாதீனமின்றித் தலைகுனிந்து வருவதை சீதை கண்டு நெஞ்சம் துணுக்குறுகிறாள்.

"என் கையிற் கிடைத்த அரசாட்சி தவறிப்போனதும் என்னிடத்தில் அளவில்லா அன்பு வைத்திருந்த கைகேசி மனம் மாறினதும் தெய்வச்செயலே" எனக் கூறுகிறான் இராமன். இவ்வாறு தெய்வச்செயலை நினைந்து வருந்தும் இராமனைத் தெய்வமாக நினைக்கின்றனரே சில மக்கள். பரிதாபம்! பரிதாபம்! இலக்குவன் "வீரமற்றவர்களும் பித்தேறியவர்களும் பேசுமாறு விதியின் பெருமையைப் பேசினீர். தங்களுக்கு சித்தப்பிரமையே தவிர வேறில்லை" எனக்கூறியதையும் இராமன் முயற்சியுடையானுதலின் ஓர் இகழ்ச்சியாக நினைத்தானில்லை. பின்னால் எப்படியாவது அரசைப்பெற உடனே காடேகுவதே தகுந்த தந்திரம் எனத் தீர்மானமாக அவனுக்குத் தோன்றினும் அப்போதடைந்த அவமானம் அவன் மனத்தை வருத்துகிறது. இராமன் தசரதனுடைய உண்மையான தன்மையை அறிவானுதால் பரதன் வந்தவுடன் தசரதன் சூழ்ச்சி முழுவதும் வெளியாகும், அப்போதுவரும் அவமானத்தைப் பொறுக்கமுடியாமல் மனமுடைந்து இறந்து போவான் என்பதை நன்ருக அறிந்து தனக்கு வேண்டியவளாகிய கோசலையாவது கூட இருக்கவேண்டுமென்று அவளிடம் கூறுகிறான். அவளைப் பார்த்தாவது தசரதனுடைய மனம் ஆறுதலடையுமென்பது அவன் நோக்கம். அதனாலேயே அவளை நோக்கி "என்னைப் பிரிந்ததால் ஏற்படும் துக்கத்தால் அவர் இறக்காமல் நீ பாதுகாக்க வேண்டும்" என்று கூறுகிறான்.

இராமன் தன் முடிசூட்டுக்கு வந்த இடையூறால் உண்டான துக்கத்தை எவ்வளவு தூரம் அடக்கியும் முடியவில்லை. கடைசியாகக் கோசலைமுன் அவன் அழுகின்றான். அவ்வழுகையும் துக்கமும் சீதையைக் கண்டபோது மேலிடுகிறது. "கையில்கிடைத்த அரசாட்சியை இழந்தேன். நானும் காட்டுக்குப் போக வேண்டியதாயிற்று" என்று எப்படி சொல்வதென்ற சோகத்தால் அவன் உடம்பு வியர்த்தது. கவலையை அடக்க முடியாது தவித்தான்.

கோசலை இராமனைப்பார்த்து "நீ பிறந்த இந்தப்பதினேழு ஆண்டுகளாய்" என்று கூறுவதிலிருந்து இராமனுக்கு அப்போது பதினேழு வயதுதான் என்று தெரிகிறது. ஆனால் அயோத்தியா காண்டம் நாலாவது சருக்கத்தில் தசரதன் கூற்றாக "பரதன் அம்மான் வீட்டுக்குப் போய் வெகு நாளாயிற்று" என்றும், முப்பதாம் சருக்கத்தில் சீதை கூற்றாக "அதி பால்யத்தில் தன்னைக் கலியாணம் செய்து தன்னுடன் பல்லாண்டுகளாக வாழ்ந்து கொண்டிருக்கும் மனைவியைத் தானே பிறரிடத்தில் ஒப்புவித்து அதனால் பிழைக்கிறவனைப் போல" என்றும் வருவதைக் கவனித்தால் இராமனுக்குக் கலியாணமானபின் பல ஆண்டுகள் கழித்த பின்னரே இவ்வித நிகழ்ச்சிகள் ஏற்படுகின்றன என்று தெரிகிறது. இதையே நமது சீனிவாசய்யங்காரும் பக்கம் 131-ல் எழுதிய குறிப்பில் "அயோத்தியில் பனிரெண்டு ஆண்டுகள் வரையில் அவளுடன் நெருங்கிப் பழகியும்" என்று எழுதுகிறார். இதனாலும் வால்மீகி முனிவர் முன்னுக்குப்பின் முரணாக எழுதுகிறார் என்பது வலியுறுகிறது.

மேலும் வால்மீகி முனிவர் இராமன்இரவில் தன் தந்தையைக்கண்ட பின் கோசலையைக்கண்டு பின்னரே தன்அரண்மனையடைகிறானென்று கூறிவிட்டு மறுநாள் காலை நிகழ்ச்சியின்போது 'கோசலை பலநாளாகக் காணாத இராமனை ஆவலோடெதிர் கொள்கிறாள்' என்று கூறுகிறார். இவ்வித மாறுபாடுகள் எழுந்தது மிகவும் வியப்பே. இதெல்லாம் வால்மீகி முனிவருடைய அறிவுக்குறைவைக் காட்டும். அன்றேல் இடையில் பலர் அந்நூலிற் செய்த மாறுபாடுகளைக் காட்டும்.

இராமனுக்கு சீதையைப்பற்றிய கவலையே மிகவும் அதிகமாக இருந்திருக்கிறது. அவளைக் கூட அழைத்துப்போனால் அவளுடைய அழகில் ஈடுபட்டு வேறு யாரும் தன்னை தொந்தரவு செய்யக்கூடும் என்ற அச்சத்தால் அவளை அயோத்தியிலேயே விட்டுப்போக நினைக்கிறான். ஆனால் சீதை மிகவும் காம இச்சையுடையவளாதலாலே தன்னை விட்டுப் பிரிந்திருக்க மாட்டாளென நினைத்தே அவளுக்கு வேறுபோக்குக் காட்டுகின்றான். அதாவது, 'பரதனிருக்கிறான் அவன் மனப்படி நடந்துகொள்' என்று கூறுகிறான். ஆனால் சீதைக்குப் பரதனிடத்தில் வெறுப்பு. அதனால் அவள் கோபங்கொண்டு "ஆண்தன்மை யில்லாத உம்மை மணந்தேனே. உமக்கு அழகு ஒன்றே

உள்ளது'' என்று பலவாறு அவனை இகழ்ந்ததோடு "நீர் கூறுவதைப் பார்த்தால் என்னைப் பரதனிடம் ஒப்புவிக்கப் பார்க்கிறீரா? என்னை அவன் வெறுக்கிறான். ஆதலின் அவன் வசமிருப்பதினும் உயிரைவிடுகிறேன். நீர் வேண்டுமானால் அவனுக்குப் பரிசாரகராயிரும்'' என்று கூறுகிறாள். இராமன் நினைத்தது போலவே சீதைக்குக் காமப்பித்து அதிகம். அதனாலேயே அவள் இராமனோடு போக முயல்கிறாள். அதற்கு அவன் இணங்காமல் பேடிபோலிருந்ததனாலேயே "நீ பரதனுக்குப் பரிசாரகனாயிரு. நான் அவனோடு வாழேன்'' என்றெல்லாம் இகழ்ந்து பேசுகிறாள். "இங்கிருந்த நாளெல்லாம் நம்மை அனுபவித்து விட்டு காட்டுக்குப் போகும் போது நம்மை தள்ளப்பார்க்கிறான், இவனுடைய அழகால் மயங்கிய வேறு அழகிகள் இவனை வசப்படுத்தினால் நம்பாடு திண்டாட்டமாய்விடும். ஆதலின் இவனை விடக்கூடாது'' என்றே அவள் துணிகிறாள். மேலும் அவள் அவனைப் பார்த்து "என்னை அழைத்துப் போவதால் உமக்குச் சுகமே. எனக்கும் சுகம். பாலைவனத்தில் பிரயாணம் செய்கிறவர்கள் தங்களுக்கு வேண்டிய தண்ணீரைக் குடித்துவிட்டு மிகுந்ததைக் கொட்டமாட்டார்கள். பிறகு வேண்டியிருக்குமென்று கொண்டு போவார்கள். அப்படியே என்னையும் அழைத்துப்போய்ச் சுகம் பெறுவீராக!'' என்று கூறுகிறாள். இதனால் கேவலம் காம இச்சை வசப்பட்டே சீதை இவ்வாறு கூறுகிறாள் என்பது வெள்ளிடை மலையே. சீதைக்கு இராமன் பட்டத்துக்கு வந்தாலும் சரியே வராதொழிந்தாலும் சரியே, அவன் அவளுக்கு எப்பொழுதும் காம இன்பம் தந்துகொண்டே இருக்க வேண்டும். அதனாலேயே அவள் கவலை வேறொன்றிலும் செல்லவில்லை. காட்டிலும் அவனுடன் இன்பம் நுகரவேண்டும், இல்லையேல் உயிர் விடுவேனென்கிறாள். பின்னரே இராமன் அவளை அழைத்துப் போக இசைகிறான். இராமனுடைய எண்ணங்களையெல்லாம் அறிந்தே அவனை சீதை கண்டிக்கிறாள்.

"நான் பூர்வ கர்மத்தின் பயனாகக் காட்டில் வாழ்வேனென முன்னரே சோதிடர் கூறியுளர். பூர்வ கர்மப் பலனை அனுபவிக்காமல் முடியுமா?'' என்று சீதை கூறுகிறாள். இவ்வாறு கர்ம வசப்பட்டு அலமரும் ஓர் பெண்ணையும் சிலர் தெய்வமாகக் கொள்கிறார்களே! பரிதாபம்!! பரிதாபம்!!! சீதை யோனிவாய்ப்பட்டுப் பிறக்கவில்லையென்றும் சனகன் உழும்போது ஏர்க்காலின் கீழ் அகப்பட்டாள் என்றும்,

அப்பிள்ளையையே அம்மன்னன் வளர்த்தானென்றும் கூறுகின்றார்கள். இது மிகவும் உண்மையே! இதை மறுக்க யாராலும் ஆகாது! ஆனால் அவள் யோனிவாய்ப்பட்டுப் பிறக்கவில்லையென்பது சிறு பிள்ளையும் மறுத்துரைக்கும் பெரும் பொய். சீதை பிறந்தவுடன் பகைவர்களால் எடுத்துக் கொண்டுவந்து வயற்புறத்திற் போடப்பட்டிருக்கவேண்டும். அல்லது அவள் ஓர் விதவையின் பிள்ளையாக இருக்கவேண்டும். மானம் பொறுக்கமாட்டாமல் ஓர் விதவை அப்பிள்ளையைப்பெற்று ஊருக்கு வெளியே போட்டுவிட்டனள் போலும். அன்றி கலியாணமாகாத ஓர் கன்னிகை கள்ளத்தனமாகப் பெற்ற பிள்ளையைத்தான் இவ்வாறு போட்டு விட்டனளோ? என ஐயுறவும் இடமுண்டு. திருமணத்தின் முன் பெற்ற பிள்ளையாகிய கர்ணனைக் குந்திமாதேவி மானம் பொறுக்கமாட்டாமல் ஓர் பெட்டியில் வைத்துக் கங்கையில் விடவில்லையா? இவ்வுண்மையை அறிஞர் சிந்தித்து உணர்வார்களாக.

இராமாயணத்தை எழுதிய வால்மீகி முனிவர் பார்ப்பனரானதாலே, அவர்களுக்கு ஆகவேண்டிய நலங்களையெல்லாம் தேடுவதற்கு அனுகூலமாக இராமனைத் தெய்வமென்றும், தெய்வமாகிய இராமனே இவ்வாறெல்லாம் பார்ப்பனர்களுக்கு வேண்டியதெல்லாம் கொடுத்திருக்கிறானதலின் உலகத்தாரும் அவ்வாறே நடப்பார்களெனப் பார்ப்பனரைப் பலவாறு உயர்த்தி யெழுதியிருக்கின்றார். மேலும் பார்ப்பனராலேயே ஆரியர் நிலைபெற்ற நன்மை யடைந்தனராதலினாலே அவர்களுக்கு வேண்டும் நலனெலாம் செய்தேயிருப்பர். அதை நம்பிக் கொண்டு தமிழ் மக்களும் இந்தப் பாழான அறிவால் மயங்கித்தாமும் பார்ப்பனருக்குப் பொருளைக் கொடுத்துக் கெடுகின்றனரே! அந்தோ பரிதாபம்! பிறருக்குப் பொருள் கொடுக்கவேண்டுமானாலும் இப்பார்ப்பனர்களுடைய உத்திரவைப் பெறவேண்டுமென்று இராமன் கூறுகிறான். இராமனை வழியனுப்புவதற்கு பார்ப்பனனை வரவழைத்து ஓமம் வளர்த்து, வேண்டும் பணத்தைக் நிறையக் கொடுக்கிறாள் கோசலை. இராமனும் புறப்படும்போது தன்னுடைய செல்வங்கள் நகைகளெல்லாம் பார்ப்பனர்களுக்கே கொடுக்கிறான். சீதை தன்நகைகளைப் பார்ப்பனர்களுக்குக் கொடுக்கிறாள். பிறர் உடுத்த உடைகளையும் படுத்த படுக்கைகளையும் அணிந்த நகைகளையும் பார்ப்பனர் பெற்று அணிந்து மகிழ்ந்தனராம். என்னே இவர்தம் இழிசெயல்! ஆரிய

ளுகிய இராமன் முதலியோர் ஆரியப் பார்ப்பனருக்குக் கொடுத்ததும் அவர்கள் ஏற்றதும் வியப்பில்லை. பிள்ளையில்லாதவர் பார்ப்பனரைக் கூடி அவர்தம் திருவருளால் பிள்ளையைப் பெறுகின்றதைக் காட்டி லும் இவை கேவலமில்லை. தசரதன் யாககர்த்தர்களாகிய பார்ப்பனர் களுக்குத் தன் மனைவிகளைத்தந்து பிள்ளைகளைப் பெற்றானே! ஐயோ கேவலம்! இதுமிகக் கேவலம்! திரியோதனுதியருடைய தந்தையாகிய திருதராட்டிரனும், பஞ்சபாண்டவர்களுடைய தந்தையாகிய பாண்டு வும் வியாசன் என்ற பார்ப்பனனுக்கும் மன்னவனுடைய விதவை களுக்கும் பிறந்த பிள்ளைகளல்லரோ? இங்காவது பேரேற்றுக்கொள் ளத் தசரதன் உயிருடன் இருந்தான். அங்கே பேரேற்றுக்கொள் வதற்குக் கூட ஆளில்லாமல் கணவன் இறந்தபின் விதவைகளாகிய அப்பெண்கள் வேதவியாசனைக்கூடிக் கட்டி கட்டியாகப் பிள்ளைகளைப் பெற்றனரே. இத்தகைய வழியில் வந்த ஆரியர் விதவா விவா கத்தைக் கண்டிப்பது மிகவும் கேவலம்! கேவலம்! இக்கண்டனத் தாலேயே சீதை போன்ற பிள்ளைகள் தோன்றிக் காட்டிலும், பள்ளத் திலும், தண்டவாளத்திலும் எறியப்பெறுகின்றனர்.

சீதை இராமனிடம் பேசும் பேச்சுக்களிலிருந்து அவன் அவளை ஐயுற்றதுபோலக் காண்கிறது. அதனால் அவன் அவள் மனதை அறியப் பரதனைப்பற்றிக் கூறினான் என்றும் கொள்ளலாம். இவ னுக்கு ஐயம் அடிக்கடி நிகழ்வதுண்டு போலும். இவ்வையமே சீதை யைத் தீப்புகச் சொல்லுமாறும் பின்னர் வண்ணான் பேச்சைக் கேட்டு காட்டுக்கனுப்புமாறும் இராமனைத் தூண்டியதுமாகும்.

"நீ என்னுடன் வனத்தில் வாழவேண்டுமென்று முன்னமே தெய்வத்தால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது" என்று கூறுகிறான். இந்த இடத்தில் நமது மொழி பெயர்ப்பாளர் சீனிவாசய்யங்கார் எழுதியுள்ள குறிப்பு சிந்திக்கத்தக்கது. அது வருமாறு:—(பக்கம் 133) "இது இராமனுக்கு எப்படித் தெரியுமென்று விளங்கவில்லை. தெரிந்திருந்தால் சீதையை அழைத்துப்போக ஏன் தடை செய்ய வேண்டும்."

இராமனிடத்தில் பிச்சை வாங்க திரிசடன் என்ற ஓர் ஏழைப் பார்ப்பனன் வருகிறானென்கிற இடத்தில் பக்கம் 141-ல் நமது சீனி வாசய்யங்கார் எழுதியிருக்கும் குறிப்பும் கவனிக்கத்தக்கது. அது

வருமாறு:—"தசரதர் நீதி தவருமல் எல்லாக் குடிகளும் மகிழும்படி அரசாட்சிசெய்து வரும்பொழுது இப்படியிருப்பதற்குக் காரணம் தெரியவில்லை""இராமன் ஏன் இந்தத் திரிசடனைக் கவனிக்கவில்லை" இனிக் கம்பர் புரட்டைக் கவனிப்போம்.

சீதையைப் பார்க்க இராமன் வந்த போது 'குடையின்றி, கவரியின்றி, முடியின்றி வருவதென்னே' எனச்சீதை கவன்றுவினவினள் என வால்மீகி கூறியதைக் கம்பர் அவன் கோசலையைப்பார்க்க வந்த போதே கூறுகிருர். கோசலை இராமனைக் கண்டவுடனே "வாக்குத் தவருத உன் தந்தை உனக்கு முடிபுனைவர்!"எனமகிழ்ந்து கூறியதாக வால்மீகி கூற, கம்பரோ "இடையூறுண்டோ நெடுமுடி புனைதற்கென்ருள்" எனக் கூறுகிருர். இதனல் கோசலை இருந்த நிலையையே கம்பர் மாற்றிக் கூறுகிருர்.

கம்பருடைய நோக்கமெல்லாம் இராமனையும் தசரதனையும் கோசலையையும் நல்லவர்களாகக் காட்டவேண்டுமென்பதே. அதற்காகக் கதைப்போக்கையே மாற்றுகிருர். இராமன் கோசலையிடம் பரதன் முடி புனைவதையும் தான் காடேகவேண்டியதையும் ஏக காலத்திலே கூறினுன் என வால்மீகி கூற, கம்பர் முதலில் பரதன் நாடாள நேர்ந்ததெனஇராமன் கூறினுனெனவும் பின்னரே மெதுவாகத்தான் காடேகுவதைக் கூறினுனெனவும் கூறுகிருர். இத்துடன் அமையாது தமது அறிவு வன்மையால் கோசலை மிகவும் நல்லவள் என்பதை காட்டிக்கொண்டே போகிருர். இராமன் பரதன் நாடாளப்போகிருனென்றவுடன்,

"முறைமையன்றென்ப தொன்றுண்டு மும் மையின்
நிறை குணத்தவன் நின்னினும் நல்லனல்
குறைவிலன் எனக் கூறினள் நால்வர்க்கும்
மறுவிலன் பினில் வேற்றுமை மாற்றினுள்.

"என்று பின்னரு மன்னவ னேவிய
தன் றெனுமை மகனே உனக்கறன்
நன்று நும்பிக்குநானில நீ கொடுத்
தொன்றி வாழுக ஊழிபல என்ருள்"

என்ற கவிகளைக் கம்பர் பாடுகிருர். இவ்விதமாக உண்மையில் கோசலை கூறியிருப்பாளேல் அவள் மிகவும் தூயமனத்தினளென்

பதற்கு ஐயமென்? வால்மீகி கூறும் காமியும் சுயநலமிக்கவளுமாகிய கோசலையை இவ்வாறு மிகத் தூயவளாகப் புரட்டிக் காட்டுகின்றாரே கம்பர், இவராலேயே தமிழ் மக்கள் அறிவு கெட்டது. ஆரியர்தமது வீரனாகிய இராமனைத் தெய்வம் போலக்காட்ட முயன்றதிலும் தமது பார்ப்பன மதத்தை நிலை நாட்ட முயன்றதிலும் அதிகமான பயனைத் தந்ததாகும் இக்கோடரிக் காம்பாகிய கம்பர் புரட்டு. இனியே னும் தமிழ் மக்கள் இப்புரட்டில் மயங்காது உண்மை யுணர்வாராக. ஐயோ, இக்கம்பரது அறிவும் கவித்திறமையும் இவ்வாறு தமது தமிழ்க்குலத்தை வேரறுக்க முயன்ற ஆரிய வீரன் கதையைப்பாடி தமது இனத்தையே ஏமாற்றுவதில் பயனுபினவே; கோசலையினைத்து வருந்திய தெல்லாம் தன் சக்களத்திகள் கொடுமைகளையே என வால்மீகி கூறக் கம்பர் அவைகளைப்பற்றி ஓர் சொல்லேனும் கூறினாரல்லர்.

கோசலை தன்மகன் மனப்படி இசைந்து அவனை வழியனுப்புமாறு பார்ப்பனனை அழைத்துச் செய்த ஓமம் முதலிய செயல்களையெல்லாம் கம்பர் கூறாது அவள் 'பரதன் நாடாளட்டும் இராமன் காடேகா வண்ணம் மன்னனிடம் வேண்டப்போகிறே' னென்று அங்கே விரைந்தேகுவதாகக் கூறுகிறார். இராமன் சுமத்திரை அரண்மனையை அடைந்ததாக வால்மீகி கூறவேயில்லை. கம்பரோ இராமன் கோசலையைத் தொழுது சுமத்திரை வீட்டை நோக்கிப் போனான் என்றதுடன் இராமன் செயல்களை நிறுத்திக்கொண்டு கோசலை செயல்களை விவரிக்கிறார். இப்போக்கு வால்மீகிக்கு முற்றிலும் மாறுபட்டதே.

கோசலை தசரதனை அடைந்து புலம்பினதாகவும் அங்கே வசிட்ட முனிவன் வந்து தசரதனைத் தேற்றியதாகவும், தசரதன் வசிட்டனை நோக்கி கைகேசியின் மனதைமாற்றி இராமனுக்கு முடிசூட்டுமாறு வேண்டியதாகவும், முனிவன் கைகேசியை, தன் மனதை மாற்றிக் கொள்ளும்படி வேண்டியதாகவும், கைகேசி இராமன் காடேகானேல் உடனே மடிவேனென்று கூறியதாகவும், முனிவன் அவளை இகழ்ந்துரைத்ததாகவும் கம்பர் கூறிவிட்டுப் பின் தசரதன் முனிவனை நோக்கிப் பின்வருமாறு கூறுவதாகக் கூறுகிறார்.

"இன்னே பலவும் பகர்வான் இரங்காதாளை நோக்கிச்
சொன்னேன் இன்றே இவளென் தாரமல்லள் துறந்தேன்
மன்னே யாவான்வருமப் பரதன் றனையும் மகனென்
றுன்னேன் முனிவா அவனுமாகான் உரிமைக் கென்றான்"

இது வால்மீகி கூற்றுக்கு மாறுபட்டது. வால்மீகி அயோத்தியாகாண்டம் பன்னிரண்டாம் சருக்கத்தில் 'இராமனைக் காட்டுக் கனுப்புவது பரதனுக்கு இஷ்டமானல் நான் இறந்த பிறகு அந்தப் பாபி என் உத்தரகிரியைகளைச் செய்யவேண்டாம்' என்றும், சருக்கம் பதினென்கில் 'இந்த அபிஷேகத்தை நீ தடுத்தால் மகா பாபியான நீயும் உன் மகனும் எனக்குத் தர்ப்பணம் முதலிய உத்தரகிரியைகளைச் செய்யவேண்டாம்' என்றும் தசரதன் கைகேசியை நோக்கிக் கூறுவதாகக் கூறுகிறார். இது அவனுடைய உண்மை மனப்பான்மையன்று. இப்பேச்சுகளெல்லாம் கைகேசியை அச்சுறுத்தித் தன் வழிப்படுத்தவே கூறியவனுவான். பின் சருக்கம் 42-ல் இராமன் காடேகும்போது பின் தொடர்ந்த தசரதன் தளர்ந்து 'நீ என் மனைவியல்லள். பரதன் இந்த அரசைப் பெற்று மகிழ்ந்தால் அந்த மகா பாபி எனக்குச் செய்யும் உத்தரகிரியைகள் எனக்குச் சேரவேண்டா, என்று கடிகிறான். இக்கூற்று வசிட்டன் முதலியவருக்குத் தெரியாது; கோசலை அறிவாள். மேலும் பரதன் தசரதனுக்கு நெருப்பு மூட்டுகிறானென்றும் அவனே ஏனைய உத்தரகிரியைகளையெல்லாம் செய்கிறானென்றும், பின்னரும் இராமனைப்பரதன் சந்தித்தபோது "நானும் சத்துருக்கனும் உத்தரகிரியைகளைச் செய்து விட்டோம். நீரும் இலக்குவனுமே செய்தல்வேண்டும்" என்று கூறியதாகவும் வால்மீகி தெளிவாக எழுதுகிறார்.

இதற்கு முற்றிலும் மாறுபாடாகக் கம்பர் இச்சொல்லைத் தசரதன் வசிட்டனிடம் கூறியதாகவும் அதனல் உத்தரகிரியைகள் செய்யத் துணிந்த பரதனை இச்செய்தி கூறிமுனிவர் தடுத்து விட்டதாகவும் அதனல் பரதன் கீழே விழுந்து புலம்பினனெனவும் கதையையே மாற்றி விட்டார். இதனல் செய்திகளையெல்லாம் மறைத்து அவனை ஓர் பாவியாகக் காட்டுகிறார். என்னே இக்கம்பர்தம் தீய மதி! இவ்வாறு மாற்றிப் பரதனை யாவரும் இகழுமாறு செய்ததால் இவர் என்ன பயன் பெற்றார்! இவ்வுண்மையை யறிந்தால் இப்புன்மதிக்

கம்பரை அறிவுடையார் வெறுக்காமலிருக்க முடியுமா? இவர்கள் எவ்வளவு நயமொடுதிகழ்ந்தாலென்? புல்லிய உரைகள் புல்லிய கதையில் பொய்மையாக அமைந்து இன்கவிபாயினும் அவ்வின்கவி யாதுபயன் தருவதாகும்? பயனில் சொற்களைப்பாராட்டிப் பாடிய இக்கம்பர்தம் புல்லறி விருந்தவாறென்னே! தன்னயக் கருத்தின் தடிப்பே இது போலும்! செந்தமிழ் நாட்டுச் சிறிய கதைகள் இப்பொய்ம்மையாளர் கண்முன் தோன்றிலபோலும்! இவர் கவித்திறம் இவர் வாக்குப் போலவே புல்லிடைபுகுத்தமுதேயும் போலும்!

நிற்க, பின்னர் கோசலை, மன்னனிடம் குற்றமில்லையென அறிந்து இராமனைக் காக்க வேண்டினளெனவும், தசரதன் இராமனை நினைந்து புலம்பினதாகவும், முனிவன் தான் இராமனை வனமேகாமல் தடுப்பதாகக் கூறியதாகவும், மன்னன் மயங்கி தான் முன் வேட்டையாடச் சென்றபோது ஓர் முனிமகனைத் தவறுதலாகக் கொன்றதையறிந்த குருடராகிய முனிவர் அவனைப் பிள்ளைகளைப் பிரிந்து புத்திரசோகத்தால் சாவாயெனச் சபித்ததாகவும், அதனால் இராமனைப்பிரிந்து தான் கட்டாயம் சாகப்போவதாகவும் கூறினனெனவும் கம்பர் கூறுகிறார். இச்சாப வரலாற்றைத் தசரதன் சாகும்போது கூறுவதாக வால்மீகி எழுதுகிறார். இதன் உண்மையை அச்சமயத்தில் ஆராய்வோம்.

கம்பர் பின்னர், வசிட்டன் மன்னவையடைந்து அங்கே கூடியிருந்தவரிடம் நிகழ்ந்தது கூறினதாகவும், அதைக்கேட்டவர் யாவரும் அழுதரற்றினரெனவும், அதைக்கேட்டு இலக்குவன் துடிதுடித்து வந்தானெனவும், அவனுடைய கோபத்தை அவன் நாணொலியாலறிந்த இராமன் சுமத்திரை வீட்டிலிருந்து வந்து தணித்ததாகவும் எழுதுகிறார். இவ்வரலாறும் வால்மீகிக்கு முற்றிலும் மாறுபட்டதே. வசிட்டன் கைகேசியை இகழ்ந்தது இராமன் முன்னிலையில் என்று அவன் காடேகும் சமயத்தில் கூறுகிறார். மேலும் இலக்குவன் இராமனைவிட்டுப் பிரியாமல் கைகேசியரண்மனை யடைந்ததும், பின் கோசலையிடமடைந்ததும், அங்கே தசரதனைச்சினந்துரைத்ததும், இராமன் அவனையும் கோசலையையும் தேற்றினதும், பின் அவனுடனேயே சீதையிடம் சென்றதுமாகிய வால்மீகி கூறும்வரலாறெல்லாம் முன்னரே தெளிவாகக்கண்டோம். இவ்வுண்மைகளுக்கு மாறாகக் கம்பர் இராமன் இலக்குவனைச் சினந்து நின்றபோது கண்டதாகக் கூறு

கிறுர். நாம் மேலே ஆராய்ந்துள்ள இலக்குவனுடைய இழிகுணத் தைக்காட்டும் பேராசைப்பேச்சுக்களை யெல்லாம் கம்பர் மறைத்தார். ஏனெனில் அவனை நல்லவனுகக் காட்டவேண்டியே. வால்மீகி பெரும் பாலும் தசரதனையே இலக்குவன் சினந்துரைத்ததாகக் கூற, கம்பர் கைகேசியையே பெரும்பாலும் சினந்துரைப்பதாகக் கூறுகிறுர். மேலும் கம்பர்.

"சிங்கக்குருளைக்கிடு தீஞ்சுவையூனை நாயின்
வெங்கட்கடுங் குட்டியையூட்ட விரும்பினுளே"

என்று இலக்குவன் கூறுவதாகக் கூறுகிறுர். இவ்வுவமையில், தீஞ் சுவையூன் போன்றது அரசாட்சி. அது சிங்கக்குட்டிபோன்ற இரா மனுக்கே உரியது. அதை நாய்க்குட்டிபோன்ற பரதனுக்குக் கைகேசி கொடுக்க விரும்பினுள் என்பது விளங்குகிறது. அரசாட்சியை ஊனென்றது மிகவும் இழிவான உவமை.

பின் இராமனும் இலக்குவனும் சுமத்திரையைக் கண்டு அவள் நன்மதி கேட்டதாகக் கூறுகிறுர். இது முற்றிலும் மாறுபட்டதே. இராமன் சுமத்திரையைக் காணவே இல்லை. கடைசியாகக் காடேகும் போது கண்டும் தனித்து வணங்கவில்லை என்று வால்மீகி கூறுகிறுர். சுமத்திரை இச்சமயம் இலக்குவனுக்குக் கூறும் நன்மதிகளையெல் லாம் இராமன் காடேகும் சமயம் அவள் தசரதன் முன்னிலையிற் கூறியதாக வால்மீகி கூறுகிறுர்.

சுமத்திரையிடமிருக்கும்போது கைகேசியனுப்பிய மரவுரிகள் இராமனுக்கு வருகின்றன என்று கம்பர் கூறுகிறுர். ஆனுல் வால்மீ கியோ தசரதனிடம் வழியனுப்பப்போனபோது இராமனே கைகேசி யிடம் கேட்டுவாங்கிக் கொள்ளுகிறுன் என்று கூறுகிறுர். இவைக ளெல்லாம் பின்னர் விவரமாக ஆராயப்படும்.

இருவரும் சீதையைப் பார்க்கப்புறப்பட்டபோது இலக்குவனும் மரவுரியுடுத்தமைகண்டு இராமன் தடுக்க, தானும் கானகம் வரப்போ வதால் தடுக்கக்கூடாதென இலக்குவன் கூற இராமனும் இசைகிறுன். இது கம்பர் கூற்று. வால்மீகி சீதையை அழைத்தேக இசைந்த பின் னர் இது நிகழ்ந்ததாகக் கூறுகிறுர்.

அச்சமயம் வசிட்ட முனி வந்து தோன்றி இராமனைக் காடேகா திருக்கக் கூறியதாகவும், அதற்கு இராமன் இசையவில்லையென்றும்,

பின் முனிவன் அரசனிருந்த இடம் சென்றனனென்றும் கம்பர் கூறுகிறார். இவையெல்லாம் வால்மீகி கூறாததே.

பின் இராமன் இலக்குவனுடன் வீதி வழியே சென்றதாகவும், நகரத்தார் பலரும் அது கண்டு புலம்பினரெனவும், பின்னர் இராமன் சீதையையடைந்து உண்மை கூறினதாகவும், சீதை அவன் தன்னைப் பிரிவானென வருந்தி உள்ளே போய் மரவுரியுடுத்து வந்தாளெனவும், அதைக்கண்ட இராமன் " எனக்கு எல்லையில்லாத துயர் தருவாய்'' என்றானென்றும், அதுகேட்ட சீதை "என்னைக் கூடியிருத்தலாலுண்டாகும் துயரம் என்னைப் பிரிவதால் இன்பமாமோ'' என்று சீறினாளென்றும், அதன் பின் இராமன் ஒன்றும் பேசாமல் அவளை அழைத்தேக இசைந்தானெனவும் கம்பர் கூறுகிறார். சீதை மரவுரியுடுத்தது தசரதன் முன்னெனவும், அவள் உடுத்தத் தெரியாமல் விழித்து இராமனை உடுத்திவிடச் சொல்கிறாளெனவும் வால்மீகி கூறுவதற்குக் கம்பர் கூற்றுப் பொருந்தாது மாறுபடுகின்றது. மேலும் சீதை இராமனைப்பற்றி மிகவும் கேவலமாகப் பேசின பேச்சையெல்லாம் வால்மீகி விவரமாகக் கூறியிருக்க அவைகளையெல்லாம் கம்பர் மறைத்து விட்டு மேலேகூறிய ஒரே வார்த்தையே கூறினளெனக் கூறுகிறார். இது சீதையையும் இராமனையும் மிகவும் நல்லவர்களாகவும் ஒழுக்கமுடையவராகவும் உலகத்துக்குக் காட்டி ஏமாற்றப் போலும்.



# ஒன்பதாம் அத்தியாயம்.



இராமனும், இலக்குவனும், சீதையும் வீதி வழியே போவதைப் பார்த்த குடிமக்கள் "ஐயோ! இராமன் வெளியில் புறப்படும் போது நால்வகைச் சேனையும் பின் போமே. இன்று ஒருவருமில்லையே. இராமன் காடேகினால் நாமனைவரும் கூடவேபோவோம். காடு நாடாகும்; இவ்வயோத்தி காடாகும்" என்று வருந்தினர். அரண்மனை வாயிலை யடைந்தவுடன் அங்கே நின்ற சுமந்திரனை இராமன் பார்த்து "உள்ளே போய் அரசரிடத்தில் நாங்கள் விடை பெற்றுப்போக வந்திருக்கிறோமென்று சொல்லும்" எனச்சொல்லியனுப்பி வெளியிலேயே நின்றான். சுமந்திரன் சென்று தெரிவிக்க தசரதன் "என் மனைவிகளை விரைவில் வரும்படி சொல். என் மகனை நான் அவர்களால் சூழப்பட்டவனாகப் பார்க்க விரும்புகிறேன்" றென்று கட்டளையிட்டான். சுமந்திரன் அவ்வாறே சென்று கூற, அரசனுடைய முந்நூற்றைம்பது மனைவிகளும் கோசலையை முன்னிட்டுக்கொண்டு துக்க மிகுதியோடு வந்து சேர்ந்தார்கள். அதைக்கண்ட தசரதன், "சுமந்திர! என் மகனை அழைத்து வா" என்றான். சமந்திரன் வெளியிற்போய் இராமனை அழைத்து வந்தான். அவனைத் தூரத்திலேயே பார்த்த தசரதன் திடீரென்று தாவி எதிர்கொண்டு தழுவப்போனான். அவன் மனைவிகளும் அவனைப் பின்தொடர்ந்தார்கள். அரசனோ, கண்ணீரால் கண்கள் மறைந்து இராமனிருக்குமிடத்தைக் காணாது கொஞ்ச தூரத்திலேயே மூச்சற்றுக் கீழே விழுந்தான். உடனே இராமனும் இலக்குவனும் தாவிப் பாய்ந்து அவனைத் தாங்கிக் கட்டிலில் கிடத்தினார்கள். பெண்கள் கதறினர். தசரதனுக்கு அறிவு வந்தவுடன், இராமன் தங்களுக்கு விடைதர வேண்டினன். அதுகேட்ட மன்னன் "இராம! நான் கைகேசிக்கு வரங்களைக் கொடுத்து அவளால் ஏமாற்றப்பட்டேன்.

ஆகையால் நான் செய்வது ஒன்றும் நியாயமில்லை. என் அறிவு என்னிடமில்லை. ஆதலின் இப்போது நீ என்னை விலக்கி இந்த நாட்டுக்கு அரசனாக இரு" என்றான். இராமன், "நீரே நெடுநாள் ஆளும்; நான் காடேகி மீள்வேன்" என்றான். தசரதனைக் கைகேசி, "இராமனை இப்போதே காட்டிற் கனுப்பும்" என்று ஒரு பக்கத்தில் அந்தரங்கமாக வற்புறுத்திக்கொண்டிருந்தாள். அதனால் தசரதன் "இராமா, போய் வா; நீ நீடூழி வாழ்க. ஆனால் இன்று இரவு நீ புறப்படுவதில் எனக்குக் கொஞ்சமேனும் பிரியமில்லை. நீ போகவே கூடாது. உன்னை ஒரு இரவு முழுவதும் பார்க்கும் நன்மையாவது எனக்குக் கிடைக்குமல்லவா? இது நான் விரும்பிச் செய்ததன்று; கைகேசி என்னை ஏமாற்றிவிட்டாள்" என்றான்.

இராமன் "எனக்கு இந்த அரசில் விருப்பமொன்றுமில்லை. ஆதலின் நான் இப்போதே காடேகவேண்டும்; வாக்குறுதியை நிறைவேற்றுவதே சிறந்தது. பரதனுக்கு இப்போதே இந்த அரசைக் கொடும்" என்றான். தசரதன் இராமனைக் கட்டியணைத்துக் கீழே சாய்ந்தான்.

அப்போது சுமந்திரன், கைகேசியிடத்தில் தசரதனுக்குக் கொஞ்சமும் அன்பில்லையென்பதைத் தெரிந்துகொண்டு "அடீ, பாதகி! உன் கணவன் பேச்சைக் கேட்காமல் இராமனைக் காட்டுக்கனுப்புகிறாயா? உன்னை வசிட்டர் முதலியவர்கள் அழிக்காமலிருப்பது என்ன விந்தை? உன் தாயைப்போல நீயும் வந்துவிட்டாய். ஓர் கந்தர்வனிடமிருந்து பிராணிகள் பேச்சையறியும் திறமையைப் பெற்ற உன் தந்தை, ஓர் சமயம் எறும்புகள் பேச்சைக் கேட்டு நகைக்க, அதன் காரணத்தை உன் தாய் கேட்க, உண்மையைக் கூறினால் தன் தலை வெடித்துவிடுமென உன் தந்தை கூற, தலை வெடித்தாலும் சரி; உண்மையைக் கூறுமென உன் தாய் கூறினவள்தானே. அவ்வளவு கெட்டவளுடைய மகளாகையால் நீயுமிவ்வாறு நடந்தாய்போலும். உனக்கு வேண்டியவற்றை வாங்கிக்கொண்டு இராமனுக்கு அரசைக் கொடு" என்று கடிந்துரைத்தான். இதனால் கைகேசிக்குக் கோபம் அதிகப்பட்டது. தசரதன் "சுமந்திரா! நமது நால்வகைச் சேனைகளும், அழகாலும் பேச்சாலும் மனதைக் கவரும் வேசைகளும், வணிகர்களும் இராமனுடன் போகட்டும். நமது தானியக் களஞ்சியம் பணக்

களஞ்சியம் யாவும் அவனுடன் போகட்டும். அவனுடன் துணை போகிறவர்களுக்கு வேண்டும் பொருள்களெல்லாம் கொடுக்கப்படட்டும். பரதன் அயோத்தியில் ஆளட்டும், நான் இப்போது சொன்ன ஏற்பாடுகளுடன் காடேகட்டும்" என்றான். அதைக் கேட்டு கைகேசிக்குப் பெரும் பயம் பிடித்தது. அவள் "ஓ, மகா யோக்கியரே! இந்த நாட்டிலுள்ள குடிகள், தனதானிய சேனைகள் எல்லாவற்றையும் இராமனுடன் அனுப்பிவிட்டு ஒன்றுமற்ற நாட்டையா பரதனுக்குக் கொடுக்கப்போகிறீர்? இந்த தானம் வேண்டா" மென்றாள். தசரதன், "சேனை, செல்வம் இவைகளையெல்லாம் அனுப்பக்கூடாதென்று முன்னரே கேட்க மறந்துவிட்டு இப்போது குறுக்கே விழுந்து தடுத்தால் ஆகவேண்டிய காரியம் நிற்குமா?" என்றான். கைகேசிக்கு அடங்காத கோபமுண்டாயிற்று. அவள் "சகரன், அசமஞ்சனாகிய தன் மகனைத் தனியே துரத்தியதுபோல் துரத்தும்" என்றாள்.

அப்போது சித்தார்த்தனென்ற ஒரு பிரதானி "அசமஞ்சன் ஊர்ப் பிள்ளைகளைத் தண்ணீரில் தள்ளிக் கொன்று வேடிக்கைப் பார்த்த கொடுஞ் செயலுக்காகத் துரத்தப்பட்டான். இராமன் என்ன குற்றம் செய்தான்? இராமனுக்கு அரசைக் கொடு; இல்லையானால் உலகத்தார் உன்னை நிந்திப்பார்கள்" என்றான். தசரதன் "அடி, சண்டாளி! சித்தார்த்தன் கூறியது கேட்டதா? உன் மனம் எங்கே திரும்பப்போகிறது? நானும் இராமனுடன் காட்டிற்குப் போகிறேன். நீயும் பரதனும் சுகமாக அரசாளுங்கள்" என்றான். இராமன் மன்னனைப் பார்த்து "எனக்குச் சேனையும் செல்வமும் எதற்கு? யானையைத் தந்தவன் அதைக் கட்டும் கயிற்றில் ஆசை வைக்கலாமா? யானையே போகும்போது கயிறு ஒரு பொருட்டா? தாங்கள் எனக்குக் கொடுக்கிறதாக உத்தேசித்த பொருள்களையெல்லாம் நான் பரதனுக்குக் கொடுத்துவிட்டேன். நான் உடுக்க மரவுரியும், கூடை, மண்வெட்டி, கோடாரி முதலியவைகளையும் வேலைக்காரர் கொண்டுவரட்டும்" என்று கூறினன். கைகேசி, தானே மரவுரி கொண்டுவந்து கொடுத்தாள். இராமனும் இலக்குவனும் அதை உடுத்திக்கொண்டனர். சீதை கட்ட முயன்று தெரியாமல் வெட்கத்துடன் நின்றாள். உடனே இராமன் அதை அவளுக்குக் கட்டிவிட்டான்.

அப்போது வசிட்டன் "அடி, தீயவளே! சீதை காட்டிற்குப் போகக்கூடாது. இராமனுக்கு நியாயமாகக் கொடுக்கவேண்டிய சிம்மாசனத்தில் அவளே இருந்து அரசாளட்டும். இல்லையென்றால் நாமெல்லோரும் காட்டிற்குப் போவோம். பரதன் தசரதருக்குப் பிறந்தவனானால் அவர் அன்புடன் கொடுக்காத இந்நாட்டை ஆளச்சம்மதியான். அவனுடைய தந்தையைக்கொன்ற உன்னுடனும் வாழான். மூத்தவனிருக்க இளையவன் நாடாளலாமா? சீதை காடேகினால் வேண்டிய செல்வங்களோடு போகட்டும்" என்று கூறினான்.

சீதை மரவுரியுடுத்தியதைக் கண்டவரனைவரும் "சீ, சீ; என்ன காரியம் செய்தீர்" என்று சினந்தனர். தசரதனை கைகேசியை நோக்கி "சண்டாளி! சீதை உனக்கென்ன செய்தாள்? அவளையும் ஏன் காடேகச் சொல்கிறாய்? சீதையையும் இலக்குவனையும் காட்டுக்குத் துரத்தி நீ என்ன நன்மை பெறுவாய்?" என்று புலம்பினான். பின் தலைகுனிந்து வெட்கத்தோடு உட்கார்ந்திருந்தான். அப்போது இராமன் "தந்தையே! எனக்கும் ஒரு வரம் தர வேண்டுகிறேன். என் தாயை மிகவும் ஆதரவோடு நடத்தவேண்டும். அவளுடைய பகைவர்கள் கையில் அவளைக் காட்டிக்கொடுக்கக் கூடாது. இன்னுமொருமுறை வேண்டிக்கொள்கிறேன். என்னைப் பிரிந்த கவலையால் அவள் உயிரைவிடாமலிருக்கவேண்டும். நான் காட்டிலிருந்து திரும்பி வந்து என் தாயை யமனுடையப் பட்டணத்தில் போய்த் தேடும்படி வைக்காமல் இருப்பது உம்முடைய பொறுப்பு" என வேண்டினான்.

தசரதன் "என் உயிர் போகேனென்கிறதே" என ஓலமிட்டுப் பின் சுமந்திரனைப் பார்த்து "நல்ல குதிரைகள் பூட்டிய தேரைத் தயாரித்து அதில் இராமனை ஏற்றித் தெற்கே அழைத்துக்கொண்டு போ" என்று சொன்னான். சுமந்திரன் அவ்வாறே தேர் கொண்டு வந்து நிறுத்தினான். தசரதன் செல்வத் தலைவனை அழைத்து சீதைக்குப் போதுமானபடி ஆடைகளையும் நகைகளையும் கொண்டுவந்து தரச்சொல்ல அவனும் அவ்வாறே செய்தான். சீதை அந்த விலையுயர்ந்த நகைகளால் தன்னை அலங்கரித்துக்கொண்டாள். அதைக் கண்டு கோசலை அவளைத் தழுவிக்கொண்டு "பத்தினிப் பெண்கள் கணவனையே தெய்வமாக நினைப்பார்கள். கெட்ட பெண்களோ கணவனுக்குக் கேட்டையும், சோர நாயகனுக்கு நலத்தையும் நினைப்பார்

கள். என் மகன் நல்ல நிலையிலிருந்தவன்; இப்போது வினைவசத்தால் நாட்டிலிருந்து விலக்கப்பட்டிருக்கிறான். இதை ஒரு காரணமாகக் கொண்டு நீ அவனை இகழாமல் தெய்வமாக நினைத்து நட" என்றாள். சீதை "அம்மா! இந்த விவரமெல்லாம் நான் அறிவேன். தாங்கள் என்னைப் பதிவிரதையல்லாத கெட்ட பெண்களுடன் சேர்த்துப் பேசக்கூடாது. என் தாயைப்போன்ற மகா பதிவிரதைகளிடமிருந்து அந்த தருமத்தை நன்றாகக் கேட்டறிந்திருக்கிறேன். ஆகையால் என் கணவனைக் கனவிலும் அவமதியேன்" என்றாள். கோசலை கண்ணீர் வடித்தாள். பிறகு இராமன் கோசலையைப் பணிந்து, மற்ற முந்நூற்றைம்பது சிறிய தாய்மாரையும் கும்பிட்டு "நான் உங்களுக்கு ஏதாவது குற்றம் செய்திருந்தால் மன்னிக்கவேண்டும். அப்படிச் செய்வதாகச் சொன்னாலொழிய என் மனதுக்குச் சமாதானம் வராது" எனக் கூறி விடைகேட்டான். அவர்கள் அழுதார்கள்.

பிறகு இராமனும், இலக்குவனும், சீதையும் தசரதனைக் காலைத் தொட்டு வணங்கி, கோசலையையும் வணங்கினர். இலக்குவன் தன் தமையன் செய்ததைப்போல் கோசலையை வணங்கி தன் தாயான சுமித்திரையையும் வணங்கினான். சுமித்திரை "இராமன் சொற்படி கேட்டு நட. அவனை உன் தந்தையென நினை. சீதையே உன் தாய்" என்று புகன்றாள். பிறகு சுமந்திரன் "காட்டில் வாழவேண்டியதில் இது முதல் நாள். ஆதலின் இப்போதே புறப்படும்" எனக் கூற, இராமன் சீதையைத் தேரிலேற்றித் தானும் தம்பியுடன் ஏறிக்கொண்டான். உடனே சுமந்திரன் வேகமாகத் தேரை நடத்தினான். குடிகளெல்லோரும் அழுது தேரை நிறுத்தச்சொல்லிப் பின்தொடர்ந்தனர்.

தசரதனும் அவனுடைய மனைவிமாரும் "எங்கள் அருமைக் குழந்தையை இன்னுமொருமுறை பார்க்கப் போகாமலிருப்போமா?" என்று வெளியில் ஓடிவந்தனர். தசரதன் ஓட முடியாமல் கீழே விழுந்தான்.

இராமன் திரும்பிப் பார்த்து, தசரதனும் கோசலையும் பைத்தியம் பிடித்தவர்களைப்போல தள்ளாடிக்கொண்டு தன்னைப் பின்தொடர்ந்து வருவதைக் கவனித்தான். உடனே தேரை விரைவாகச்

செலுத்தச் சொன்னான். கோசலை கதறிக்கொண்டு ஓடிவருவதை இராமன் அடிக்கடி பார்த்தான். தசரதன் "தேரை நிறுத்து" எனக் கட்டளையிட்டான். சுமந்திரனுக்கு இன்னது செய்வதெனத் தெரிய வில்லை. இராமன் அதைப்பார்த்து "சுமந்திர! நான் கூறுமாறு தேரை விரைவாக ஓட்டும். பிறகு அரசரைப் பார்க்கும்போது 'உங்கள் வார்த்தை காதில் விழவில்லை' என்று சொல்லும். அது பொய்யல் லவா என்றால், இந்தத் துக்கத்தை என்னால் பொறுக்கமுடியாது" என்றான். அந்தப்புரத்தாரும் நகரத்தாரும் இராமனை வலம் வந்து திரும்பினார்கள். தேரைச் சுமந்திரன் விரைவாகச் செலுத்தினான். மந்திரிகள் "சுகமாகத் திரும்பிவரவேண்டுமென்று நாம் விரும்புகிற வனை வெகு தூரம் பின்தொடரலாகாது" என்று தசரதனிடம் கூறி னர். அவன் அதன்படி உடல் தளர்ந்து இராமனைப் பார்த்தபடியே தன் மனைவிகளுடன் நின்றுகொண்டிருந்தான். பெண்களெல்லாம் "இராமனைத் துரத்திய நமது அரசர் எவ்வளவு அறிவில்லாதவர்" என்று புலம்பினார்கள்.

இராமனைக் கண்டிப்பாகக் கோசலை தடுக்காததால் தாய்மாரைப் பிள்ளைகள் வெறுத்தனர். கோசலை சொல்லை இராமன் தட்டிச் சென் றதால் தாய்கள் பிள்ளைகளை வெறுத்தனர். கைகேசியைப் பார்த் துக் கோசலை போன்ற பெண்கள் தம் கணவரை வெறுத்தனர். பர தனைப் பார்த்து உடன்பிறந்தோர் தம்முள் அன்பை மறந்தனர்.

தேரால் உண்டாகும் புழுதியடங்கும்வரை தசரதன் அவ்விடத் திலிருந்து தன் கண்களையெடுக்கவேயில்லை. புழுதி மறைந்ததும் அவன் அங்கேயே கீழே விழுந்தான். கோசலை வலது புறத்தில் நின்று அவனைத் தூக்கினாள். கைகேசி இடது புறத்தில் வாளா நின்றாள். அப்போது தசரதன் கைகேசியைப் பார்த்து "அடீ, பாதகி! நீ என்னைத் தொடாதே, என் முன் நில்லாதே, நீ எனக்கு மனைவியல்லை. பரதன் இந்த அரசைப் பெற்று மகிழ்ந்தால், அந்த மஹா பாவி எனக்குச் செய்யும் உத்தரகிரியைகள் என்னைச் சேர வேண்டாம்" என்று கோபத்துடன் கூறினான். பின் கோசலை அவ னுடைய புழுதி படிந்த உடலைத் தூக்கி எடுத்து மெல்ல மெல்ல அரண்மனைக்கு அழைத்துப் போனாள். போகும்போது மன்னன் தேர்ச்சுவடுகளை அடிக்கடி திரும்பித் திரும்பி உற்றுப் பார்த்துக்

கொண்டே "நல்ல சந்தனங்களால் அலங்கரிக்கப்பட்ட உடலுடன் சுகமான தலையணைகளின்மேல் சாய்ந்துகொண்டு அழகு வாய்ந்த வேலைக்காரிகள் விசிறி போடத் தூங்கிய இராமன், இன்றிரவு எந்தக் கட்டிலில் படுப்பான்? இராமனில்லாமல் ஒரு நொடியாவது என்னால் பிழைக்கமுடியாது" என்று புலம்பிக்கொண்டு தன் மனைவியருடன் பிணத்தைக் கொளுத்திவிட்டு நீராடி வீட்டிற்குத் திரும்பி வருகிறவர்களைப்போல நகரத்திற்குட்புகுந்தான். அரண்மனையையடைந்த தசரதன் "இராமன் தாயான கோசலையின் வீட்டிற்கு என்னைச் சீக்கிரத்தில் கொண்டுபோய் விடுங்கள். அதைத் தவிர வேறிடத்திலிருந்தால் என் ஏக்கம் தணியாது" என்றான். உடனே வழிகாட்டுகிறவர்கள் அவனை அங்கே அழைத்துப்போய் காவலிருந்தனர். அங்கே போய்க் கட்டிலில் படுத்துக்கொண்ட பின்னரும் அவன் புலம்பினான். இரவில் தசரதன் கோசலையைப் பார்த்து "என்க்குக் கண் ஒளி அற்றது. நீ இருக்குமிடம் நன்றாகத் தெரியவில்லை. உன் கையால் என்னை நன்றாகத் தொடு. இராமனுடன் காட்டிற்குப் போன கண்கள் இன்னும் திரும்பிவரவில்லை. அவனைப் பார்க்கப் போனவை திரும்பிவருமா? அவனைப்பார்க்கும் நல்வினை எனக்கில்லாமற்போனது மன்றி அவனைப் பெற்ற உன்னைப் பார்க்கவும் என் கண்களால் முடியவில்லை. அதனால் என் கண்கள் போயின. இராமனைப் பார்க்காமல் தவிக்கும் எனக்கு அவனைப் பெற்ற உன்னைத் தொட்டால் அந்தத் தாபம் நீங்கும். இராமனைப் பார்க்காவிட்டாலும் அவனுடைய தாயான உன்னைப் பார்த்துப் பேசித் தொடுவதால் அதற்குச் சமமான சுகம் கிடைக்கும். இராமனுக்கு அறியாத்தனத்தால் ஏதோ தீமை செய்துவிட்டேனென்று என்னை மன்னித்துக் கைகளால் அன்புடன் தொடு" என்று புலம்பினான்.

கோசலையோ "இராமனைக் கெடுத்த கைகேசி இனிமேல் என்னை வருத்த ஆரம்பிப்பாள். பரதன் நாட்டாளவேண்டுமானால் இராமன் காடேகவேண்டுமா? பரதனுக்கு அவனால் கெடுதி நேருமென்றால், இராமனை பரதனுக்கு அடிமையாயிருக்கும்படி செய்கிறேன். பரதன் அடிமையாகிய இராமனுக்கு உணவு கொடுக்கும் சிரமமுமில்லாமல் அவ்னை இவ்வூரில் வீடுவீடாகப் பிச்சையெடுத்துப் பிழைக்கும்படி சொல்லுகிறேன். இராமனைத் திரும்பப் பார்ப்பேனா? இருபத்தைந்து

வயதுள்ளவனுகிய இராமன் எப்போது திரும்பி வருவான்?" என்று கதறினள்.

சுமத்திரை அவளை நோக்கி "அம்மா! வருந்தாதே; இராமன் திரும்பி வருவதற்குள் பரதனுடைய அதிகாரம் பலப்பட்டுவிடும். அப்போது இராமனுக்கு நாடு கிடைக்காதே எனில், இராமனுடைய அம்புக்குமுன் யார்தான் நிற்பர்? அப்படிப்பட்டவனுக்கு இந்த பூமியை அடைவது ஒரு பொருட்டா? இராமன் காட்டிலிருந்து திரும்பிவந்து ஒரு நொடியில் இந்த நாட்டைக் கைப்பற்றிக்கொள்வான். இராமன் முடி சூடுவதை உன் கண்குளிரக் காண்பாய்; கவலைப்படாதே" என்று தேற்றினள். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

இராமனைத் தசரதன், தன்னை விலக்கி அரசாளும்படித் தூண்டுகிறுன். முன்னரும் "இராமன் என் சொற்படி கேளாமல் முடிசூடிக் கொள்வானேல் அது எனக்கு மிகவும் விருப்பமான செயலாகும்." என்கிறுன். இதெல்லாம் தசரதனுடைய இழிகுணத்தையே காட்டும்.

சுமந்திரன் அரசனுக்குக் கைகேசியினிடத்தில் பற்றுதல் ஒழிந்தது என்பதைத் தெரிந்துகொண்டு தகாத முறையிற் கண்டித்துப் பேசுகிறுன். இது அவனுடைய தாழ்ந்த குணத்தையே உணர்த்தும். இதை அரசன் முதலியோரும் கேட்டிருப்பது மிகவும் விந்தையே. தசரதனும் வசிட்டனும் பலவிதமாக வாயடி அடித்தாவது கைகேசியின் புத்தியைக் கலக்கித் தங்கள் எண்ணத்தைச் சாதிக்கலாமென நினைத்து "களஞ்சியங்களும் சேனைகளும் இராமனுடன் போகட்டும், இல்லையேல் நாங்களும் அவனுடன் போவோம்" என்கின்றனர். கைகேசி இதற்கு இடங்கொடாதபோது தசரதன் "நீ அரசைக் கேட்டாயேயொழிய களஞ்சியங்களையும் சேனைகளையும் சேர்த்துக் கேட்டனையா?" என்று கடாவுகிறுன். இவ்விடத்து மொழிபெயர்ப்பாளராகிய திரு. சீனிவாசய்யங்கார் குறிக்கும் குறிப்பு கவனிக்கத் தக்கது. அது வருமாறு:—"ராஜ்யமென்றுல் அதில் சகல அங்கங்களும் கூடினதென்பதை தசரதர் அறியாதவர்போல் வாயடி அடிப்பது ஆச்சரியமே!"

அறிவில்லாதவனுகிய வசிட்டன் இதற்கும் கேவலமாக நடந்து கொள்கிறுன். அவன் "இராமன் வேண்டுமானுல் காட்டுக்குப் போகட்

டும்; அவன் மனைவி சீதை அரசாளட்டும்'' என்கிறான். இவ்விடத்தும் மொழிபெயர்ப்பாளர் ஐயங்காரது குறிப்பு கவனிக்கத்தக்கது. அது வருமாறு;—"இராஜ்யத்தைப் பரதனே ஆளவேண்டுமென்பதே கைகேசி பெற்ற வரமென்பதை இவர் ஏன் மறந்தார்?''

தசரதன் கைகேசியை மணக்குமுன் செய்துக்கொடுத்த சத்தியத்தை அறிந்த சுமந்திரன், வசிட்டன் முதலியோர் அரசனைத் தடுக்காதிருந்ததோடு தெய்வாதீனமாக வேறுவிதத்தில் தற்செயலாய் உண்மையறியாது நாட்டைப் பெற முனைந்துநின்ற கைகேசியைக் கண்டித்தது அவர்களுடைய அற்ப குணத்தையே காட்டும். இவ்வசிட்டனை மிகச் சிறந்த முனிவனென்கின்றனரே! உண்மை, உண்மை! அயோக்கியத்தனத்திலும் பொய்மையுடைமையிலும் இவ்வசிட்டன் மிகச் சிறந்தவனே! இனியாவது உலகம் இவ்வசிட்டனை முழு அயோக்கியனென்றுணருமா? இவ்விடத்து அதாவது அயோத்தியா காண்டம் முப்பத்தேழாம் சருக்க ஈற்றில் (பக்கம் 163) மொழி பெயர்ப்பாளர் சீனிவாசய்யங்கார் பி. ஏ., குறித்துள்ள செய்தி மிகவும் ஊன்றி கவனிக்கத்தக்கது. இதனை நண்பர்களனைவரும் கவனித்துப் படித்து உண்மையறிவார்களாக. அக்கூற்று வருமாறு:—"கைகேசியை விவாகம் செய்தபொழுது அவளுக்குப் பிறக்கும் புத்திரனுக்கே இராஜ்யம் கிடைக்கவேண்டுமென்று அவளுடைய பிதா தசரதனிடத்தில் உறுதி வாங்கிக்கொண்டிருக்கிறார். இது இராமனுக்கும், வசிஷ்டருக்கும், சுமந்திரர் சித்தார்த்தர் முதலிய மந்திரிகளுக்கும் தெரிந்த விஷயமே, இது முதலாவது பாத்தியம். அரசன் வரங்களைக் கொடுத்தது இரண்டாவது பாத்தியம். எதைக் கேட்டாலும் கொடுப்பதாய் அரசன் மறுபடியும் பிரமாணம் செய்தது மூன்றாவது பாத்தியம். இராமனும் அப்படியே செய்தது நான்காவது பாத்தியம். ஆகையால் இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய அரசன் ஏற்பாடு செய்ததும், இராமன், வசிஷ்டர், மந்திரிகள் அதைத் தடுக்காததும் எல்லோரும் கைகேசியைத் தூஷிப்பதும் ஆச்சரியமே!''

தசரதன் கைகேசி வயிற்றுப் பிள்ளைக்கே பட்டத்தைத் தருவதாகச் சத்தியஞ்செய்துக் கொடுத்த செய்தி இராமாயணத்திலேயே இராமன் வாயிலிருந்துதான் அறிய இருக்கிறது. பரதன் இராமனை அழைக்கச் சித்திரகூடம் சென்றபோது அங்கே பரதனை நோக்கி

இராமன் இச்செய்தியை விபரமாகக் கூறுகிறான். (அயோத்தியா காண்டம்—சருக்கம் 107.) இதனால் இராமனும் இச்செய்தியை அறிந்துகொண்டுதான் அவன்மயக்குற்ற தசரதனுடைய சூழ்ச்சிகளுக்கு உடந்தையாயிருக்கிறான். வசிட்டன் சுமந்திரன் முதலிய பஞ்சமாபாதகர்களும் இதற்கு உடந்தையாயிருக்கிறதோடு நில்லாமல் கைகேசியையும் பலவாறு தூற்றுகின்றனர். ஆனால் அவள் எதற்கும் இடங்கொடுக்கவில்லை.

சித்தார்த்தன் என்ற பிரதானி கூற்றில், சகரனென்ற ஆரிய மன்னன், தனது மகனாகிய அசமஞ்சன் என்பான் ஊர்ப் பிள்ளைகளைத் தூக்கித் தண்ணீரில் போட்டு அவர்கள் முக்கி முக்கிச் சாவதை வேடிக்கையாகப் பார்த்துக் கொன்ற கொலைப் பாதகங்களுக்குத் தண்டனையாக அவனை நாடு கடத்தினன் எனத் தெரிகிறது. இத்தகைய கொலைப் பாதகனாகிய அசமஞ்சனுக்கு நாடு கடத்துதல் ஒரு தண்டனையா? தன் மகன் செய்த பாதகத்துக்கு இவ்வாறு தண்டனை விதித்துப் பிறருக்கு வேறு விதமான தண்டனை விதிக்கும் அரசர்கள் பலர் வேண்டும்! அவ்விதமான வழியில் பிறந்த தசரதன், உரிய மகனாகிய பரதனை வஞ்சித்து மற்றொரு மகனாகிய இராமனுக்கு நாட்டைக் கொடுக்க முற்பட்டது ஆச்சரியமல்ல!

இராமன் மிகவும் பேராசையுடையவன். ஆனால் தன் தீய எண்ணத்தைப் பிறர் அறியாதவாறு நடந்துகொள்ளக்கூடிய நுண்ணறிவுடையவனென்பதை முன் பல இடங்களில் விவரித்தெழுதினோம். அதனால் தசரதனை தன் அரசைப் பிடுங்கிக்கொள் என்று தூண்டியும் அந்நன்மை பயவாத சொற்களுக்கெல்லாம் இராமன் இணங்கவில்லை. இராமனுக்கு உண்மையில் கைகேசியினிடத்தில் மிகவும் கெட்ட எண்ணம். ஆனால் வெளிக்கு அவளிடம் மிகவும் அன்புள்ளவன்போலப் பாசாங்கு செய்திருக்கிறான். இவன் இலக்குவனை உடனழைத்தேக மறுத்தபோது (சருக்கம் 30) "நீயும் காட்டுக்கு வந்துவிட்டால் கோசலையைப் பாதுகாக்க யாருளர்? அரசனோ மன்மத பாசங்களால் கட்டப்பட்டுப் பிறருடைய மனப்படி நடக்கிறார். கைகேசியும் நமது தாய்களுக்கு நன்மையைச் செய்யவேமாட்டாள், பரதனோ கைகேசிக்கு உட்பட்டவனாதலின் அவள் செய்யும் தீமைகளைத் தடுக்க முடியாது. மேலும் அவன் கோசலையை நினைக்கவேமாட்

டான்" என்று கூறியிருக்கிறான். இதனால் கைகேசியைப்பற்றி மிகவும் கெட்ட எண்ணத்தை இலக்குவனுக்கு உண்டுபண்ணுகிறான். மேலும் தசரதனிடம் விடைபெறும்போது "தந்தையே! எனது தாயை அவளுடைய பகைவர்வசம் காட்டிக்கொடுத்துவிடக்கூடாது", என்று தசரதனைக் கண்டித்து வேண்டுகிறான். மற்றும் தனது தாய் கோசலையைத் தன்னுடன் வரத் தடுக்கும்போது (சருக்கம் 24) "தாங்களும் கைகேசியால் வஞ்சிக்கப்பட்ட என் பிதாவைக் கைவிட்டால் அவர் பிழைக்கமாட்டாரென்பது நிச்சயம்" என்று கூறியிருக்கிறான்.

இராமன் பொய்யன் என்பது மேலே கண்ட வரலாற்றால் தெரிய வருகிறது. அவன் சுமந்திரனைப் பொய் புகலுமாறு தூண்டுகிறான். இவ்வாறு இராமன் பலவிதத்திலும் தீயவனாகவே இருந்திருக்கிறான் என்பது தெரியவருகிறது. தனது சகோதரனாகிய பரதனை வஞ்சிக்க முன்னின்றானெனின் இதைவிடப் பெரியதோர் பாதகம் வேறு யாதுளது? இத்தகைய இராமனாகிய ஆரியனைத் தமது தெய்வமெனத் தமிழ் மக்களிற் சிலர் ஏமாந்து நினைத்து நம்புகின்றனரே!

இனி தசரதனது தீய சிந்தையை ஆராய்வோம். இவன் வசிட்டன் சுமந்திரன் முதலியவர்களைக் கைவசப்படுத்திக்கொண்டு அவர்களுடைய உதவியால் தன் அன்புக்குரிய மகனாகிய இராமனுக்கு முடிசூட்ட அநியாயமாக முயல்கின்றான். இவன் தன் தந்தைக்குத் தன்னை மணக்குமுன் செய்துக்கொடுத்த வாக்குறுதியை அறியாதவளாகிய கைகேசி, தெய்வாதீனத்தால் மனம் மாறி தான் முன் பெற்றிருந்த இரண்டு வரங்களைக் காரணமாகக் கொண்டு பரதனுக்கு நாடும் இராமனுக்குக் காடும் பெறுகிறாள். பெறும்போது தசரதன் அவளைத் தன் மனைவியல்லள் என்றும், பரதன், இராமன் காடேகுவதை விரும்பினால் தன் உத்தரகிரியைகளுக்கு உரியவனாகானென்றும் பயமுறுத்துகிறான். பின்இராமன் காட்டுக்குப் போனபோதும் அவ்வாறே கூறுகிறான். தானியம், செல்வம், சேனை இவைகளையெல்லாம் இராமனிடம் அனுப்பிவிடுவதாகப் பயமுறுத்துகிறான்.

கைகேசியிடம் இந்தப் பருப்பெல்லாம் வேகவில்லை. அவளுக்கு தசரதன் கேகய மன்னனிடம் செய்துக்கொடுத்திருந்த வாக்குறுதி மட்டும் தெரிந்திருந்தால் நிலைமை வேறுவிதமாக இருந்திருக்கும்.

அவள் அதைக் கூறி தசரதனுடைய துரோகத்தைக் குடிகளெல்லோரும் அறியுமாறு செய்திருப்பாள். அப்படியானல் தசரதன், இராமன், வசிட்டன், சுமந்திரன் இவர்களுடைய சூழ்ச்சிகளையெல்லாம் குடிகள் தெரிந்து இராமன் முதலியோரை வெறுக்கத் தலைப்பட்டிருப்பர். அப்போது இராமன் அரசனுவது முடியாத காரியமாகிவிடும். அதனுலேதான் அந்த மட்டோடு காடேகி வேறு வகையாகப் பரதனை ஏமாற்றி அரசைக் கைக்கொள்ளலாமென இராமன் நினைத்தான். அதனுலேயே அவனை ஒருவராலும் காட்டிற்குப் போகாது தடுக்க முடியவில்லை.

பரதனே, தசரதனுக்கு மிகவும் காதல் மிக்க மனைவியாகிய கைகேசியின் மகன். அவனை வஞ்சித்து சத்தியத்திற்கும் விரோதமாக இராமனுக்குக் கள்ளத்தனமாக முடிசூட்டுமாறு தசரதன் முயல்வானேன்? இது மிகவும் முக்கியமானதொரு செய்தியே. இதைப்பற்றி முன் கட்டுரைகளில் ஒருவாறு ஆராய்ந்தோம். இங்கே அதை விபரமாகக் கவனிப்போம்.

பரதனுக்குரிய அரசை இராமனுக்குத் தர தசரதன் முயல்கிறுன். பரதனை வேண்டுமென்று நாட்டைவிட்டு அனுப்பினுன். இப்போது இராமன் நாட்டைவிட்டு அதுவும் ஒரு குறித்த கால அளவுக்குப் பிரிந்திருக்கச் சம்மதிக்கமாட்டேனென்கிறுன். இராமனே இலக்குவனேடு காட்டுக்குப் போகிறுன். ஆனுல் இலக்குவன் போவதைப்பற்றி தசரதன் ஓர் சொல்லும் சொல்லவில்லை. அவன் காடேகுவதைப்பற்றிய கவலையும் தசரதனுக்குக் கொஞ்சமும் இருந்ததாகத் தெரியவில்லை. இதை மொழிபெயர்ப்பாளருளொருவராகிய சீனிவாசய்யங்காரும் கவனித்து ஓர் குறிப்புமெழுதியிருக்கிறுர். அயோத்தியாகாண்டம் சருக்கம் 38, பக்கம் 164-ல் "லக்ஷ்மணனைப்பற்றித் தசரதர் பேசுவதேயில்லை. இந்தவிடத்தில் ஏதோ வாய்தவறி அவனுடைய பெயரைச் சொல்லிவிட்டார்போலும். காட்டிற்குப் போகையிலும் அவனுடன் பேசவில்லை; ஆசிர்வதிக்கவுமில்லை; வருந்தவுமில்லை. ஆச்சர்யம்!" என்று அவர் ஆச்சர்யத்துடன் குறித்துள்ளார். இவ்விதமாக மற்றைய மக்களிடத்தில் பராமுகமாகவும் வெறுப்பாகவும் நடந்துகொள்ளுவதற்கும், இராமனிடத்தில் மட்டும் மிகவும் பற்றுதலோடு நடப்பதுடன் அவனுக்காகத் தன் உயிரையும் கொடுக்கத்

தயாராயிருப்பதற்கும் வேறு காரணம் வேண்டும். இல்லையேல் இத் தசரதன் இவ்வாறு நடக்கக் காரணமேயில்லை.

தசரதனுக்கு எண்ணிறந்த மனைவிகளிருந்தனரென அறிகிறோம். அவர்களுள் கைகேசியைத் தவிர இராமனுடைய தாயாகிய கோசலையுட்பட எல்லா மனைவியரையும் தசரதன் வெறுத்தனனென்றும் அறிகிறோம். இதைப்பற்றி இராமன்கூடக் காடேக விடைபெறும்பொழுது அவனைக் கண்டிக்கிறான். இதற்குக் காரணம் ஏனைய பெண்களினும் கைகேசி பெற்றிருந்த அழகும் அறிவுமே. அவளுடைய பேரழகில் அவன் தானே ஈடுபட்டான். அவளுடைய அறிவால் அவனுக்கு மிகவும் அன்புடையாள் போல அவள் நடந்த நடை, அவனை அவளிடத்தில் மேலும் மேலும் அதிகமான பற்றுதலோடிருக்குமாறு செய்தது. இவ்விதமானதே இவனுக்கு இராமனிடத்தில் ஏற்பட்ட பற்றுதலும்.

இராமன் இயல்பாகவே பேரழகன். அவனுடைய சிறந்த அறிவால் தசரதனிடத்தில் நெருங்கிப் பழகி அவனுடைய பற்றுதலுக்கும் இடமானான். தசரதன் இராமனுடைய அழகில் ஈடுபட்டுப் போலி ஒழுக்கத்தால் மேலும் மயங்கி, கிழவனானபடியால் கைகேசியிடத்தில் கொண்ட பற்றைப்போல இவனிடத்திலும் பற்றுதல் கொண்டு இவனை எப்போதும் தன் பக்கத்தில் வைத்துப் பார்க்க வேண்டும் என்றும், அடிக்கடி மார்போடு தழுவவேண்டும் என்றும் மிகவும் விரும்பினான். இதனாலேயே தசரதன் இராமனை ஏனைய மக்களினும் அதிகமாக நேசித்து அவனுக்காக எத்தகைய வஞ்சகத் தீய செயல்களையும் கள்ளத்தனமாகச் செய்யத் தயாராகிறான்.

விசுவாமித்திர முனிவன் இராமனை அழைக்க வந்தபோது தசரதன் (பாலகாண்டம் சருக்கம் 20) "இராமன் நால்வரில் மூத்தவன், மற்றவர்களைவிட அவனிடத்தில் எனக்கு விசேஷ பிரேமை, அவனை விட்டுப் பிரிந்தால் ஒரு முகூர்த்தமாவது என் உயிர் தங்காது" என்று கூறுகிறான். அயோத்தியா காண்டம் முதற் சருக்கத்திலும் மற்றைய பிள்ளைகளைவிட இராமனிடம் அவன் அதிகப் பற்றுதல் வைத்திருந்தானென வால்மீகி கூறுகிறார். அதனாலேயே அவனுக்கு முடி சூட்டி அவனழகைப் பார்க்க விரும்புகிறான். மூன்றாம் சருக்கத்தில் வால்மீகி நமது கருத்தைத் தெளிவாகக் கூறுகிறார். "இராம

னுடைய அழகை எத்தனை தடவை பார்த்தாலும் போதுமென்று தோன்ருது. உத்தம லக்ஷணங்களும் அழகும் வாய்ந்த புருஷனைக் கண்டு ஸ்திரிகளுடைய மனம் களிக்கும். தன்னைப் பார்க்கும் புருஷர்களுடைய கண்களையும் மனதையும் இராமன் கொள்ளைகொள்ளுகிறவன். கோடை காலத்து வெய்யிலில் தபிப்பவர்கள் மழையைப் பெய்து குளிர்ச்சியைக் கொடுக்கும் மேகத்தை எத்தனை முறை பார்த்தாலும் திருப்திபடையாததுபோலத் தன்னை நோக்கி வரும் இராமனைப் பார்த்துப் பார்த்து தசரதன் திருப்தி அடையவில்லை. அவன் இராமனைக் கைகளாற் பற்றி யெடுத்து இறுகத் தழுவி ஆனந்த பரவசனானன்." எனக்கூறுகிருர். அயோத்தியாகாண்டம் சருக்கம் பதினொன்றில் இதையே வால்மீகி முனிவர் தசரதன் வாக்காலும் மிகவும் விளக்கமாகக் கூறுகிருர். தசரதன் கைகேசியைத் தூக்கி மடிமீது வைத்துக்கொண்டு "அழகில் ஈடற்றவளே! பெண்களுக்குள் உன்னைக் காட்டிலும் எனக்குப் பிரியமானவர்களுமுண்டோ? அதைப்போலவே ஆண்களுக்குள் இராமனைக்காட்டிலும் எனக்குப் பிரியமானவர்களுமுண்டோ? என் உயிரினும் சிறந்தவனாகிய அந்த இராமன்மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். ஒரு முகூர்த்த காலமாவது எவனைப் பார்க்காமலிருந்தால் என் உயிர் தரிக்காதோ, அந்த இராமன்மேல் ஆணையிடுகிறேன். உன் எண்ணத்தைச் சொல். என் தேகத்தையும், பிராணனையும், பரதன் முதலிய மற்றப் புத்திரர்களையும், மற்ற பந்துக்களையும் இழக்கச் சம்மதிப்பேன்; இராமனை மாத்திரம் விட்டுப் பிரியச் சம்மதிக்க மாட்டேன்; அவன்மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன்; உன் மனதிலிருக்கும் விருப்பத்தைச் சொல்" என்று வேண்டிக்கொள்கிருன். இது கைகேசி வரத்தைக் கேட்காத முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சி. இதனுல் இராமனிடம் அவன் கொண்ட மோகம் இன்னவிதமானதென்று கூறுகிருன். குடி வெறியரும், காம வெறியரும், கவலை மிக்கு மனமுடைந்தாரும் தங்கள் மனதிலுள்ள உண்மை யெண்ணங்களைப் பிறரறியுமாறு கூறுவாரென்பது அறிஞர்கள் முடிபு. அவ்வாறே காம வெறி மிக்குடைய தசரதன் தன் மனதில் தோன்றுகிற எண்ணங்களை ஒளியாமல் வெளியிட்டுள்ளான். அதுவும் கைகேசி முன்னிலையிலேயே "உன்மேல் அன்பு கொண்டது போல ஆனை இராமனிடமும் அன்புடையேன்; உன் மகன் பரதன்

முதலியோரை இழக்கச் சித்தமாயிருக்கிறேன். ஆனால் இராமனைச் சிறிது நேரம் விட்டுப் பிரியவும் சம்மதியேன்'' என்று கூறவேண்டு மானால் அவன் இராமனிடம் கொண்டிருந்த மயக்கம் எத்தன்மைய தாயிருத்தல் வேண்டும்?

சருக்கம் 12-ல் "என் மூத்த மகனான இராமனைப் பார்க்கப் பார்க்க எனக்குப் பிரீதி வளர்கிறது. அவனை ஒரு கணம் பார்க்காம லிருந்தாலும் என் உயிர் போய்விடும். இராமனில்லாமல் என் தேகத் தில் பிராணன் நிற்காது'' என்று கதறிக்கொண்டு தசரதன் கைகேசி காலில் விழுகிறான். "நான்கு பிள்ளைகளுக்கும் இந்த நாட்டைச் சமமாகப் பிரித்துக்கொடுக்கிறேன். அல்லது பரதனுக்கு முடிசூட்டுவிக்கிறேன், இராமன் மாத்திரம் வயது சென்ற என்னரு கில் இருக்கும்படி ஒப்புக்கொள். இப்படிச் செய்யாவிட்டால் உன் எண்ணம் நிறைவேறாது'' என்று மறுபடியும் கூறுகிறான்.

"இராமன் காட்டுக்குப் போகேனென்று கூறிவிட்டால் அது எனக்கு மிகவும் மகிழ்ச்சியைத் தருமே'' என்று இராமனுடைய பொய்யொழுக்கத்தை விரும்புகிறான். பின் விடை பெற வந்த இராமனை முறட்டுத்தனத்தால் அரசனாகும்படி தூண்டுகிறான். இவ் விதமெல்லாம் செய்வதற்குக் காரணம் அவன் இராமனிடம் கொண் டிருந்த காமமேயாகும்.

இராமனுக்கு அரசைத் தர பலவிதத்திலும் முயன்றும் பலன் பெறாமல் காட்டுக்குப் போகும் இராமனைத் தொடர்ந்து ஓடுகிறான். இலக்குவனைப்பற்றி அவன் பேசவுமில்லை, வாழ்த்தவுமில்லையென முன்னரே குறித்துள்ளோம். பரதனை வேண்டுமென்று நாட்டை விட்டனுப்பினான். இராமனை அனுப்ப வருந்துகிறான். இராமன் போகும்போது அவனை நோக்கியே வருந்துகிறான். இலக்குவனை நோக்கி ஒரு சிறிதும் வருந்தவில்லை. இராமன் விரைவாகப் போக அவன் கண்ணுக்கு மறைகிற வரை அவனைப் பார்த்தபடியே நிற் கிறான். அவ்விடத்திலிருந்து தன் கண்களை அவன் எடுக்கவேயில்லை.

இராமனை வழியனுப்புமுன் தசரதன் (சருக்கம் 34) "இன்று இரவு நீ புறப்படுவதில் எனக்குக் கொஞ்சமேனும் பிரியமில்லை. நீ போகவே கூடாது. உன்னை ஒரு இரவு முழுவதும் பார்க்கும் நன்மை

யாவது எனக்குக் கிடைக்குமல்லவா?" என்று கூறி அன்றிரவு மட்டுமாவது அவனைத் தன்னருகில் வைத்துப்பார்க்க விழைகின்றான். இராமன் போனபின் திரும்பி வரும்போது தசரதன் "நல்ல சந்தனங்களால் அலங்கரிக்கப்பட்ட உடலுடன் சுகமான தலையணைகளின்மேல் சாய்ந்துகொண்டு அழகு வாய்ந்த வேலைக்காரிகள் விசிறி போடத் தூங்கிய இராமன் இன்றிரவு எந்தக் காட்டிற் படுப்பான்? இராமனில்லாமல் ஒரு நொடியாவது என்னால் பிழைக்க முடியாது." (சருக்கம் 42) என்று இராமன் உடலழகையே நினைத்து அதைப் பார்த்து மார்புறத்தழுவ இடமில்லையே யென்று ஏங்குகின்றான். இராமன் இவ்விதமான செயல்களுக்கும் மனமிசைந்தவனே என்பது வாயில் காவலராகிய கிழவரும் அவனைக் காணுந்தோறும் மார்புறத் தழுவுவர் என்று முந்திய கட்டுரையில் இனிது விளக்கினேம். பல அழகிய பெண்கள் விசிற இராமன் படுத்துறங்குவானென்பதால் அவனுடைய ஒழுக்க நிலை இன்ன தன்மையதென விளங்குகிறது (சருக்கம் 42).

அரண்மனையை யடைந்தவுடன் தசரதன் "இராமன் தாயான கோசலை வீட்டிற்கு என்னைச் சிக்கிரத்தில் கொண்டுபோய் விடுங்கள். அதைத் தவிர வேறிடத்திலிருந்தால் என் ஏக்கம் தணியாது" என்கிறான். கோசலையின் அந்தப்புரம் அடைந்தவுடன் கட்டிலிற் படுத்துக்கொண்டு இரவில் தசரதன் கோசலையைப் பார்த்து "உன் கையால் நன்றாக என்னைத் தொடு; இராமனுடன் காட்டிற்குப்போன கண்கள் இன்னும் திரும்பிவரவில்லை. அவனைப் பார்க்கும் நல்வினை எனக்கில்லாமற் போனாலும் அவனைப் பெற்ற உன்னைப் பார்க்கவும் என் கண்களால் முடியவில்லை. அவனைப் பார்த்த கண்கள் அவனுடைய அழகிலேயே ஈடுபட்டு அவனுடன் போயின. போனவை திரும்பி வருமா? இராமனைப் பார்க்காமல் தவிக்கும் எனக்கு அவனைப்பெற்ற உன்னைத் தொட்டால் அந்தத்தாபம் நீங்கும். இராமனைப் பார்க்கா விட்டாலும் அவனுடைய தாயான உன்னைப் பார்த்துப் பேசித் தொடுவதால் அதற்குச் சமமான சுகம் கிடைக்கும். என்னை மன்னித்து உன் கைகளால் அன்புடன் தொடு" என்று தவிக்கிறான். இது துன்ப மிகுதியால் அவனுடைய உள்ளக்கிடை வெளியான இடம். இதனால் தசரதன் இராமனாகிய ஆண்மகனுடைய அழகில் ஈடுபட்டு மிகக் கிழவனானதால் அவனைப் பக்கத்தில் வைத்துப் பார்த்

துப்பேசி அவனைத் தொட்டு மார்போடு அடிக்கடி அணைப்பதால் ஏதோ சுகம் கிடைக்கிறதென மயங்கி அச்சுகத்திலேயே ஈடுபட்டு அதனால் அச்சுகம் தரும் இராமனுக்காக தனது மகனான பரதனை வஞ்சித்துப் பல அக்கிரமமான செயல்களைச் செய்யத்துணிந்து, புரிகின்றனனென்பது வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றது.

தசரதன் தன்னைத் தொடுமாறு எத்தனை தடவை புலம்பினாலும் கோசலை எண்ணம் சுயநலத்திலேயே இருக்கிறது. அவள் அவனைத் தொடாமல் கைகேசி தனக்குச் செய்யவிருக்கும் கேடுகளை நினைத்துப் புலம்பி இராமனைக் காட்டுக்கனுப்பாதிருந்தால் அவனைப் பிச்சையெடுத்தேனும் பிழைக்கச் செய்கிறேனென்று அகங்காரத்துடன் கூறி மேலும் மேலும் அவனை வருத்தத் தொடங்குகின்றாள். இத்தகைய கோசலையைக் கற்புடையாளுக்கோர் எடுத்துக் காட்டாகக் கூறுதல் மிகவும் பொருந்துமன்றோ? என்னே அவளுடைய இழிதகைமை!

கோசலை சீதையை வழியனுப்பும்போது கூறிய பேச்சால் அவளும் சீதையின் நடையில் ஐயுறவுடையவளாகவே தெரிகிறது. அதற்குச் சீதை கூறிய மறுமொழி பொருத்தமானதே! கடைசியாக சுமித்திரை கோசலையைத் தேற்றும்போது கூறும் மொழிகளால் அவர்களெல்லோரும் எப்படியாவது பரதனைக் கொன்றேனும் இராமன் நாடுபெறவேண்டுமெனவே சூழ்ந்திருந்தனரென்பது தெளிவாகிறது. நிற்க, இவ்வரலாற்றைக் கம்பர் எவ்வாறு கூறுகின்றனரென ஆராய்வோம்.

"முழுப் பூசனிக்காயைச் சோற்றில் மறைப்பது இயலுமா" என ஒரு பழமொழி வழங்குகிறது. அதன் கருத்து, பூசனிக்காய் மிகவும் பெரிய உருவினதாதலின் அதை உண்ணுவதற்காக இலையில் படைத்துள்ள சோற்றில் மறைத்தல் இயலாது என்பது; அதாவது பெரிய பொய்களைக் கூறினால் உலகம் கண்டுபிடித்துவிடும் என அறியலாம். கம்பரோ முழுப் பூசனிக்காயைச் சோற்றிலே மறைத்துளர். அதாவது கம்பர் இக்கட்டுரையிலுள்ள கதை முழுவதையுமே மறைத்துவிட்டார். இத்தகைய பெரும் புளுகரைத் தமிழ்த்தாய் எங்ஙனம் பெற்றாள்! இவரால் தமிழன்னைக்கு அவமானமே ஒழிய பெருமையன்று. சிலர் திருவள்ளுவருடன் இக்கம்பரையும் இணையாகக் கூறுகின்றனர். அவர்கள் இக்கம்பருடைய பொய்ம்மை

நிறைந்த உருவினையும் திருவள்ளுவருடைய உண்மை உருவினையும் சற்றுத் தம் சித்தத்தில் சிந்திப்பரேல் தாம் எண்ணுவது மிகவும் நிமையைத்தரும் எண்ணமென உணர்வது திண்ணம். ஏனெனில் மெய்ம்மையே ஒருருவாம் தெய்வப்புலமைத் திருவள்ளுவர் முன் பொய்மையே ஒருருவாம் கம்பரையும் எண்ணுவது அறக்கொடுஞ் செயலே.

கம்பர் தசரதனைப் பிரேதம்போலக் கிடத்திவிட்டு இராமனை அவன் முன்னிலையில் போனதாகவே கூறுமல் தாய்மார்களிடம் விடைபெற்றுத் தேரேறிச் சென்றான் எனக்கூறிச் செல்கின்றனர். இக்கதையைக் கூறும் அவர் பாடல்கள் மூன்றே. அவை பின் வருவன :— (இராமன்)

1. தாதைவாயிற் குறுகினன் சார்தலும்
கோதைவேலவன் தாயரைக்கும்பிடா
ஆதிமன்னனை ஆற்றுமின் நீரென்றான்
மாதராரும் விழுந்து மயங்கினர் !

2. எத்தினர் தம்மகனை மருகியை
வாழ்த்தினர் இளையோனை வழுத்தினர்
காத்துநல்குமின் தெய்வதங்காளென்றார்
நாத்தழும்ப அரற்றி நடுங்குவார் !

3 அன்னதாயரிதிற் பிரிந்தபின்
முன்னர்நின்ற முனிவனைக் கைதொழா
தன்னதாருயிர்த் தம்பியும் தாமரைப்
பொன்னும் தானும் ஓர் தேர்மிசைப் போயினன் !

வால்மீகி வரலாற்றுப்படி இராமன் வசிட்டனை வணங்கவில்லை; கம்பர் வணங்கிச் சென்றனென்கின்றனர்.

தசரதனுக்குக் கோசலை முதலிய மூவரும் நீங்கலாக முன்னூற் றைம்பது (350) மனைவியரே இருந்தனரென வால்மீகி (அயோத் தியாகாண்டம் சருக்கங்கள் 34, 39) கூறுகின்றனர். கம்பரோ அவனுக்கு அறுபதினாயிரம் (60,000) மனைவியரிருந்தனரென்கின்ற னர். அயோத்தியாகாண்டம் தைலமாட்டு படலம் எழுபத்தேழா வது செய்யுளில் "மாதரார்கள் அறுபதினாயிருமுள்ளம் வலித்

திருப்ப'' என்று கம்பர் கூறுகிறார். மூந்நூற்றைம்பதுக்கும் அறுபதினாயிரத்துக்கும் எவ்வளவு தூரம்? கம்பர் கதைகட்டும் திறம் வியக்கத்தக்கதே! என்னே இவர் தம் பொய்மை? இவ் வெண்ணை இவர் யாண்டுக்கண்டனரோ?

திருவாளர். சந்திரசேகரப்பாவலரவர்களை

## வினாவும் வினாத்தொடர்.

---

திரு. பாவலர் அவர்களே! தாம் "குடி அரசில்" இதிகாசங்கள் என்ற தலைப்பின கீழ் எழுதிவரும் இராமாயணத்தைப்பற்றிய கட்டுரைகள் வான்மீகத்தைப் பின்பற்றியே வெளியிட்டு வருவதாக பன் முறையும் தெரிவித்திருக்கின்றீர்களாதலின் ஈண்டு சில ஐய வினாக்களுக்கு விடையளிக்குமாறு விரும்புகின்றேன்.

1. 25-11-28ல் வெளிப்போந்த 'குடி அரசில்' அயோத்தியா காண்டம் கட்டுரை 6 ல் 'கைகேசியை மணஞ்செய்யும்போது அவள் வயிற்றில் பிறக்கும் பிள்ளைக்கே அரசைத் தருவதாக வாக்குறுதி செய்தான பின் அதற்கு மாறாக இராமனுக்குப் பட்டங்கட்ட முயலுகின்றான் தசரதன்' என்று வெளியிட்டிருக்கின்றீர்கள். இவ் விபரம் அயோத்தியா காண்டத்தில் எந்த அத்தியாயத்தில் எவ் வெண்ணுள்ளொடாத்த சுலோகத்தில் கூறியிருக்கின்றது.

2. அவ்வாறாயின் பட்டம்பரதனதேயாகவேண்டுமென வாதிடு வதை விட்டு என்றோ சம்பரன் போரிற் கிடைத்த இரு வரங்களை யாசித்து ஈரேழாண்டு பரதன் நாடாளவும் இராமன் அது காலம்வரை காடேகவும் அதனால் சொற்பகாலம் வரை அற்ப சுகமடைந்து அதற்காக தீராக்கோபம் போராய் விளைவித்துக்கொள்வானேன்? இது உள்ளங்கைத்தேனை ஒழுகவிட்டு முழங்கையை நக்கும் முட்டாள் தனமாகத் தோன்றவில்லையா?

3, ஓர் பெண்ணாகிய கைகேசியைக் காட்டிலும் ஓர் ஆணாகிய இராமனிடத்தில் அளவற்ற ஆசைகொண்டு பிரியமாட்டாமல் தவிப்பதற்கு ஏதாவது தகுந்த காரணங்களிருக்க வேண்டும். 'இராமனைத்

தசரதன் மிகுந்த அழகுள்ளவனைகப் புகழுவதினால் உலகத்தில் சில ரைப்போல ஆண் பித்துக் கொண்டவன் போலும். தன் ஆசைக்கு இருப்பிடமான இராமன் அருகில் இல்லாததால் கைகேசியின் மேல் சாய்கின்றான்' என்றதில் ஆண் பித்துக் கொள்ளுதல் என்றதன் கருத்தென்ன?

4. 'ஆரியர் வணங்கும் திருமால் வேறு, நம் தமிழ் மக்கள் வணங்கும் திருமால் வேறு' யென்று கூறி இதைப்பின்பு கூறுவதா யுரைத்து நீண்ட காலமாகியும் இதுவரை அது வெளியிடப்படவில்லை. அத்திருமாலைப்பற்றி எந்த நூலின் வாயிலாயுணரத்தகும்?

5. இராவணனுக்கு முக்கோடி வயதெனக் கூறியிருப்பதாக எடுத்தாண்டிருக்கின்றீர்கள். அவ்வாறு வான்மீகத்தில்யாண்டுளது?

இவ்வினாக்களுக்கு தயவுசெய்து தக்க நூல்களின் ஆதரவுடன் பதிலளிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

சுயமரியாதை அன்பன்,
கே. கூத்தப்பன், மேலூர்.

---

## திரு. K. கூத்தப்பன் அவர்களின்
## வினாத்தொடருக்கு விடை.

---

நண்பர் திரு. கே. கூத்தப்பன் விடுத்த வினாத்தொடரைக் கண்ணுற்றோம். வினாக்களில் ஒன்று இரண்டு மூன்றுக்கு விடை அயோத்தியாகாண்டம் ஒன்பதாவது கட்டுரையிற் பரக்கக்காண்க. வினாக்கள் நான்கும் ஐந்தும் இராவணனைப்பற்றி ஆராயுமிடத்து விளக்கப் படும். அதுவரை நண்பரை அன்பு கூர்ந்து பொறுத்திருக்கவேண்டுகிறோம்.

சந்திரசேகரப்பாவலர்.

---

## குறிப்புகள்.

---

இக்கட்டுரையில் நாம் நமது சொந்தமொழியாக ஒன்றும் கூறேம். கதைத்தொடர்ச்சியிலும் செல்லேம். ஆயின் மொழிபெயர்ப்பாளராகிய சென்னை சமஸ்கிருத காலேஜ் உபாத்தியாயர் திரு. சி. ஆர். சீனிவாச அய்யங்கார் பி. எ., தமது வால்மீகி இராமாயண வசனம்-அயோத்தியாகாண்டம் இரண்டாம் பதிப்பு(1925)கடைசியில் "அயோத்தியா காண்டக் குறிப்புகள்" என்ற தலைப்பிட்டு எழுதும் பாகத்திலுள்ள கீழேகண்ட குறிப்புகளை மட்டும் அவர் எழுதியுள்ளபடியே கீழே குறிக்கின்றோம். அவைகளை நண்பர்கள் கவனித்துப்படித்துஉண்மையுணர்வார்களாக. கதைத்தொடர்ச்சியும் ஆராய்ச்சியும் அடுத்த கட்டுரையில் எழுதுவோம்.

(1) "தசரதர் முன்பு தான் கைகேசிக்கு இரண்டு வரங்களைக் கொடுத்து, எதை வேண்டுமானாலும் கேட்கலாமென்று அஜாக்கிரதையாக வாக்களித்ததை மறந்ததும்,

(2) அவளை விவாகஞ் செய்தபொழுது அவளுக்குப் பிறக்கும் புத்திரனுக்கே இராஜ்யத்தைக் கொடுப்பேனென்று செய்த ஒப்பந்தத்தை மறந்ததும்,

(3) அறுபதாயிரம் வருஷங்களான பிறகும் காமஸுகத்திற்கு அடிமைப்பட்டுத் தன் மூத்த பார்யைகளான கோசலை சுமித்திரைகளைத் தகுந்தபடி நடத்தாமல் அலக்ஷ்யஞ் செய்ததும்,

(4) கைகேசியின் கோபத்தைத் தணிப்பதற்காக எதைக்கேட்டாலும் கொடுக்கிறேனென்று அஜாக்கிரதையாக வாக்களித்ததும்,

(5) முன்பு கைகேசிக்கும் அவளுடைய பிதாவிற்கும் செய்த பிரதிக்ஞைக்கு விரோதமாக இராமனுக்கு அதே இராஜ்யத்தைக் கொடுப்பேனென்று ஜனங்களுக்கு முன்பாக பிரதிக்ஞை செய்ததும்,

(6) பிறகு கைகேசி கேட்ட வரங்களைப் பூர்த்தி செய்ய வேண்டினதால் இராமனைக் காட்டிற்கனுப்பி அந்த பிரதிக்ஞை வீணானதும்,

(7) இப்படியெல்லாம் நியாய விரோதமாக நடந்ததால் அவருடைய பூர்வ பிரதிக்ஞையின்படி பரதனுக்குக் கிடைக்கவேண்டிய இராஜ்யத்தை அவன் அடையாமற் போனதும்,

(8) வசிட்டருடைய சொற்படி இக்ஷ்வாகு வம்சத்தில் பல தலைமுறைகளாய் மூத்த புத்திரனுக்கே இராஜ்யம் கிடைக்க வேண்டுமென்ற குல தர்மத்தை கேவலம் காமத்தால் தூண்டப்பட்டு ஒரு பெண்ணை விவாகஞ் செய்வதற்காகத் தசரதர் மாற்றினதும்,

(9) தான் அஜாக்கிரதையால் செய்த பிரதிக்ஞையின் பயனை வருந்தாமல் அனுபவிக்க வேண்டியிருக்க அவர் கைகேசியைக் குற்றஞ் சாட்டி நிந்தித்துச் சபித்து அந்த வரங்களை விட்டுக்கொடுக்கும்படி பிரார்த்தித்ததும்,

(10) தன்னையும் தன் தன்மையையும் மறந்து அவளுடைய கால்களைப் பிடித்துக்கொள்ள முயன்றதும்,

(11) முன்பு நடந்த விஷயங்களை நன்றாக அறிந்த சுமந்திரரும் வசிட்டரும் தசரதரை எச்சரித்து ஞாபகப்படுத்தி இராமனுக்கு அபிஷேகம் செய்ய நிச்சயிப்பது பூர்வ பிரதிக்ஞைக்கு விரோதமென்று தடுக்காமலிருந்ததும்,

(12) மூன்று காலங்களையுமறிந்த வசிட்டர் மேற்சொன்னதை மறந்து இராமனுக்கு யுவராஜ்பாபிஷேகம் நடக்காதென்று தெரிந்தும் அதற்கு முகூர்த்தம் வைத்து சகல ஏற்பாடுகளையும் செய்ததும்,

(13) தனக்கு நியாயமாகக் கிடைத்த வரங்களைப் பூர்த்தி செய்யும்படிக் கேட்ட கைகேசியை வசிட்டரும் சித்தார்த்தரும் சுமந்திரரும் தடுக்கப் பார்த்ததும் கண்டித்ததும்,

(14) இராமனுடைய அபிஷேகத்திற்காக பிரஜைகளின் சம்மதியை அபேக்ஷித்த தசரதர் பிறகு கைகேசிக்கு வரங்களைக் கொடுத்து அதன்படி இராமனைக் காட்டிற்கனுப்பினபொழுது மந்திரிகளையும் மஹாிஷிகளையும் பிரஜைகளையும் கொஞ்சங்கூடக் கலந்து கொள்ளாமல் யதேச்சாதிகாரமாக நடந்ததும்,

(15) அதே ஜனங்களும் மந்திரிகளும் அவருடைய நடத்தையைக் கண்டித்து அப்படிச் செய்யக்கூடாதென்று, தடுக்காமலிருந்ததும்,

(16) தன் வம்ச சரித்திரத்தையும் இராஜ்ய ரகசியங்களையும் நன்றாயறிந்திருக்க வேண்டிய இராமனும் பரதனும் முன்பு தசரதர் கைகேசியை விவாகஞ் செய்தபொழுது அவளுடைய புத்திரனுக்கே

ராஜ்யத்தைக் கொடுப்பதென்று செய்த ஏற்பாட்டை அறியாமலிருக்க முடியாதென்பதும் (அயோத்தியாகாண்டம் சரு. 107) அப்படியிருந்தும் தசரதர் தனக்கு அபிஷேகம் செய்விப்பதாய்ச் சொன்ன பொழுது அவருக்குப் பூர்வ விருத்தாந்தத்தை ஞாபகப்படுத்தாமல் அபிஷேகஞ்செய்துக்கொள்ள இராமன் சம்மதித்ததும்,

(17) 'இம்மாதிரி காரியங்களுக்குப் பலவகை இடையூறுகள் நேரும், உன் தம்பி பரதன் மிகவும் நல்ல எண்ணமுடையவனே, இந்திரியுங்களை ஜயித்தவனே, தயையுள்ளவனே, ஆனாலும் அவன் இங்கிருந்து அம்மான் வீட்டுக்குப்போய் நாளாயிற்று, தர்மசிந்தையுள்ளவர்களாயும் சாதுக்களாயும் பிறரால் கலக்கமுடியாத மனதுள்ளவர்களாயுமிருக்கும் மனிதர்களுடைய மனதும் மாறிவிடும், ஆகையால் பரதன் ஊருக்கு வருவதற்கு முந்தியே இந்தக் காரியத்தை முடிப்பது நல்லது'' என்று (அயோ 4) தசரதர் சொன்னதால் பரதனை வஞ்சித்து அவனுக்குக் கிடைக்கவேண்டிய இராஜ்யத்தை நயமாக இராமனுக்குக் கொடுக்க நிச்சயித்ததும், இராமன் அதற்கு ஆட்சேபிக்காமல் அதை ஒப்புக்கொண்டதும்,

(18) இராமனுக்குக் கிடைக்கவேண்டிய இராஜ்யத்தைத் தான் பரதனுக்குக் கொடுக்கும்படி முடிவில் ஒருவேளை நேரிட்டால் அந்த அக்கிரமத்தை ஜனகர் ஒப்புக்கொள்ளாமல் கண்டிப்பாரென்று அவருக்கு சமாசாரம் அனுப்பாததும்,

(19) பரதனுக்குக் கொடுப்பதாய் விவாக காலத்தில் பிரதிக்ஞை செய்த இராஜ்யத்தை இராமனுக்குக் கொடுப்பதாக நிச்சயித்ததைக் கேட்டால் கேகய மன்னன் ஆட்சேபிப்பானென்று அவனுக்குச் சமாசாரம் அனுப்பாமலிருந்ததும்,

(20) மற்ற அரசர்களுக்குச் சொல்லி அனுப்பியதும் சிக்கலான விஷயங்களே...............

பத்ம புராணத்தில் இதைக் காரணமாக வைத்துக்கொண்டு கைகேசிக்குத் தசரதர் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றுவதற்காக இராமனுக்குச் செய்த பிரதிக்ஞையைத் தவறினரென்றும், அதற்காக அவருக்கு நல்லகதி கிடைக்கவில்லையென்றும் சொல்லப்படுகிறது............மேலும், கைகேசியும் மந்தரையும் செய்த காரியங்

களுக்குத் தகுந்த நியாயமும் காரணங்களும் காணப்படுகின்றன. அவைகளைப் புறக்கணித்து அவர்களை எல்லையில்லாமல் நிந்திப்பதும் குற்றஞ்சாட்டுவதும் நியாயத்திற்கு ஒத்ததாகத் தெரியவில்லை. இதன் ரகசியத்தைப் பரத்வாஜர் பரதனுக்குச் (92வதில்) சொல்லுகிறார்."

மேலே கண்ட குறிப்புக்களெல்லாம் மொழி பெயர்ப்பாளர் திரு. அப்பங்காருடையன. அவைகளில் பல உண்மைகள் உணர விருப்பதை அறிஞர் அறிவார்களாக. இனி கதைத் தொடர்ச்சியிற் செல்வோம்.

---

# பத்தாம் அத்தியாயம்.

---



இனி கதையைத் தொடர்ந்துபோவோம். பிராமணர்கள் பலர் இராமனைத் தொடர்ந்து சென்றனர். அவர்களை நோக்கி இராமன் "என்னிடத்திலுள்ள அன்பை இனி பரதனிடம் வையுங்கள். 'அவன் கைகேசியின் மகனல்லவா? அவளுடைய தீய குணங்கள் அவனிடமுமிருக்குமல்லவா? அவனிடத்தில் எங்களைக் காட்டிக் கொடுக்கலாமா' என்று நீங்கள் சொல்லலாம். ஆனால் பரதன் மிகவும் நல்லவன்; அவனை இளவரசனாக அரசர் நியமித்திருக்கிறார்" என்றான். இச் சாதுரியமான பேச்சால் அவர்களுக்கு இராமனே அரசனாகவேண்டுமென்று ஆசை அதிகரித்தது. அவர்களிற் கிழவர் நடக்கமுடியாது வருந்துவதைக் கண்டு இராமன் தேரை விட்டுக் கீழே யிறங்கி நடந்தான். தமசா நதிக்கரை குறுக்கிட்டது. இரவு அங்கே யாவரும் தங்கினர். விடிந்தது. பிராமணர்களனைவரும் தூங்குவதைக் கண்ட இராமன் அவர்கள் எழுமுன் தான் அயோத்திக்குப் போனதாகத் தேரை நடத்திக் காட்டி ஏமாற்றிவிட்டுச் சென்றான். பிராமணர்கள் ஏமாந்து அயோத்தியையடைந்தார்கள். ஒவ்வொரு வீட்டிலுள்ள பெண்ணும் தங்கள் கணவரைப் பார்த்து அழுதுகொண்டு கூர்மை

யான மரவெட்டியால் யானையைக் குத்துவதுபோல் ஏற்கனவே புண் பட்ட அவர்களுடைய மனதைக் கொடுமையான சொற்களால் துளைத்து அவர்களை நிந்தித்தார்கள். "இராமனை அழைத்துவரத் திறமற்றவர்களுக்குப் பெண்டாட்டி பிள்ளைகளேன்? தீயவளாகிய கைகேசியின் நாட்டில் யாம் தங்கோம். எல்லோரும் இராமனிடம் போவோம். மலைபுச்சிகளிலுள்ள மரங்களின் அடிகளில் உதிர்ந்துள்ள தளிர்களாலும் மலர்களாலுமாகிய படுக்கைகளில் சீதையுடன் இராம னைக்கூடிக் கலந்து விளையாடச்செய்யும் இராமனின் கட்டழகை யுடைய திருமேனியைக் கண்டு காட்டிலுள்ளவர்களல்லவா இன் புறுவார்கள்? அவன் எப்போதும் இனிமையாகப் பேசுகிறவன். யாரிலும் தானே முதலில் பேசுபவன். எல்லோருடைய மனதை யும் கவர்பவன். எப்போதும் சிரித்த முகத்தையுடைய அவனை இன்னெரு முறை காண்போமா?" என அப்பெண்கள் புலம்பினர்.

இராமன் வடகோசல நாட்டின் எல்லையை யடைந்தபோது அங் குள்ள குடிகள் "நமது அரசன் அறிவற்றவன்; எவனுவ்து இந்தக் கிழவயதில் காமத்திற்கு அடிமைப்பட்டு இத்தீயசெயலைச் செய் வானு? தன் மகனைக் காட்டிற்கனுப்ப வேண்டுமென்ற எண்ணம் தசரதனுக்கு எப்படி வந்தது? கைகேசி மரியாதையற்றவள், மிகவும் தீயவள்" என்றுசொல்வதைக் கேட்டுக்கொண்டு இராமன் கோசலத் தைத் தாண்டிப்போனுன். அவன் சுமந்திரனைப் பார்த்து "நான் திரும்பி வந்து இன்னுமொருதரம் சரயூநதிக் கரையிலுள்ள காடு களில் வேட்டையாடுவேனு?" என்று கூறினுன். பின் இராமன் அயோத்திநகர தேவதைகளை வணங்கிக்கொண்டு அங்கு நின்ற குடி களையும் அனுப்பிவிட்டு கங்கைக்கரையைச் சீதையுடனும் இலக்குவ னுடனும் சுமந்திரனுடனும் அடைந்தான். சிருங்கபேரபுரத்தை நோக்கிச் செல்லும் இராமன் தேரை நிறுத்தச் சொல்லி அவர்க ளோடும் அங்கே தங்கினுன்.

அந்த நாட்டிற்கு அரசன் குகன். அவன் இராமனுக்கு உயிர்த் தோழன். இராமன் வந்திருப்பதை அறிந்து அவன் உறவின ரோடும் பார்க்க வந்தான். அவன் வருவதை தூரத்திலேயே கண்டு இராமனும் இலக்குவனும் எழுந்து எதிர்கொண்டு உபசரித்தார்கள். இராமனை அந்நிலையிற் கண்டு மிகவும் கவலைப்பட்டு அவனை அன்

புடன் கட்டியணைத்து, "இந்நாடு உன்னுடையது. இங்கேயே தங்கலாம்" என்று கூறி மதுரமான பலவித மாமிசங்களையும் உண வுப் பொருள்களையும் கொண்டுவந்து வைத்தான். அதைக்கண்டு இராமன் அவனை இறுகத்தழுவி "உன்னுடைய இனிய சொற் களால் மிகவும் மகிழ்ந்தேன். இப்போது நான் பிறரிடத்தில் எதை யும் பெறுவதும் உண்பதும் கூடாது. இந்தக் குதிரைகளுக்கு வேண்டுவன கொடு" என்று கூறி இலக்குவன் தந்த கங்கை நீரைக் குடித்தான். இராமனும் சிதையும் தரையில் படுத்துக்கொண்ட பிறகு இலக்குவன் அவர்களுடைய கால்களைக் கழுவிவிட்டு குக னிருந்த இடம் வந்தான். குகன் அவனுடன் விற்பிடித்து இராம னைப் பாதுகாத்திருந்தான். குகன் இலக்குவனையும் படுத்துக் கொள்ள வேண்டினன். இலக்குவனே "இராமனும் சிதையும் புல் லின்மேல் தூங்குவதைப் பார்! அவர்கள் அவ்வாறு தூங்கும்போது எனக்குத் தூக்கமும் வருமா! தந்தைக்கு எங்கள் நால்வரினும் இராமனிடத்தில் மிகவும் பிரியம். அவனைப் பார்க்காமல் அவரு டைய உடலில் உயிர் நிற்குமா? கோசலையும் இறப்பாள். நிகரற்ற அழகு வாய்ந்த வேசைகளால் அலங்கரிக்கப்பட்டுள்ள அயோத்தி யில் வாழ்பவர்களே புண்ணியசாலிகள். நாங்கள் திரும்ப அயோத்தி யில் புகுவோமா?" என்று ஏங்குகிறுன். பொழுதும் விடிந்தது. இராமனுடைய வேண்டுதலால் குகன் நல்ல மரக்கலம் கொண்டுவரக் கட்டளையிட்டான். இராமன் தம்பியுடன் போர்க்கருவிகளை யணிந்து படகை நோக்கி நடந்தான். சுமந்திரன் "பாபியாகிய கைகேசியிடம் எங்களை ஒப்புவித்துப் போகலாமா? நானும் கூட வருவேன்" என் ருன். இராமன் "எனது தந்தையின் மனோரதங்களெல்லாம் வீணு யின. அதனுல் காமத்தில் ஈடுபட்ட அவருடைய கவலைகளைப் போக்குவது உனது கடமை. கைகேசிக்காக அவர் விரும்புவதைச் செய்யும். அவரிடம் நாங்கள் விரைவில் பார்ப்போமெனச் சொல்லும். தாய்மாரிடம் கவலையற்றிருக்கக் கூறும். பரதனிடத்தில் தந்தையைப் போலவே தாய்மார்களையும் பணிந்து நடக்கவேண்டு மென்றும் அதி லும் எனது தாய் கோசலையை மிகவும் கவனிக்க வேண்டுமென்றும் சொல்லும்" எனப் புகன்ருன். சுமந்திரன் போக மறுக்க இராமன் மறுபடியும் "நான் உம்மைத் திரும்பிப் போகச்சொல்ல பல காரணங் களுள. கைகேசி நீர் போனவுடன் நான் காடடைந்ததாக உறுதி

யாக நினைத்து அரசர் மீதுள்ள "பொய் சொல்லுகிறவன்" என்ற சந்தேகத்தை நீக்குவாள்" என்றான். பின் அவன் குகனிடம் ஆலம் பால் கொண்டுவரச் சொல்லி தலையைச் சடையாக்கினான் பின் குக னுக்கும் விடை கொடுத்து இலக்குவனிடம் " தம்பி! சீதையை ஓடத்திலேற்றி நீயும் ஏறு' என்றான். பின் தானும் ஏறினான். ஓட மோட்டி விரைவில் ஓட்டினான். போகும்போது சீதை 'கங்காதேவி, எங்களைக் காப்பாற்றும்; நாங்கள் சுகமே திரும்பி வரும்போது பல்லா யிரம் பசுக்களையும் நல்ல உடையையும் நல்ல உணவையும் பிராமணர் களுக்குக் கொடுத்து உம்மைத் திருப்தி செய்கிறேன். பல்லாயிரம் கள்ளுக்குடங்களாலும் பலவகையான மாமிசங்களாலும் உம்மையும் பிறதெய்வங்களையும் திருப்தி செய்கிறேன்' என வேண்டிக் கொண் டாள். அக்கரை சேர்ந்தவுடன் அவர்கள் மூவரும் கரையில் இறங்கி நடந்தார்கள். இவர்கள் மத்சநாட்டில் வந்து அங்கே காட்டுப் பன்றி, ரிசியம், பிருஷதம், மகாருரு என்று சொல்லப்படுகின்ற மான்கள் ஆகிய இந்நான்கு பெரிய மிருகங்களையும் விரைவிற் கொன்றெடுத்து ஒரு பெரிய மரத்தடியில் அவைகளைத் தின்ன உட்கார்ந்தார்கள்.

தின்றபின் இராமன் படுக்கையிற் படுக்கப்போகும் போது இலக்குவனை நோக்கி "இப்போது தந்தை துக்கத்தால் தூக்கம் வரா மல் வருந்துவார். கைகேசி தன் மகனுக்கு நாடு உறுதியாகக் கிடைக்க வேண்டுமென்ற எண்ணத்தால் ஒருவேளை தந்தையைக் கொன்றாலும் கொல்வாள். அவரோ காமத்திற்கு வசப்பட்டவர். கைகேசியிடத் தில் மாட்டிக்கொண்டிருக்கிறார். நானும் பக்கத்திலில்லை. ஐயோ என் செய்வார்? நமது பிதா செய்ததை ஒருவன் எவ்வளவு மூடனானாலும் ஒரு பெண்ணை மகிழ்விக்க தன் மனப்படி நடக்கும் மகனைக் காட்டிற் குத் துரத்துவானா? அவர் இன்னும் எத்தனை நாள் வாழப்போகிறார். பரதன் தன் மனைவியுடன் கோசல நாட்டை தான் ஒருவனாகச் சுக மாக அனுபவிக்கப் போகிறானே. புதிதாக அதிகாரம் கிடைத்த கொழுப்பால் கைகேசி இப்போதே கோசலையையும் சுமித்திரையை யும் தொந்தரவு செய்வாள். ஆதலின்காலையில் நீ அயோத்திக்குப் போ. கைகேசி அநியாயக்காரி. முற்பிறப்பில் என் தாய் பலமாதர் களைத் தன் தன் பிள்ளைகளிடமிருந்து பிரித்தாளென்பது நிச்சயம். அதனாலேயே நான் அவளைப்பிரிய நேர்ந்தது. எனக்குக் கோபம் வந் தால் நானொருவனே உலகை வென்று அயோத்திக்கு என்னை அரச

ளுக்கிக் கொள்வேன். உலகத்தார் பழிப்பார்களென்று அஞ்சியே சும்மாயிருக்கிறேன்'' எனப்பலவாறு புலம்பிக் கண்ணீர்வடித்தான். இலக்குவன் இராமனைப் பிரிந்தால் இறப்பதாகக் கூறினன். பின் அவர்கள் அந்த மரத்தடியில் படுத்துக்கொண்டார்கள்.

மறுநாள் அங்கிருந்து புறப்பட்டு கங்கையும் யமுனையும் சேருமிடத்திலுள்ள பரத்துவாச முனிவனுடைய இருக்கையை யடைந்து அவனால் உபசரிக்கப்பெற்று வழிதெரிந்துக்கொண்டு மறு நாள் யமுனை நதியைக் கடந்து சென்றனர். அவ்வாற்றைக் கடக்கும் போது சிதை "நதிதேவி! நாங்கள் சுகமாக அயோத்தியை யடைந்த போது உமக்கு அநேகமாயிரம் பசுக்களாலும் கள்ளுக்குடங்களா லும் பூசை செய்கிறேன்'' என்று நேர்ந்துக்கொண்டாள். அங் கிருந்த ஓர் ஆலமரத்தைச் சுற்றிவந்து அவள் வணங்கினாள். இராம னும் இலக்குவனும் அங்கிருந்த பல மிருகங்களைக் கொன்று அன்று உண்டார்கள். பின் அவ்வாற்றங்கரையிலேயே படுத்துக்கொண்டார் கள்.

இரவுகழிந்த அளவில் இராமன் தான் கண்விழித்த பிறகும் தூக்கங்கொண்டிருந்த இலக்குவனை மெல்ல எழுப்பினான். பின்வழி நடந்து போய்ச் சித்திரகூட மலையையடைந்து வால்மீகியைக் கண்டு தம்மை இன்னாரெனக் கூறினன். இலக்குவன் ஓர் குடிசையை யமைத்தான். அது கண்ட இராமன் 'தம்பி! நாம் மானினுடைய மாமிசத்தைக் கொண்டு இக்குடிசையின் அதி தேவதைகளுக்கு யாகம் செய்யவேண்டும். அதற்காக ஒரு மிருகத்தைக்கொன்று சீக்கி ரம் கொண்டுவா. இதனால் பிராணி இம்சையென்ற குற்றம் நமக்கு நேராது. யக்ஞத்தில் பலியாகக் கொடுக்கப்பட்ட பிராணிகள் நல்ல கதியையடையும்' என்று கூறினான். இலக்குவன் அவ்வாறே மாமிசம் கொண்டுவந்தான். 'தம்பி! இந்த மாமிசத்தைத் தீயில் சமை' என் றான். இலக்குவன் தான் கொன்றுக் கொணர்ந்த கருப்பு மானை நன் றாக வளர்க்கப்பட்ட தீயில் இட்டான். அது சுட்டதும் பக்குவமும் இரத்தமற்றதுமானதை அவன் அறிந்து 'சகல அவயவங்களுடன் கூடின இந்தக்கருப்பு மானின் மாமிசம் நன்றாகப் பக்குவமாயிற்று. பூசை செய்யும்' என்றான். அவ்வாறு முறைப்படி சமைத்த மாமிசங் களால் தேவதைகளுக்குப்பலி கொடுத்து இராமன் அந்தக் குடிசை

யிற் புகுந்தான். அவர்கள் அங்கே சுகமே வாழ்ந்திருந்தனர். இவ்வர லாற்றை ஆராய்வோம்.

இராமன் தன்னைத் தொடர்ந்து வந்த பார்ப்பனரிடம் கைகேசியைக் குறைவாக இழித்துப்பேசி அவர்களைத் தன் வசப்படுத்துகிறான். முன்னரும் அவன் கைகேசியைப்பற்றியும் பரதனைப்பற்றியும் பேசிய பழியுரைகள் விளக்கப்பட்டன. இவ்விதமாக இராமன் பேசிய சாதுரியமான பேச்சுக்களாலே அப்பார்ப்பனர்களுக்கு இராமனே அரசனாக வேண்டுமென்ற ஆசை அதிகரித்தது என வால்மீகி முனிவரே கூறுகிறார். (சருக்கம் 45) சாதாரண மக்களிடை கைகேசியைப்பற்றியும் பரதனைப்பற்றியும் கெட்ட எண்ணங்களைப் பரவச் செய்து தன்னைப்பற்றி நல்ல நோக்கங்கொண்டு தானே அரசனாக வேண்டுமென்று அவர்களனைவரும் விரும்பிக் கிளர்ச்சி புரியுமாறு செய்ய அப்பார்ப்பனர்களே நல்லவர்களென்பதை நன்கறிந்திருந்த இராமன் அவர்களைத்தன் வசப்படுத்துகிறான். அவ்வாறு மிகுந்த ஆசையை அவர்கள் மனதிலூட்டி அவர்களைத் தந்திரமாகப் பிரித்து ஏமாற்றி அயோத்தி போமாறு செய்கிறான். அவ்வாறு கிளர்ச்சி செய்யுமாறு ஊக்கமூட்டப்பெற்ற பார்ப்பனர்கள் அயோத்தியடைந்தபோது அங்கிருந்த அவர்களுடைய மனைவிமார் அவர்களைப் பலவாறு நிந்திக்கின்றனர். அப்பெண்களுடைய கற்புடைமை மிகவும் பாராட்டத்தகுந்ததே. அதனால் அவர்கள் ஒன்றும் செய்யாது விழித்திருக்கின்றனர். அப்பெண்கள் இராமனைக்காணாது புலம்பியதாக வால்மீகி முனிவர் கூறும் கூற்று மிகவும் கவனிக்கற்பாலது. அப்பெண்களின் புலம்பலில் "எல்லோரும் இராமனிடம் போவோம். அவனை அழைத்து வராத உங்களுக்குப் பெண்டாட்டியும் வேண்டுமா? மலையுச்சிகளிலுள்ள மரங்கள் தங்களுடைய அடிகளில் உதிர்ந்துள்ள தளிர்கள், மலர்கள் இவைகளாலாகிய படுக்கைகளில் சீதையுடன் இராமனைக் கூடிக் கலந்து விளையாடச் செய்யும் இராமனின் கட்டழகுடைய திருமேனியைக் கண்டு காட்டிலுள்ளவர்களல்லவா இன்புறுவார்கள்? அவன் எல்லோருடைய் மனதையும் கவர்பவன். அவன் எப்போதும் இனிமையாகப் பேசுகிறவன். யாரிடத்திலும் தானே முதலில் பேசுபவன். எப்போதும் சிரித்த முகத்தையுடைய அவனை இன்னொரு முறை காண்போமா?" (சருக்கம் 48) என்கிறார்கள்.

இப்பெண்களுக்குத் தங்கள் கணவருடன் வாழ்தலினும் இராமனுடன் வாழ்தல் மிகவும் இனித்ததாகத் தோன்றுகிறது. சீதையும் இராமனும் கூடிக்கலந்து விளையாடும் காட்டுப் பூப்படுக்கைகளை இவர்கள் சிந்திக்கின்றனர். இச்சிந்தனையால் எதனை அறியலாம்? கணவனைப்பிரிந்த மனைவி பலசமயங்களிலும் அவனுடன் கூடிக் குலாவிக் கலக்கும் விளையாட்டுகளையே சிந்திப்பதுபோல் அல்லவா இப்பெண்களுடைய சிந்தனையுமுள்ளது? சீதையுடன் இராமன் கூடிக் கலக்கும் பூப்படுக்கைகளை இவர்கள் சிந்திப்பானேன்? மேலும் இப்பெண்கள் "இராமனின் கட்டழகுடைய திருமேனியைக்கண்டு காட்டிலுள்ளவர்களல்லவா இன்புறுவார்கள்? எப்போதும் சிரித்த முகத்தையுடைய அவனை இன்னொரு முறை காண்போமா?" என ஏங்கித் தவிக்கின்றனர். நாட்டிலுள்ள தங்களுடன் உடனுறைதலை விடுத்துக் காட்டிலுள்ள பெண்களுடன் உடனுறைந்து அவர்களுக்கு மகிழ்ச்சியைத் தரப் போய்விட்டானே இராமன், அவன் எப்போது திரும்பி வந்து பழையபடி தங்களுக்கு மகிழ்ச்சியைத் தருவானோ என்பதே அவ்வேக்கமாம். "இராமன் எல்லோருடைய மனத்தையும் கவர்பவன். எப்போதும் இனிமையாகப் பேசுபவன், யாரிடத்திலும் தானே முதலில் பேசுபவன்" என்ற புலம்பல் இராமனுடைய அழகில் ஈடுபட்டு அவனோடு பேசுவதற்குத் துணிந்தும் பெண்களாகிய தமக்கு இயல்பாகவுடைய நாணத்தால் சற்றுத்தயங்க அக்குறிப்பையறிந்து இராமன் அவர்களிடம் வலியப்பேசி அவர்களைத் தன் வசப்படுத்தியுள்ளானென்ற உண்மையை விளங்கச் செய்கிறது. இவையெல்லாம் இராமனுடைய சிறந்த அறிவையும் வஞ்சிக்கும் முறையையும் தன் நினைப்பை முடிக்கும் திறமையையும் தெளிவுறுத்துகின்றன. இவ்வயோத்திப் பார்ப்பனர்களுடைய மனைவியரின் கற்புடைமை மிக அழகியதே! அதனாலேயே அவர்கள் "உங்களுக்கும் மனைவியர் வேண்டுமோ" எனத் தம்கணவரைக் கடாவுகின்றனர். இதனால் இவ்விராமன் பலபெண்களைக் கெடுத்தவனென்பது ஊகிக்கக்கிடக்கின்றது. இதனாலேயே, இராமனுடைய மட்டற்ற காமப்பித்தையுணர்ந்த தசரதன் "இராமனுடன் காட்டுக்கு நால்வகைச் சேனையும் செல்லட்டும். அரண்மனையிலுள்ள பொருள்களெல்லாம் போகட்டும். மற்றும் மிகவும் அழகாலும் நடையாலும் பேச்சாலும் பிறருடைய மனதை அபகரிக்கும் திறமையுள்ள பல வேசைகளும் போகட்டும்"

என்று கட்டளை யிடுகிறான். (சருக்கம் 36) பல அழகிய மனமருட்டும் பெண்கள் வீச இரவில் தூங்குபவனே இராமன் என்பதை ஒன்ப தாம் கட்டுரையில் ஆராய்ந்துள்ளோம். மேலும் இவன் பலதார கமனன் என்பதை நான்காம் கட்டுரையில் மிகவிரிவாக ஆராய்ந்தோம். இவ்விராமனுடைய தம்பி இலக்குவனும் நாம் மேலேவரலாற்றுப் பகுதியிற் குறித்தபடி "நிகரற்ற அழகு வாய்ந்த வேசைகளால் அலங்கரிக்கப்பட்டுள்ள அயோத்தியில் வாழ்பவர்களே புண்ணிய சாலிகள். நாங்கள் அத்தகைய அயோத்தியில் திரும்பப்புகுவோமா" என்று (சருக்கம் 51) ஏங்கும் ஏக்கமும் இவ்வுடன் பிறந்தார்கள் வேசைகளிடம் ஈடுபட்டவர்களென்பதை நன்றாக வலியுறுத்தும்.

நிற்க, இராமன் யார் எக்கேடு கெட்டாலும் தான் எவ்வாற்றானும் நாட்டைப்பெற வேண்டுமென்ற முழு நோக்கத்தையுடையவனென் பதைப் பல சான்றுகளாலே முன்கட்டுரைகளில் நிலை நாட்டியுள் ளோம். இக்கொள்கையை வலியுறுத்தும் அவனுடைய மன நிலை களை அவ்வப்போது விளக்கமாக எடுத்துக்காட்டியு முள்ளோம். அதனாலேயே இராமன் எவ்வாற்றாலும் ஒன்றுமறியாப் பரதனை ஏமாற்றி நாட்டைக் கைப்பற்றலாமென்ற நோக்கத்துடன் காடேகத் துணிகிறானென்ற உண்மையையும் முன் கட்டுரைகளில் விளக்கியுள் ளோம். மேலே குறித்துள்ள வரலாற்றுப் பகுதியில் இராமன் வடகோசல நாட்டின் எல்லையயடைந்தபோது அங்குள்ள குடிகள் "நமது அரசன் அறிவற்றவன், எவனாவது இக்கிழவயதில் காமத் திற்கு அடிமைப்பட்டு இத்தீய செயலைச்செய்வானா? தன்மகனைக் காட்டுக்கனுப்பவேண்டுமென்ற எண்ணம் தசரதனுக்கு எப்படி வந் தது? கைகேசி மரியாதை யற்றவள், மிகவும் தீயவள்" என்று சொல்வதைக் கேட்டுக்கொண்டு கோசலத்தைத் தாண்டிப் போனான் (சருக்கம் 49) எனக்குறித்துள்ளோம். இதை ஆராயும்போது குடி கள் தன் தந்தையாகிய தசரதனைப் பலவாறு நிந்தித்தாலும், கைகேசியை நிந்தித்தாலும், தன்னைப்பற்றி மிகவும் நல்ல எண்ண மும் விருப்பும் அவர்களிடத்தில் காணப்படவேண்டும் என்ற நோக் கமே இராமனிட மிருந்ததென்ற உண்மை மிகவும் தெளிவு பெறு கின்றது. தனது தந்தையாகிய தசரதனை, தனக்கு உண்மையில் உரிமையாகாத நாட்டைத் தனக்குத் தரவேண்டுமென்று கள்ளத் தனமாகப் பலவாற்றாலும் முயன்ற மன்னனைத் தன் நாட்டுக் குடி

மக்களே பலவாறு நிந்தித்துப்பேசியதைக் கேட்டுக்கொண்டு வாளா நின்றானே இத்தியவனாகிய இராமன்!

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை செய்நன்றி கொன்ற மகற்கு" என்ற பொய்யாமொழியும் பொய்க்குமோ? இந்நன்றி கெட்டவனாகிய இராமன் காட்டில் தட்டழிந்ததற்குக் காரணம் இந்நன்றி கெட்ட எண்ணமாக இருப்பினுமிருக்கும்.

தன்னைப் பட்டத்துக்குக் கொண்டுவரவேண்டி தசரதன் பட்ட பாடுகளை யெல்லாம் இவ்விராமன் நன்கு தெரிவன். இவன் சுமந்திரனிடம் "எனது தந்தையுடைய மனோரதங்களெல்லாம் வீணாயின" (சருக்கம் 52) என்று கூறும் சொற்றொடர்கள் இவ்வுண்மையை வலியுறுத்தும். தன்னலமே இராமனை நன்றி கெட்டவனாக நடக்கச் செய்தது. கடைசியாக இவனுடைய தன்னல நோக்கம் தன்னுடைய தந்தையைப் பற்றிக்கூட இழிவாகப்பேசத் தூண்டுகிறது போலும்! அதனாலேயே அவன் சுமந்திரனிடம் "காமத்தினீடுபட்ட அவருடைய கவலைகளைப் போக்குவது உமது கடமை" எனக்கூறுகிறான். மறுபடியும் அயோத்திபோக மறுத்து உடன் வருவேனென்ற சுமந்திரனிடம் இராமன் கூறும் பேச்சால் அவனைத் திரும்ப அயோத்திபோகக் கூறியதும் தன்னலங்கருதியே என்பது புலனாகின்றது. அது, கைகேசி மேலும் மேலும் தனக்காக வேறு தீமை செய்யாதிருக்குமாறு தடை செய்யவேயாம்.

இராமனுடைய சிந்தையின் உண்மைப் பான்மை, அவன் தன்னுடைய மனைவி தம்பி ஆகிய இருவருடனும் தனித்தபோது மலை விளக்கென விளங்குவதாகிறது. தனித்த இடத்துத்தான் ஒவ்வொருவருடைய இயற்கைக்குணமும் நன்றாக விளங்குவதாகும். தம்பியோடும் மனைவியோடும் தனித்த இராமன், அன்றிரவே (சருக்கம் 53) "இப்போது தந்தை துக்கத்தால் தூக்கம் வராமல் வருந்துவார். கைகேசி தன் மகனுக்கு நாடு உறுதியாகக் கிடைக்க வேண்டுமென்ற எண்ணத்தால் ஒரு வேளை தந்தையைக் கொன்றாலும் கொல்லுவாள். அவரோ காமத்திற்கு வசப்பட்டவர். கைகேசியிடத்தில் மாட்டிக்கொண்டிருக்கிறார். நானும் பக்கத்திலில்லை. ஐயோ என்ன செய்வார்! நமது பிதா செய்ததைப்பார். ஒருவன் எவ்வளவு மூடனானாலும் ஒரு பெண்ணை மகிழ்விக்க தன் மனப்படி

நடக்கும் மகனைக்காட்டிற்குத் துரத்துவானு! அவர் இன்னும் எத்தனை நாள் வாழப்போகிறார்! பரதன் கோசலநாட்டைத் தான் ஒருவனாகச் சுகமாக அநுபவிக்கப் போகிறானே! புதிதாக அதிகாரம் கிடைத்த கொழுப்பால் கைகேசி இப்போதே கோசலையையும் சுமத்திரையையும் தொந்தரவு செய்வாள். கைகேசி அநியாயக்காரி. எனக்குக் கோபம் வந்தால் நான் ஒருவனே உலகைவென்று அயோத்திக்கு என்னை அரசனாக்கிக்கொள்வேன். உலகத்தார் பழிக்கஞ்சியே சும்மா இருக்கின்றேன்" எனக்கூறிக் கண்ணீர் வடித்த வரலாற்றை மேலே குறித்தோம். இதனால் இராமன் கைகேசியைக் கொலைப்பாதகி எனவும் எண்ணுகின்றான். தன்னலம் பற்றிக் கொலைப்பாதகத்துக்குமஞ்சாத தன்மை தன்னிடமிருந்ததாலேயே அவன் பிறரையும் அவ்வாறு எண்ணுகிறான் போலும்! காம வசத்தனாகிய தசரதன் கைகேசியிடம் ஈடுபட்டு இன்னும் அவள் செய்யும் கேட்டுக்கு இணங்குவானோ என்பது அவனுடைய ஐயம். தன்னிடமும் அவன் அவ்விதமான காம ஈடுபாடுடையவனானதால், தான் அவன் பக்கத்திலிருந்தால் கைகேசி மனப்படி கேடுபுரியானாதலால், தான் அவன் பக்கத்திலில்லா திருக்கின்றமையைக் குறித்துக் கவல்கின்றான். அவன் மனப்படி நடப்பவளாகிய கைகேசியை மகிழ்விக்க அவன் மனப்படி நடப்பவனாகிய தன்னைக் காட்டுக் கனுப்பினானே மூடனாகிய தசரதனெனச் சிந்திக்கிறான். நாம் ஒன்பதாவது கட்டுரையில் விரித்தாராய்ந்தாங்கு தசரதனுடைய ஆண் மையலுக்கும் அதனாலாம் தழுவுதல் முதலிய தீய செயல்களுக்கும் இசைந்து அவனுடைய மனப்படி நடந்தும் கடைசிவரையில் சாதித்து நாட்டைத் தராதிருந்து விட்டானே தசரதன் என்ற ஏக்கம் இராமன் மனதிலிருந்தது என்பது இதனால் மிகவும் நிலைபெறுவதாயிற்று. இதற்கும் மேலாக "கிழவனாகிய தசரதன் விரைவில் இறந்துவிடுவான், அதனால் பரதனொருவனே நாடு முழுவதுமடைந்து தனியாசாள்வானே" என்று பெருமூச்சுவிட்டு இராமன் ஏங்கித் தவிக்கிறான்.

சகோதரத்துரோகியாகிய இராமா! தன்னலம் பேணும் நன்றிகெட்டப் பாதகனாகிய ஏ இராமா! உன்னையும் தெய்வம்போல் சில மக்கள் வழிபடுகின்றனரே! என்னே பரிதாபம்! பரிதாபம்! அவர் தம் சிந்தை உண்மையுணர்ந்து விரைவில் நல்வழிப்படுவதாக.

இச்சந்தர்ப்பத்தில் மொழிபெயர்ப்பாசிரியராகிய திரு. சீனிவாசப்பங்கார் தமது சொந்தக் குறிப்பாகக் குறித்துள்ள சொற்றொடர்கள் அறிஞரால் மிகவும் பாராட்டப் பெறுவன. ஏனெனில் அவர் வைணவச் சமயத்தைச் சேர்ந்தவரேனும் அவருடைய சொற்களும் உள்ளமும் உண்மையையே நாடுவனவாயுள்ளன. அவர் குறிப்புப் பின் வருவது. (அயோத்தியாகாண்டம் பக்கம் 221, 223, 224) "இராமன் இப்படிப் பல தடவை கைகேசியைப்பற்றி வெகு குரூரமாகப் பேசுவது ஆச்சர்யம். விவாக காலத்தில் அவளுடைய மகனுக்கு இராஜ்யம் கொடுக்கப்பட்ட தென்றும், அவனது பாத்யம் நியாயமென்றும் 107-வது சருக்கத்தில் சொல்லுகிறார். இதற்குச் சமாதான மென்ன? (சமாதானம் அவ்விடத்திய ஆராய்ச்சியில் தெளிவாகக் கூறுவோம்.)..................இராமன் தசரதரைப்பற்றி இப்படிப் பேசுவதும் இராஜ்யத்தில் ஆசையை வெளிப்படுத்துவதும் அவர் முன் சொன்ன வார்த்தைகளுக்குப் பொருந்தவில்லை. இதை அறிந்த கோவிந்தராஜர் என்ற உரையாளர் இது லக்ஷ்மணனை பரீட்சிப்பதற்குச் சொன்னதென்று வியாக்கியானஞ் செய்கிறார். அது அப்படித் தோன்றவில்லை. இராமாயணத்தில் வால்மீகி இராமனை வர்ணிக்கும்பொழுது சுத்தப் பிரஹ்மஸ்வரூபமென்று வர்ணிக்கவில்லை. ஒரு மனுஷ்யன் லோக விஷயங்களில் எப்படி நடப்பானென்பதையே இராமன் நடத்திக் காட்டுகிறார். ஈச்வரனாகவே நடந்தால் இராமாயணக் கதையே நடக்காது. யுத்தகாண்டத்தில் இராமனுடைய வாக்கியமே இதற்கு ஆதாரம்." இந்தக் குறிப்பினால் இராமன் உண்மையாக அரசாட்சியில் ஆசை வைத்திருந்தானேயே கைகேசியைப்பற்றி தகாத வார்த்தைகள் கூறியதோடு தசரதனைப் பற்றியும் சில இடங்களில் கேவலமாகப் பேசினான் என்பதையும், பல இடங்களில் இராமன் தனக்கு அரசாட்சியிலிருந்த ஆசையை வெளிப்படுத்துகிறானென்பதையும் திரு. அய்யங்கார் தெளிவாக ஒப்புக்கொள்ளுகிறார். இதனால் இராமன் சுயநலமிக்க சகோதரத் துரோகி என்பதும், தன் காரியம் கைகூடுவதற்காக எத்தகைய் இழிதொழிலையும் செய்யத் தயாரானவனென்பதும், பலமகளிரைக் கெடுத்தப் பாதகனென்பதும், வன்னெஞ்சனென்பதும், நன்றி கெட்டவனென்பதும் பிறவும் உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தெளிவாகின்றமை காண்க,

மேலும் இராமன், தசரதன் அரசாட்சியைக் கைப்பற்றிக் கொள்ளுமாறு தன்னிடம் தடித்தனமாகக் கூறியும் தான் ஏன் அவ்வாறு செய்யவில்லையென்பதற்குக் காரணமும் கூறுகிறான். அதாவது உலகம் அச்செயலை ஏற்காதென்பதே. எவ்வாறெனில் எப்படியும் இச்செயலை பரதனுடைய பாட்டனாகிய கேகய மன்னன் உணரும்போது தசரதனுடைய பொய்ம்மையும் தீய வஞ்சகச் செயலும் வெளிப்படும். அப்போது உலகம் தீயசெயலுக்கு ஒத்திருந்த இராமனை வெறுக்கும். அதனால் பரதனை ஏமாற்றியே அரசைக் கொள்ள வேண்டும் என்றும், அவ்வாறு ஏமாற்றுவதற்கு வழி உடனே காடேகுவதேயென்றும் உணர்ந்து இராமன் காடேகுகிறான்.

நிற்க, யமுனை நதிக்கரையில் விடிந்தபின் இராமன் எழுந்தபின்னரும் இலக்குவன் தூங்குகிறான். அதனால் அவனை இராமன் எழுப்புகின்றான். இவ்விடத்து மொழிபெயர்ப்பாளர் திரு. ஐயங்கார் குறிப்பு கவனிக்கத்தக்கது. அதுவருமாறு, (பக்கம் 229—சருக்கம் 56) “பதினான்கு வருஷங்கள் வரையில் அன்னபானமின்றி, தூங்காமல் கடுமையான விரதத்தை அநுஷ்டிப்பவனே இந்திரஜித்தைக் கொல்லக்கூடியவனென்று அந்த ராக்ஷஸன் வரம்பெற்றதாகவும் ஆகையால் லக்ஷ்மணன் வனவாசகாலமுழுதும் தூங்கியதே இல்லையென்றும் வழங்கும் பரம்பரைக்கதைக்கு வால்மீகியில் ஆதாரமில்லை.” மேலும் அவ்வாறு இந்திரசித்தன் வரம்பெற்றிருந்தால் இலக்குவனால் அவன் கொல்லப்பட்டிருக்க முடியாது. ஏனெனில் இந்திரஜித்தன் சாகும்போது பதினான்காண்டுகள் நிறையவில்லை. நிறைவதற்குச் சிலநாட்களிருந்தன.

சீதையும் இராமனும் படுத்திருக்கும்போது இலக்குவன் அவர்களுடைய காலைக் கழுவினான் என்ற செய்தி காணப்படுகின்றது (சருக்கம் 50). அண்ணனும் அண்ணியும் படுத்திருந்த இடத்தில் போய் அவர்களுடையகாலை இலக்குவன் கழுவினனென்றால் அவர்களுடைய ஒழுக்கமுறை இருந்தவாறு மிக அழகிதே!

சீதை கங்காநதியைத் தாண்டும்போது “பல்லாயிரம் பசுக்களையும் உடைகளையும் நல்ல உணவையும் பார்ப்பனர்களுக்குக் கொடுத்து உன்னைத் திருப்தி செய்கிறேன். பல்லாயிரம் கள்ளுக் குடங்களாலும் பலவகையான மாமிசங்களாலும் உன்னையும் (உன்

கரையிலுள்ள) பிற தெய்வங்களையும் திருப்தி செய்கிறேன்" என வேண்டிக்கொள்கிறாள். (சருக்கம் 52) பின் யமுனாநதியைக் கடக்கும்போதும் சிதை (சருக்கம் 55) "நாங்கள் சுகமாக அயோத்தியையடையும்போது உனக்கு அநேகமாயிரம் பசுக்களாலும் கள்ளுக்குடங்களாலும் பூசை செய்கிறேன்" என நேர்ந்துக்கொள்கிறாள். இதை கவனிக்கும்போது சிதை இராமன் முதலியோர் மிலேச்சரிலும் கேடுகெட்ட மிலேச்சராகவே இருந்திருக்க வேண்டுமென்று தெரியவில்லையா? கள்ளருந்திப் புலாலுண்டு வெறி கொண்டு ஆடித்திரியும் பேய்க் கூட்டங்களைச் சேர்ந்தவர்கள் இவ்விராமனும் சீதையும் என்பதற்கு ஐயமேதேனுமுண்டோ? அந்தோபரிதாபம்! இப்பேய்களைக் கடவுளரின் தோற்றமென்று மயங்கிக் கடவுளராகவே கோயிலிலிருத்தி வழிபடச் செய்து விட்டனரே தமிழ்மக்களிற் சிலரையும் கூத்தாடிகளாகிய ஆரியர்! கேவலம் ஒரு பெண்பாலாகிய சீதை இவ்வாறு பல்லாயிரம் கள்ளுக்குடங்களைப் படைத்தும் பலவகைப்பட்ட பல்லாயிரம் பசுக்களைப் பலியிட்டு அவைகளின் மாமிசங்களைப்படைத்தும் பூசையாற்றுவதாக நதிகளை வணங்குவளேல் ஆடவர்களுடைய வெறியாட்டுக்கு ஓரளவிருந்திருக்குமோ? பல பார்ப்பனர்களுக்குப் பசுக்களையும் உடை உணவுகளையும் கொடுத்தலாலும் நதியைத் திருப்தி செய்வதாகக் கூறுகிறாள் சிதை. இது எவ்வாறாகும்? நதியோ உயிரற்றபொருள். அதைத் திருப்தி செய்வது எவ்வாறு? மேலும் நதியே திருப்தியடைவதாக யிருந்தாலும் கேவலம் பார்ப்பனர்களைப் பலவகைப்பட்ட சுவையான புலாலுணவையூட்டி மகிழச் செய்வதால் நதி எவ்வாறு திருப்தியடையும்? ஈதெல்லாம் ஆரியர்கூத்து. ஆரியர்கள் கூத்தாடினும் காரியத்திலே கண்ணுகவே யிருந்தனர். இவ்விதமான சொற்றொடர்களைத் தமது நூல்களிலே எழுதிக்கொண்டு அந்நூல்களையும் வரலாறுகளையும் தமிழ்மக்கள் தம்மவரதேயென மயங்குமாறு செய்து பல்லாற்றானும் அவர்களுடைய பொருள்களை வாரிவாரிக் கொள்ளையிட்டுவந்தனர், வருகின்றனர் ஆரியர்.

தமிழ் மக்களும் உண்மை அறியாமையால் ஏமாந்து தாம் நெற்றி வேர்வை நிலத்தில் விழுமாறு வருந்தித்தேடிய பொருளை வீணுக்கிரைத்து அந்நியர்களின் விலாப்புடைக்க ஊட்டி வறுமை நோயுறுகின்றனர். கையிற் பொருளில்லாதோர் கடன் வாங்கிக்கூட இத்தகைய தியசெயல்களைப் புரியத் தலைப்படுகின்றனர். தானும்

தன் பெண்டு பிள்ளைகளும் உற்றுருறவினரும் உடுக்க நல்ல உடையின்றி உண்ண நல்ல உணவின்றி வருந்தியிருக்க, அந்நியர்களை உண்பித்தலில் கிடைக்கும் பயன் யாதோ? கொடிய பாதகமும் நரகவேதனையும் என்பதில் ஐயமுமுளதோ? தமிழ் மக்கள் இனியேனும் உண்மையுணர்ந்து தங்கள் வீடுகளில் வருகின்ற சிறப்புக்களிலும் திருநாள்களிலும் அந்நியர்களாகிய பார்ப்பன மக்களுக்கு உடுத்தாமலும் ஊட்டாமலும் தமது கைவசமிருக்கும் பொருளால் தமதுமனைவி மக்களையும் உற்றுருறவினரையும் உண்பித்து மகிழ்வார்களா? தன்னை வருந்திப்பெற்ற தாய் பிச்சையெடுக்க மகன் தானம் கொடுப்பதால் வரும் பயன் யாது? அறக்கொடும்பாவமும் நரக வேதனையுமேயாம். ஆதலின் இனியாவது தமிழ்மக்கள் உண்மையையுணர்ந்து அறப்பாடுபட்டுத்தேடிய பொருளைச் செலவு செய்ய நினைத்தால், உண்மையான பலனையும் புண்ணியத்தையும் தேடிக்கொள்ள நினைத்தால், அப்பொருளால் தம்மைச் சேர்ந்தவர்களை பலனடையுமாறு செய்து நல்லறம் புரியுமாறு வேண்டிக்கொள்ளுகிறோம். மேலும் சீதை இராமன் முதலியோர் தமிழ்மக்களைக் கெடுத்த அந்நியராகிய ஆரியரைச் சேர்ந்தவர்களென்பதை இவர்கள் உணர்வார்களாக. கள்ளுணவு, புலாலுணவு, பலதெய்வ வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு, பல உயிர்ப்பிராணிகளைப் பலியிடுதல் முதலிய தீய பழக்கங்களெல்லாம் இவ்வாரியர்களாலேயே தமிழ் மக்களிடைப் புகுத்தப்பெற்றன. ஆதலினுலேயே தமிழ் மக்கள் உண்மையை யுணர்ந்து இத்தகைய தீமைபயக்கும் கள்ளுணவு பலியிடுதல் புலாலுணவு முதலிய தீய பழக்கங்களை இதுமுதலாவது அறவே விட்டுவிட வேண்டுமென்கிறோம். இதைப்பற்றிப் பிறிதோரிடத்து மிகவும் விளக்கமாக ஆராய எண்ணியுளோமாதலின் இவ்வளவில் இதை நிறுத்திக்கொண்டு மேலே ஆராய்ந்து செல்லுவோம்.

ஆரிய மக்கள் சுரா என்று கூறப்படுகின்ற கள்ளுணவை யுடையவர்களாக இருந்ததனுலேயே சுரர் எனப்படுவாரென்றும் தமிழ் மக்கள் சுராபானத்தை (கள்ளுணவை) வெறுத்தவராதலினுலே அவர்களை சுரர்களாகிய ஆரியர் அசுரர் என வழங்கினரெனவும் முன்னரே ஆராய்ந்தோம். இச்சுரர்களாகிய ஆரியரைப் புலாலுண்பவராதலினுலே புலவர் (புலவு—புலால், அர்-பலர்பால் விகுதி) எனத் தமிழ்மக்கள் வழங்குவாராயினர். மேலும் கள்ளுண்ணல் புலா

துண்ணல் பலியிடல் முதலிய மிலேச்ச குணமுடையோராக அவ் வாரியரிருந்தமையினலே அவர்களே மிலேச்சர்களென்றும் தமிழ்மக் கள் வழங்குவாராயினர். அதனுலேயே ஆரியரென்போரை மிலேச்ச ரென்கின்றன தமிழ்ப்பிங்கலந்தை முதலிய நிகண்டுகளும். இராமன் முதலியோர் புலாலுண்பவரென்பதை முன் கட்டுரைகளில் விளக்கி யுள்ளோம். மேலும் இக்கட்டுரையிலும் சீதை நேர்ந்துக்கொண்ட செய்திகளிலிருந்தும் அவர்கள் அத்துடன் கட்குடியரென்பதும் தெளிவாகிறது. இராமன் குகனைக்கண்டபோது அவன் பலவகை மாமிசங்களே உணவாகக்கொண்டு வருகிருன். இராமனேடு சிறு பிள்ளை முதலாகவே நெருங்கிய பழக்கமுடையவனுகக் காணப்படும் வேடர் தலைவனுகிய குகன் பலவகை மாமிசங்களைக் கொண்டுவந்து தந்தமையினலே இராமன் புலாலுணவில் மிகவும் ஆசையுடையவ னென்பது தெளிவாகின்றது. மேலும் இராமன் சுமந்திரனிடம் கங் கையையடையுமுன் (சருக்கம் 49) "நான் திரும்பி வந்து இன்னு மொரு தரம் சரயூ நதிக்கரையிலுள்ள(அயோத்தியிலுள்ள நதி) காடு களில் வேட்டையாடுவேனு?" என்று கூறுகிருன். இராமன் உண் மையில் நல்லவனுக இருந்திருப்பானேயாகில் "இன்னுமொரு முறை அயோத்தியில் வந்து பல ஏழைகளுக்கு உணவூட்டிப் பல அறங்கள் புரிந்து மக்களிடை நல்லறிவுச்சுடர் கொளுத்தி எல்லோரையும் அருளுடைய நன் மக்களாக ஆக்குவேனு" என்றல்லவோ நினைத் திருக்கவேண்டும்? இவன் அறக்கொடும்பாவி, அருளற்ற வன்கண் ணன். ஆதலினலேதான் "நான் இன்னுமொருமுறை அயோத் திக்கு வந்து வேட்டையாடுவேனு" எனக் கவல்கிருன். இதனல் பல உயிர்ப்பிராணிகளைக் கொன்று அவைகள் இறப்பதைப் பார்ப் பது ஓர் வேடிக்கை எனக்கொண்ட தீய சிந்தையன் இராமன் என் பது வெட்ட வெளிச்சமாகின்றமை காண்க. இராமன் (சருக்கம் 49) "என் முன்னேர்களான இராஜரிஷிகள் பொழுது போக்குக்காக வைத்துக்கொண்டிருந்த வேட்டை எனக்கும் ஒரு விநோதமாக இருக்கிறது" என்று சுமந்திரனிடம் கூறுகின்றனன். பொழுது போகவில்லையென்ருல் காட்டில்வாழும் உயிர்ப்பிராணிகளைக் கொல்லு வதைப் பொழுது போக்காகவும் விநோதமாகவும் ஒருவன் கொள்வா னேன்? அவனுடைய கல்நெஞ்சையும் அருளற்ற தன்மையையும் என்னென்பது? கள்ளுண்டு புலேயாடித்திரியும் இராமனே அனேயோர்

எங்ஙனம் அருளுடையோராயிருந்திருக்க முடியும்?

" தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙன மாளும் அருள் ?"

" தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை "

" உயிருடம்பின் நீக்கியாரென்ப செயிருடம்பிற்
செல்லாத் தீ வாழ்க்கையவர்."

எனத் திருவாய் மலர்ந்தருளிய திருவள்ளுவ நாயனாரது தெய்வ வாக்குகள் தமிழ் மக்களது நல்லொழுக்கத்தைப் பாதுகாக்க எழுந்தவையன்றோ? வேடிக்கைக்காக உயிர்ப்பிராணிகளைக் கொன்றுவக்கும் இராமனைக் கடவுளின் தோற்றமெனில் அவனைப் பின்பற்றுவோர் நாளடைவில் கொலைத்தொழி லுவப்பவராவாரென்பதில் என்ன தடை? ஆதலின் கொலைக்கஞ்சாமையும் கொலைநாடும் சித்தமும் தன்னலமுமே கொண்டிருந்த ஒழுக்கங் கெட்டவனாகிய இராமனை இனியாவது தமிழ் மக்கள் தெய்வமென நினையாதிருப்பாராக.

கங்கா நதியின் அக்கரை சேர்ந்து நடந்துபோய் மத்ச நாட்டில் வந்த இராமனும் இலக்குவனும் அங்கே காட்டுப்பன்றி, ரிசியம், பிருஷதம், மகாருரு என்று சொல்லப்படுகின்ற மான்கள் ஆகிய இந்நான்கு பெரிய மிருகங்களையும் விரைவிற் கொன்றெடுத்து ஒரு மரத்தடியில் உட்கார்ந்து தின்றார்கள் (சருக்கம் 52) என்றும், யமுனை நதியைத் தாண்டியவுடன் இராமனும் இலக்குவனும் அங்கிருந்த பல காட்டு மிருகங்களைக்கொன்று அன்று தின்றார்கள் (சருக்கம் 55)என்றும் வால்மீகி எழுதுகிறார். இக்காலத்தில் ஓர் ஆட்டைக் கொன்றால் அதன் புலாலைக்கொண்டு பல குடும்பத்தார் வயிறு நிரப்புகிறார்களென்பதை நாம் அறிவோம். அதிலும் அவ்வாறு புலாலுண்போரில் யாரேனும் ஒருவன் ஓர் துண்டுபுலாலை அளவு கடந்து உண்பானேல் அவன் வயிற்று வலி வயிற்றோட்டம் முதலிய பல நோயுற்று வருந்துவதைக்காண்கிறோம். இதிவ்வாறிருக்க ஓர் பெரிய் காட்டுப்பன்றி, ரிசியம், பிருஷதம், மகாருரு என்னும் பெரிய உருவின மான்கள் ஆகிய இவைகள் நான்கையும் இராமன் இலக்குவன் சீதை ஆகிய மூவரும் ஒரே வேளையிலுண்டன ரென்பதால் இவர்கள்

வயிறுதான் 'பேய்' வயிறோ? ? என்னே அநியாயம்! இவர்கள் அம் மிருகங்களைச் சுட்டுத்தின்றார்களோ அன்றிப் பச்சையாகவே தின்றார்களோ? அவைகளை முழுவதும் தின்றார்களோ அன்றி கொஞ்சங் கொஞ்சந் தின்றார்களோ? அதன் விவரம் வால்மீகி கூறினாரில்லை. மற்றொருநாள் அவர்கள் பல காட்டு மிருகங்களைக் கொன்று ஒரே வேளையில் தின்றனராம்! ஆச்சரியம், ஆச்சரியம்!

இராமன் குடிசையமைத்து நின்ற இலக்குவனை நோக்கி (சருக்கம் 56) "தம்பி நான் மானினுடைய மாமிசத்தைக் கொண்டு யாகம் செய்ய வேண்டும். அதற்காக மிருகத்தைக் கொன்று சீக்கிரம் கொண்டுவா. இதனால் பிராணியிம்சை யென்ற குற்றம் நமக்கு நேராது. பலியாகக் கொடுக்கப்பட்ட பிராணிகள் நல்ல கதியை யடைகின்றன" என்று கூறுகின்றான். இஃது உண்மையாயின் காட்டில் வாழும் மிருகங்களால் இத்தீய சிந்தையிராமன் முதலியோர் கொன்று தின்னப்பட்டிருப்பரேல் நல்ல கதியை யடைந்திருப்பர் போலும்! ஆதலின் இத்தகையோர் நல்லகதியை யடைய அம்மிருகங்களால் கொலையுண்டு தின்னப் பெறுவதற்கு முந்தியிருப்பரேல் அறிவுடையவராவர். அவ்வாறு செய்யாது 'பிற உயிர்களைக் கொன்று தின்பதால் பாபம் வராது, அவ்வுயிர்களும் கொல்லப்பெறுவதால் நல்ல கதியை யடைகின்றன' என்பதால் இவர்களைப்போலும் சுயநலக்காரரும் வஞ்சகர்களும் ஏமாற்றுக்காரர்களும் இருப்பரோ? அநியாயம், அநியாயம்! இவர்களின் தீச்சிந்தை தானென்ன! இலக்குவன் இராமனுடைய ஆணைப்படி ஒரு கருப்பு மானைக்கொன்று கொணர்ந்து தீயிலிட்டு இரத்தம் வற்றிப் பக்குவமாகும் வரை வதக்கினனெனவும் தெரியவருகிறது. இத்தகைய உயிர்ப்பலி முதலிய தீய செயல்களைத் தமிழ் மக்களிடை ஆரிய மக்கள் புகுத்தத்தொடங்கியபோதுதான் திருவள்ளுவர் போன்ற தெய்வத் தமிழ்ப்புலவர்கள்,

"அவி சொரிந்தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று"

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு"

"கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
சொல்லா துயிருண்ணுங் கூற்று"

" நல்லா றெனப்படுவ தியாதெனில் யாதொன்றும்
கொல்லாமை சூழு நெறி"

" பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை"

" ஒன்ருக நல்லது கொல்லாமை"

" அறவினை யாதெனிற் கொல்லாமை"

என்னும் அமுதப் பொன்மொழிகளை எடுத்தியம்பி உண்மையுணர்த்தத் தலைப்பட்டனர். எடுத்தியம்பியும் தமிழ் மக்களிற் சிலரிடம் ஆரியருடைய புலைத்தொழிலும், கள்ளுணவும், பலியீடும் நுழைந்து வேரூன்றுவதாயிற்று. கொலைத்தலைவனும் இராமனையும் பலர் தெய்வமாக வழிபடத் தொடங்கினர்.

" கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்"

என்ற பொய்யா மொழியும் இவனிடம் பொய்ப்படுவதாயிற்று என்னே இவ்வாரியர் தம் சூழ்ச்சியின் வன்மை?

" கொன்று புலாலுண்ணுங் கொலைக்கொடிய இராமனையே
என்று உலகத்தார் இகழ்ந்துண்மை யறிவாரோ?"

" உண்மை யறிந்தோங்கி உளமாரக் கொல்லாமை
திண்மையாயுலகத்தார் கொள்ளும்நா ளெந்நாளோ?"

" பொய்யாமொழி யென்றும் பொய்யா மொழியாக
மெய்யா இம்மேதினியார் போற்றுநா ளெந்நாளோ?"

இனி பொய்யராகிய கம்பருடைய புரட்டை ஆராய்வோம். எடுத்தவிடங்களிலெல்லாம் கம்பர் வால்மீகிக்கு மாருகவே போகிருர். இராமனுடன் சென்றவர் ஆடவரெனவும் அவர்கள் மனதைக் கவர அவன் பல பேசினனெனவும் அதனல் அவர்கள் இராமனை தமக்கரசனகவேண்டுமென விரும்பினரெனவும் வால்மீகி கூற அதற்கு மாருக, உண்மைச் செய்திகளையெல்லாம் மறைத்து கம்பர் 'பலபெண்களும் ஆண்களும் சூழ இராமன் வனமேகினன்'எனக்கூறிவிட்டு அன்றிரவு நிகழ்ச்சிகளில் மிகவும் முக்கியமாக அப்பெண்கள் எவ்வாரெல்லாம் தூங்கினரென விவரிப்பதிலேயே பல பாடல்கள் பாடுகின்றனர்.

பெண்கள் செயலைப் பாராட்டுவதில் இவருக்குப் பேரின்ப மூற்றெடுத் துள்ளம் பெருகும் போலும்! இராமன் தன்னுடன் வந்தவர்களை ஏய்த்துச் சென்றபின் அயோத்தி புகுந்த அவர்களை அவர்களுடைய மனைவியர் இகழ்ந்தமையையும் இராமனை நினைத்துப் புலம்பினவை களையும் கம்பர் மறைத்தார். குடிகள் தசரதனை இகழ்ந்தமையை இராமன் கேட்டுக்கொண்டு வாளா சென்றமையையும் அவர் மறைத்தனர். இராமன் தன்னைத் தொடர்ந்தவர்களை ஏமாற்றிச்சென்ற பின்னரும் கங்கையாற்றையடைந்து குகனைக் கண்டு அவனுதவியால் ஆற்றைக் கடந்து சென்றவரை சுமந்திரன் கூடவே வந்தான் என வால்மீகி கூற அதற்கு மாறாக 'நகரமாந்தர் நடுவணிருந்த இராமன் சுமந்திரனை அயோத்திக்கு அனுப்பிவிட்டு அன்றிரவே ஒருவருமறியாமல்நடந்து போய்விட்டான்' என்று கம்பர் கதையை மாற்றிக் கூறுகிறார். அத்துடன் நில்லாது வால்மீகி போக்குக்கு மாறாக இராமனை நடுவழியில் விட்டுவிட்டு சுமந்திரன் அயோத்தி வந்ததும் தசரதன் மாண்டதும் அவனுடலைத் தைலத்திலிட்டதுமாகிய வரலாற்றைக் கூறிவிட்டு பின் இராமன் போக்கைத் தொடர்கிறார் கம்பர். சுமந்திரன் திரும்பியதும் தசரதன் மாண்டதுமாகிய வரலாற்றுப் பகுதியை வரும்போது அடுத்த கட்டுரையில் ஆராய்வோம்.

இராமன் கங்கையையடைந்தவுடன் அங்கே பல முனிவர்கள் அவனை எதிர்கொண்டழைத்துத் தமது குடிசைகளுக்கு அழைத்துச் சென்றனரெனக் கம்பர் கூறுகிறார். இது வால்மீகி கூறாதது. மேலும் கம்பர் குகனை முன் பின் அறியாதவனைப்போலக் கொண்டு வந்து நிறுத்தி அவனை இலக்குவன் யாரென வினவியதாகவும் இலக்குவன் காலில் அவன் வீழ்ந்து இராமனைப் பார்க்கவந்த தன் எண்ணத்தைக் கூறியதாகவும் உடனே இலக்குவன் உள்ளேபோய் இராமனிடம் கூறியதாகவும் இராமன் அழைத்து வரச்சொல்ல குகன் சென்று அவனுடைய காலில் வீழ்ந்து பணிந்தனனெனவும் கம்பர் புதுவதோர் கதைகட்டுகிறார். இவ்வாறு இவர் கதை கட்டிய தன் நோக்கம் குகனை அடிமைபோலவும் இராமனைத் தலைவன்போலவும் காட்டுதற்குப்போலும்! இவர் தீயமதி இருந்தவாறு மிக அழகிது. இவர் தம் பொய்ம்மையை யென்னென்பது?

"தன்னெஞ் சறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்."

என்பது பொய்யாமொழியாதலின் இவர் இப்பாடல்களைப் பாடிய பின்னர் தன்னெஞ்சே தம்மைச் சுட்டதாகப் ப்ரயிரத்தில் "என்னை வையம் இகழவும்" என்று கூறுகிறார். வால்மீகியோ "அந்நாட்டிற்கு அரசன் குகன், அவன் இராமனுக்கு உயிர்த்தோழன். அவன் இராமனைப்பார்க்க வந்தான். அவன் வருவதைத் தூரத்திலேயே கண்டு இராமனும் இலக்குவனும் எழுந்து எதிர்கொண்டு உபசரித்தார்கள். குகன் இராமனை அந்நிலையிற் கண்டு மிகவும் கவலைப்பட்டு அவனை அன்புடன் கட்டியணைத்து 'இது உன் நாடு, இங்கேயே வாழ்க' என்று வேண்டுகிறான். இராமன் அவனை இறுகத் தழுவி 'உன்னுடைய இனிய மொழிகளால் மகிழ்ந்தேன். இப்போது யான் பிறரிடம் உண்பது கூடாது' எனக்கூறி இலக்குவன் தந்த கங்கை நீரைக்குடித்தான்." (சருக்கம் 50) எனக்கூறுகிறார். இதனால் இராமன் குகனை எதிர்கொண்டு உபசரித்தனனென்பதும் குகன் இராமனைக் கட்டியணைத்தனனென்பதும் விளங்குவதால் இருவரும் நெருங்கிய நட்பாளராய்ப் பழகினமை தெளிவாகிறது. பின்னரும் இராமன் குகனைக் கட்டியணைக்கிறான் என்கிறார் வால்மீகி. உண்மை இவ்வாறாக, குகன் அடிபணிந்து நிற்க அவனை உட்காரச் சொல்லியும் கூட அவன் உட்காரமாட்டேனென்று கூறுகிறானெனக் கம்பர் பொய்க்கதை கூறுவதால் என்ன பயன் பெற்றார்? "பொய் சொன்ன வாய்க்குப் போசனமில்லை" என்ற உண்மைப்படி சோழ மன்னவனால் இக்கம்பர் துறத்துண்டு பலபாடுபட்டும் உணவும் கிடைப்பதரிதாகிச் சில காலம் திரிந்தாரென்னும் வரலாறு உண்மையே போலும்!

இலக்குவனையும் படுத்துக்கொள்ளுமாறு கூறி வில்லேந்திக் குகன் காத்திருந்தமையைக் கூறாது முதலில் இலக்குவனைப்பற்றி "விழித்தகண் விழித்தபடி காத்து நின்றான்" என்று கூறிவிட்டுப் பின் குகனும் அயல் நின்றானென்று கம்பர் கூறுகிறார். 'போய்விட்டுக் காலையில்வா' எனக் கூறிய இராமனுக்கு 'உடன் வாழ்வு தருக' என்று குகன் வேண்டிபதாகவும், பின்னர் இராமன் அவனை உடனிருக்கக் கூறி முனிவர்களுடைய குடிசையில் தங்கினனெனவும் கம்பர் கூறுகிறார். இவையெல்லாம் குகனுடைய உண்மைப் பெருமையை மறைத்து இராமனைப் பெருமைப்படுத்தவே போலும். பின் குகன் ஒருநாளாவது தன்னூரில் தங்கிப்போமாறு இராமனை வேண்

டியதாகவும் அதை மறுத்துரைத்து, உடனே தோணி கொண்டுவர இராமன் கட்டளையிட்டதாகவும் கம்பர் கூறுகிறார். இது வால்மீகி கூறாதது. பின் ஓடமேறுமுன் குகனை ஆலம்பால் கொண்டுவரச் சொல்லி இராமனும் இலக்குவனும் தமது தலைமயிரைச் சடையாக்கிய செய்தியைக் கம்பர் மறைத்தார்.

வால்மீகி கூற்றுப்படி இராமன் முன்னாலேயே குகனிடம் பல முறை கண்டு நெருங்கிப் பழகிய நண்பனென்பதும், அவனிடம் மிகவும் நல்லவனைப்போல இராமன் பாசாங்கு பண்ணி வந்திருக்கிறானென்பதும், அதற்காகவே அவன் கொண்டுவந்த புலாலுணவை மறுத்து இலக்குவன் தந்த தண்ணீரைக் குடித்து நல்ல குணமுடையவனைப்போல் குகன் முன் நடிக்கிறானென்பதும் புலனாகின்றது. புலாலுணவை வெறுத்துக் காய்கனி இலைகளையே தின்று வாழப்போகிறேனென்று கூறிய இராமன், குகன் கொணர்ந்த இனிய புலாலை மறுத்து நீரருந்திய இராமன், பின்னர் பல மிருகங்களை அடித்தடித்துத் தின்றானென்றால் அவனுடைய முன்னைய நடைகளை உண்மையென்பதா, பாசாங்கென்பதா? பாசாங்கென்பது வெளிப்படையே. மேலும் குகன் தந்த உணவை மறுத்துப் பரத்துவாசன் தந்த உணவை இராமன் உண்டதே இதை வலியுறுத்தும். சுமந்திரனை அனுப்பும்போது அங்குளார்க்குச் சொல்லுமாறு இராமன் சில கூறினன் என்பது உண்மை. பின் கம்பர் கட்டிய கதை விந்தையே. அதாவது சுமந்திரன் சீதையிடத்துச் செய்தி கேட்டுத் தெரிந்தபின் இலக்குவனிடம் கேட்டதாகவும், இலக்குவன் தசரதனையும், பரதனையும், கைகேசியையும் இகழ்ந்ததாகவும், அது கேட்ட இராமன் இலக்குவனைக் கண்டித்ததாகவும் கம்பர் கதை கட்டுகிறார். இதுவும் இராமனை நல்லவன்போலவும் நீதி தவறாதவன்போலவும் தமிழ் மக்களுக்குக் காட்டி மயக்கவே. இனத்தவரைக் கெடுப்பதால் இக்கம்பர் பெற்ற பயனென்ன?

பின் குகனே படகோட்டிச் சென்றதாகப் பொய் புகல்கிறார் கம்பர். வால்மீகி வரலாற்றுப்படி குகனின் ஏவலர் படகோட்டினர். குகன் வடகரையிலேயே நின்றுவிட்டான் என்பதே கதை. இதற்கு மாறாகக் குகன் படகோட்டினனென அவனைக் கேவலப்படுத்துவதோடு அக்கரையிற் சென்ற பின் குகன் தானும் இராமனுடன் வரு

வதாகக் கூறுவதாகவும் இராமன் அதனால் அவனைத் தன் கூடப் பிறந்தவருளொருவனாகக் கூறியதாகவும் பின் அவனை அங்கேயே நிறுத்திச் சென்றதாகவும் கம்பர் புதுக்கதை புனைகிறார். மேலும் சித்திரகூடத்தைப்பற்றி பரத்துவாச முனிவன் இராமனிடம் கூறி, அதற்குப் போகும் வழியையும் கூறினானென வால்மீகி கூற, கம்பர் அதற்கு மாறாக இராமன் குகனிடம் சித்திரகூடம் போகும் வழியைக் கேட்டதாகக் கூறுகிறார். மற்றும் குகனைக்காணுமுன் சீதையும் இராமனும் கங்கையில் நீராடியதாகக் கம்பர் கூறுவது வால்மீகி கூறாத கதையே.

இராமன் முதலியோர் பரத்துவாச முனிவருடைய குடிசை முன் சென்று காத்திருந்து அம் முனிவனிடம் சொல்லியனுப்பி விடைபெற்று உள்ளே போய்ப் பணிந்து தம்மை இன்னாரெனத் தெரிவித்துக் கொண்டனனென்ற கூற்றுக்குமாறாகக் கம்பர் அம் முனிவன் இராமனை எதிர்கொண்டழைக்கின்றனனெனவும் அவர்களுடைய தவவேடக் காரணம் கேட்கின்றனனெனவும் கதை கூறுகின்றனர். யமுனை நதியில் இராமன் முதலியோர் நீராடினரெனவும் இலக்குவன் இயற்றிய தெப்பத்தில் இராமனும் சீதையுமேறிக் கொள்ள இலக்குவன் அதைத் தள்ளிக்கொண்டு நீந்தி அக்கரை சேர்ந்தான் எனவும் கம்பர் கூறுவது புதுக்கதை. அகத்திய முனிவரைக்கண்டு சித்திரகூடம் புகுந்தனனிராமன் என்ற வரலாற்றையும், பல தடவைகளிலும் காட்டுப்பன்றி முதலிய பலவகைப்பட்ட மிருகங்களைக்கொன்று இராமன் தின்றதையும், வேட்டையிலுள்ள தன் வேட்கையை வெளிப்படுத்தியதையும், தசரதனையும் கைகேசியையும் பலவாறு இகழ்ந்து பரதனொருவனே அரசாளப்போகிறானே என்றிராமன் ஏங்கியதையும் கம்பர் மறைத்துவிட்டு இராமனை மிகவும் நல்லவனைப்போலச் சித்தரித்துக் காட்டுகின்றார். இவ்வாறு கம்பர் உண்மைக் கதையைத் தமிழ்மக்கள் அறியாவண்ணம் தடுத்துப் பொய்க்கதை கூறித் தமிழ் மக்களுக்கு இழிவும் ஆரிய மக்களுக்கு ஏற்றமும் தேடி வைத்தார். மரங்களைக்கெடுப்பது அதன் கிளையொன்றாம் காம்பேயன்றோ ?



# பதினொன்றாம் அத்தியாயம்.

---



இராமன் கங்கையின் தென்கரையை யடைந்து நடந்துபோவதை அவன் தலைமறையும் வரை குகன் சுமந்திரனோடு பார்த்திருந்துவிட்டுச் சுமந்திரனையழைத்துக்கொண்டு தன் ஊரையடைந்தான். பின் அவன் தூதர்களையனுப்பி இராமன் பரத்துவாசனோடிருந்ததையும் அவனிடம் வழி கேட்டுத் தெரிந்துகொண்டு சித்திரகூடம் வரையிற் போனதையும் அறிந்துகொண்டு சுமந்திரனிடம் கூறினான். அதன் பின் அங்கிருந்து புறப்பட்டு சுமந்திரன் மூன்றாம் நாள் மாலையில் மனக் கவலையோடு தேருடன் அயோத்தியை யடைந்தான். அவன் தசரதனை அணுகி இராமன் சொல்லியனுப்பியதைக் கூறினான். அதைக் கேட்ட தசரதன் மூச்சற்றுக் கீழே விழுந்தான். அவனைக் கோசலையும் சுமத்திரையும் வாரி யெடுத்துக் கட்டிலில் கிடத்தினர். கோசலை அவனை நோக்கி "அரசே! சுமந்திரனிடம் ஏன் பேசவில்லை? இந்த அநியாயத்தைச் செய்துவிட்டு இப்போது ஏன் வெட்கப்படுகிறீர். என்னைத் திருப்தி செய்யத் தாங்களும் துக்கப்படுவதுபோல் காட்டிக்கொண்டால் எனது துக்கம் தணியுமா? ஆகையால் இந்தப்பாசாங்கு வேண்டாம். துக்கப்படாமலிருந்தால் யாராவது நிந்திப்பார்களேயென்றுப் பயந்து உலகப்பழிப்புக்கஞ்சி வருந்துகிறீரோ? அது வேண்டாம். இங்கே கைகேசி இருக்கிறாளென்று அஞ்சி இராமனைப்பற்றிய செய்தியைக் கேட்காமலிருக்கிறீரோ? அவள் இங்கே இல்லை. ஆதலின் தைரியமாய்ப் பேசும்" என்று கூறி மூச்சற்று வீழ்ந்தாள்.

மூர்ச்சை தெளிந்த மன்னன் சுமந்திரனை யழைத்து வினவினான். சுமந்திரன் "இராமன் என்னிடம் சொல்லியனுப்பியதைக்கூறுகிறேன். அரசனையும் கைகேசியையும் பரதனையும் மரியாதையாக நடத்த

வேண்டுமென்று கோசலையிடம் சொல்லச் சொன்னான். பரதனிடத்தில் கோசலையை மரியாதையாக நடத்தும்படி சொல்லச் சொன்னான். இதைச் சொல்லும்போது இராமன் துக்கத்தால் கண்கள் சிவக்க மள மளவென்று கண்ணீர் வடித்தான். இலக்குவன் இராமனைப் போல் மனத்திலிருக்கும் எண்ணங்களை மறைக்க முடியாதவன். அவன் தசரதர் மிகவும் அநியாயம் செய்து தங்களைத் துன்பத்துக்காளாக்கி விட்டதாகவும், அநியாயக்காரராகிய தசரதரைத் தன் தந்தையாகத் தான் மதிக்கவில்லையென்றும், விவேகமற்று நீதிதிறம்புவாரைத் தள்ளவேண்டுமென்றும், இராமனைக் காட்டுக்கனுப்பி மறம்புரிந்த தசரதர் எவ்வாறு அரசராக இருக்க முடியுமென்றும் கோபத்தோடு கூறச்சொன்னான். சீதையோ மனதில் நிறைந்த கவலையால் பெரு மூச்சு விட்டுக்கொண்டு பிசாசம் பிடித்தவளைப்போல் ஒன்றும் தோன்றாமல் திகைத்து நின்றாள். துக்க மிகுதியால் கண்ணீர் வடித்துக்கொண்டு ஒன்றும் பேசவில்லை. அழுதுக்கொண்டு என்னையும் தேரையும் பார்த்துக்கொண்டே நின்றாள். நான் புறப்பட்டேன். ஆனால் இராமன் மறுபடியும் என்னை அழைப்பானோ என்று எண்ணி அவனுடைய நண்பனான குகனுடன் மூன்று நாளிருந்தேன். ஊரில் எல்லோரும் இராமனை நினைத்து வருந்துகின்றார்கள்" என்று கூறினான். அதைக் கேட்ட தசரதன் "அறியாமல் மோசம் போனேனே, அழகிற் சிறந்த இராமனுடைய முகமண்டலத்தை நான் பார்க்காவிட்டால் கட்டாயம் இறந்தே போவேன். என் அதிகாரம் செல்லுவது உண்மையானால் இப்போதே என்னைத் தேரிலேற்றி இராமனிடம் கொண்டுபோய் விடு" என்று அழுது கீழே வீழ்ந்தான். கோசலையும் தேரைத் திருப்பித் தன்னை இராமனிடம் சேர்க்க வேண்டினாள். சுமந்திரன் அவளை நோக்கி "சீதையும் இராமனும் கவலையற்று வாழ்கின்றார்கள். கைகேசியைப்பற்றி சீதை ஒரு விநோதமான வார்த்தை சொன்னாள்" என்றான். உடனே அவன் 'என்ன காரியம் செய்தேன். சீதை கைகேசியைப்பற்றி வெகு கடுமையாகப் பேசிய சொற்களை இப்போது கூறினால் கோசலைக்குப் பிரியமாயிருக்குமென்று சொல்ல ஆரம்பித்து விட்டேனே. அதைக்கேட்டால் கிழவராகிய அரசரும் அவருடைய மனைவியும் உயிரை விட்டாலும் விடுவார்களே. இதை எப்படியாவது மறைக்க வேண்டு'மென எண்ணி "அது எனக்கு நினைவுக்கு வரவில்லை. கவலைப்படவேண்டாம்" என்று தேற்றினான்.

கோசலை தசரதனைப் பார்த்து "நீர் மிகவும் அபகீர்த்தியை விளைவிக்கும் செயலைச் செய்துவிட்டீர். இதுவரையில் புதுமையான அன்னங்களையும் மாமிசங்களையும் உண்ட சீதை காட்டில் யாதுசெய்வாள்? ஐயோ! இராமனைக் காண்பேனோ? திரும்பி வந்த போது பரதனும் நாட்டை அவன் கொடுத்தாலும் இராமன் ஏற்கமாட்டான். தம்பி ஆண்டதை அண்ணன் ஆளுவானா? வீரனாகிய இராமன் தந்தையாதலால் உம்மைக் கொல்லாது விடுத்தான். மீன் தன் குஞ்சுகளைத்தின்பது போல உமது மூத்த மகனைக் கொன்றுவிட்டீரே! என்ன அநியாயம்? பெண்களுக்குக் கதி கணவனே. அவனில்லாவிட்டால் மகன்; அவனுமில்லாவிடின் தந்தை முதலிய சுற்றத்தார். பெண்கள் பிறர்க்கு அடங்கியிராமல் ஒருக்காலும் தம்மனப்படி நடக்க முடியாதென்று விதியுளதன்றோ? இப்போது நீரோ என் சக்களத்தி வசப்பட்டிருக்கிறீர். ஆகையால் உம்மை இழந்தது போலாயிற்று. என் மகனோ துரத்தப்பட்டான். உறவினரோ அருகிலிலர். ஆகையால் எவ்விதத்திலும் என்னைக் கெடுத்துவிட்டீர். இத்தீச்செயலைச் செய்து நீர் அடைந்த பயனென்ன? உமது ஆசை நாயகியான கைகேசியும் பரதனும் வாழ்ந்தால் போதுமா? பிறர் எப்படியானால் உமக்கென்ன?" என்று கொடிய சொற்களைக் கூறினாள்.

இதைக் கேட்டு மனமுடைந்த தசரதன் மூச்சற்றான். தெளிந்த பின் கோசலை பக்கத்திலிருப்பதைப் பார்த்து மறுபடியும் மூச்சற்றான். அப்போது அவனுக்குத் தான் முன் செய்த அறக்கொடுஞ் செயலொன்று நினைவிற்கு வந்தது. அதனால் அஞ்சி நடுங்கி வெட்கத்தால் தலைகுனிந்து வணக்கமாகக் கைகூப்பி, "உடைந்த என் மனதை இன்னும் புண்ணாக்காதே; உன்னைப் பணிகிறேன். என்னை மன்னி" என்றான். கோசலை "இச்சொற்களைக் கூறி என்னை மறுபடியும் கொல்லவேண்டுமா? பிள்ளையைப் பிரிந்ததால் கடுமையாகப் பேசிவிட்டேன். மன்னியும். இது இராமனைப் பிரிந்த ஐந்தாவது இரவு" என்றனள். இரவு தொடங்கிற்று. தசரதன் தூங்கினான்; பின் கொஞ்சநேரத்தில் விழித்துக்கொண்டான். அது இராமன் காடேகிய ஆறுவது நாள் இரவு. தசரதன் விழித்து "கோசலே! அநியாயமாக இராமனைக் காட்டிற்கனுப்பிவிட்டேன். நான் இளவரசாக இருக்கும்போது ஒருநாள் வேட்டையாட ஆசையோடு காடடைந்தேன். சரயு நதியில் இரவில் தண்ணீர் குடிக்க வரும் மிருகங்களைக் கொல்ல

லாமெனக் காத்திருந்தேன். யானை தண்ணீர் குடிப்பதுபோலச் சத்தம் கேட்டது. உடனே அம்பெய்தேன். அது தண்ணீர் முகந்து கொண்டிருந்த ஓர் முனிவன் மேற்பட்டு அவன் கீழே விழுந்தான். உடனே அங்கே போய்ப் பார்க்க அம்முனி பூமியிற் கிடந்து புரண்டலறக் கண்டேன். அவன் 'நான் உனக்கென்ன கேடு செய்தேன்; கிழவர்களாய்க் கண் தெரியாமலிருக்கும் என் தாய் தந்தையருக்குத் தண்ணீர் கொண்டுபோக வந்த என்னைக் கொன்றாயே; இதைப் போய் என் தந்தைக்குச் சொல். அவர் உன்னைச் சுட்டுச் சாம்பலாக் காதபடி அவரை வேண்டிக்கொள். எனக்குத் துன்பத்தை உண்டு பண்ணும் இந்த அம்பைப் பிடுங்கிவிடு' என்றான். மறுபடியும் 'என் தாய் சூத்திரப் பெண்; என் தந்தை வைசியர். ஆதலின் பிரமஹத்தி வருமோ என்று வருந்தாதே' என்றான். நான் அம்பைப் பிடுங்க, என்னைப் பார்த்துப் பயந்து உடனே உயிரை விட்டான். நான் அவனுடைய தாய் தந்தையரிடம் போய் நடந்ததைக் கூறி மன்னிக்க வேண்டினேன். அவர்கள் 'நீ தெரிந்து செய்திருந்தால் உன் குலமே அழிந்துவிடும். எங்களை எங்கள் மகனிடம் கொண்டுபோய் விடு' என்றார்கள். நான் அவர்களை அவ்விடம் கொண்டுபோய்ச் சேர்க்க, அவர்கள் 'மகனே, நீ வேதத்தை அத்தியயனம் செய்வதை இனி நாங்கள் கேட்போமா?' என்று பலவாறு புலம்பி கிரியைகளைச் செய்தனர். அப்போது இறந்த முனிவன் ஒளியுருவையடைந்தான். தேவேந்திரன் வந்து அவனை விமானத்திலேற்றிப் போனான். பின் தாய் தந்தையர் 'நீ அறியாத்தனத்தால் அவனைக் கொன்றதால் உன்னைச் சாம்பலாக எரிக்காமலிருக்கின்றோம். ஆகையால் நீயும் எங்களைப் போலப் புத்திரசோகத்தால் மரணமடைவாய்' என்று சபித்து எரியிற் புகுந்து விண்ணுலகடைந்தனர். அந்த மகானுடைய சொற்படி நான் இன்று புத்திர சோகத்தால் இறக்கப் போகிறேன். அநியாயமாக இராமனைத் துரத்தினேன். கோசலே! என்னைத் தொடு. இராமன் ஒரு தடவை என்னைத் தொட்டாலும் போதும்; ஒருமுறை என் கண்ணில் பட்டாலும் போதும்; நான் பிழைத்திருப்பேன். அவனை நானிறக்கும்போது பார்க்க முடியவில்லையே. இராமனைப் பார்க்காததாலுண்டாகும் சோகம் என் உயிரை வற்றச்செய்கிறது. அவனுடைய பேரழகுவாய்ந்த மதுரமான வாசனை வீசும் முகத்தை அவன் திரும்பிவரும்போது பார்ப்

பவர்களே புண்ணியம் செய்தவர்கள்" என்றிப்படிக் கதறினன். பின் பாதி இரவு கழிந்தபின் துக்கந் தாங்காமல் உயிரை விட்டான்.

கோசலையும் சுமத்திரையும் அவன் பக்கத்திலேயே படுத்துத் துயின்றிருந்தனர். விடிந்ததும் மற்றைப் பெண்களெல்லாம் எழுந்து அரசன் செத்துக்கிடப்பதைப் பார்த்து அலறினர். அவர்கள் அலறு வதைக் கேட்டுக் கோசலையும் சுமத்திரையும் எழுந்து அரசனிறந்த துணர்ந்து கதறினர். கைகேசி முதலிய பெண்களும் வந்து அரற் றினர். கோசலை தசரதனைக் கட்டிக்கொண்டு "அடி, கைகேசி! என் மகனை இருந்தும் இறந்தவனைப்போல் செய்துவிட்டாய். கணவனை யும் கொன்றுவிட்டாய். இனி நான் உயிர் வாழேன். கணவரோடு உடன்கட்டை யேறுகிறேன்" என்றனள். மந்திரிகள் தசரதனுடைய பிணத்தை எண்ணெயிலிட்டுப் போற்றினர். உறவினர் சிலர்கொளுத்தி விடுவோமென்று கூறினும் அவர்கள் பிள்ளைகள் வரும்வரை அச் செயலை நிறுத்திவைப்போமென்றனர். மறுநாள் காலையில் அமைச்சர், அந்தணர், குடிகளனைவரும் சபை கூடினர். அவர்கள் வசிட்டனை நோக்கி அரசனில்லாமையால் விளையும் கேடுகளைக்கூறி அரசனுடைய மக்களில் யாரையாவது உடனே அரசனுக்குமாறு வேண்டினர். வசிட் டன் "மன்னன் அரசைப் பரதனுக்குக் கொடுத்துவிட்டான். ஆத லின் சித்தார்த்தன் முதலிய வீரர்கள் உடனே புறப்பட்டுச் சென்று பரதனைக்கண்டு நான் அவசரமாக அழைத்ததாகப்பரதனை அழைத்து வரட்டும். இராமன் காட்டையடைந்ததையும் தசரதன் மாண்ட தையும் அவனிடம் கூறவேண்டாம்" என்றனன். சித்தார்த்தன் முதலியோர் புறப்பட்டுப்போய் பரதனையடைந்தனர். இவ்வரலாற் றை ஆராய்வோம்.

இராமன் சொல்லியனுப்பியதைக் கேட்டவுடன் மூச்சற்று விழுந்த தசரதனைக் கோசலை பார்த்து அநியாயக்காரனென்றும், பாசாங்குக்காரனென்றும், வஞ்சகனென்றும் கூறுவதைக் கவனித் தால், அவள் தீயபெண்களுக்கொரு வழி காட்டியாக இருக்கிறாளென் பது திண்ணம். அவளைப்போலும் பெண்களைக் கொண்டவனுக்குக் கூற்றுவனும் வேறு வேண்டுமோ? பின்னரும் அவள், தன்னையும் தன் மகனையும் தசரதன் கெடுத்துவிட்டதாகப் பலவாறு அவதூறா கப் பேசுகிறாள். அவள் அப்போது பேசிய பேச்சுக்கள் மிகவும்

கொடியவை; அதைக் கேட்டவுடன் தசரதன் நடுங்கி மனமுடைந்து மூச்சற்றான். பின் தெளிந்த உடனேயும் பக்கத்தில் நின்ற கோசலை யைப் பார்த்து நடுங்கி மறுபடியும் மூச்சற்றான். பின் அவளை நோக்கிக் கைகுவித்து வேண்டுகிறான். இவ்வளவு தூரம் தனது கணவனையே நடு நடுங்கச்செய்த கோசலையைப் பெண்ணென்பதா பேயென்பதா? பேய்கூட இவ்வளவு கொடுமையாக நடந்துகொள் ளாதே. கோசலை "சுவை மிகுந்த மாமிசங்களை உண்டவளான சீதை காட்டில் என்ன செய்வாள்" என்று புலம்புகிறாள். சீதை காட்டில் முழுப் பன்றிகளையும் மான்களையும் தின்பது இவளுக்குத் தெரியாது. இதனால் சீதை முதலியோர் நாடோறும் புலாலுண்போ ரென்பது உறுதியாகின்றது.

கோசலை 'கணவன், மகன் அல்லது தந்தை இவர்களுடைய ஆளுகையிலேயே பெண்கள் இருக்கவேண்டியவர்கள், பெண்கள் பிற ருக்கு அடங்கியிராமல் ஒருக்காலும் தம்மனப்படி நடக்கமுடியா தென்று விதியுள்ளதன்றோ?' என்று கூறுகிறாள். இதனால் ஆரியர் தம் பெண் மக்களை மிகவும் தாழ்த்தியே வந்தனரெனத் தெரிய வருகிறது. தற்காலத்திலும் ஆரியர், பெண்கள் முத்தியடையா ரென நம்புகின்றனர், நூல்களெழுதுகின்றனர், நடையிலும் அவ் வாறே செய்கின்றனர். ஆரியப் பெண்களில் திருநீறு அணியும் குடும்பதைச் சேர்ந்தோர் தமது கணவரைப்போல திருநீறணிவ தில்லை, நாமமணியும் குடும்பத்தினர், தமது கணவரைப்போல் நாம மணிவதுமில்லை. திருநீறணியும் குடும்பத்தினர் கணவனைப் பறி கொடுத்த விதவைகளுக்கு தம்மைப்போல் திருநீறணிய உரிமை தருகின்றனர். இதனால் அவர்கள் விதவைகளைத் தமக்குச்சரியான நிலையுடையரெனக் கருதுகின்றனரென்பது விளங்குகிறது. பெண் மக்களை உரிமையற்றவர்களாக ஆக்கிக்கல்வியறிவற்றவராகப் போகும் படிச் செய்த இவ்வாரியர் வழக்கமே தமிழ் மக்களிடையும் பரவுவ தாயிற்று. பண்டைத் தமிழ் மக்கள் ஆண்மக்களுக்கும் பெண் மக்களுக்கும் வேறுபாடு காட்டாத நிலையினர்.

தசரதன் சாகும்போது கோசலையும் சுமத்திரையும் அவன் பக்கத்திலேயே படுத்துத் தூங்கியிருந்தனர். மற்றைய பெண்கள் எழுந்து மிகவும் கூச்சலிட்டுப் புலம்பியபோதுதான் விழிக்கின்ற னர். சாகும் நிலைமையில் அவனிடம் அவர்கள் நடந்துகொண்டமுறை

யினல் அவனிடம் அவர்களுக்கிருந்த அன்பின் அளவு விளங்குகிறது. கணவன் உயிர் போய்க்கொண் டிருக்கும்போது மனைவியருக்கு உறக்கமும் வருமா? கணவனிறந்ததையுணர்ந்த கோசலை கைகேசியையே திட்டுகிறாள். பின் உடன் கட்டையேறுவதாகக் கூறுகிறாள். ஆனல் கடைசியில் அப்பேச்சு வெறும் பேச்சாகவே போகிறது.

சுமந்திரன் மிகவும் தீயவனென்பதும் ஏமாற்றுக்காரனென்பதும் தீயவனாகிய தசரதனுடைய சூழ்ச்சிகளுக்கு உடந்தையாயிருக்கிறானென்பதும் முன் கட்டுரைகளிற் கண்டோம். அது இக் கட்டுரையிலும் வலியுறுகிறது. அவனிடம் இராமன் மட்டுமே செய்தி சொல்லியனுப்பியிருக்க அவன் இலக்குவன் கூறியதாகவும் சில கொடிய பொய் மொழிகளைக்கூறுகிறான். முன் ஒன்பதாம் கட்டுரையில் இராமன் மட்டுமே செய்தி கூறியனுப்புகிறான் என்று தெளிவாகக் கண்டோம். இதனல் அவன் மிகவும் பொய்யன் என்பதும் விளங்குகிறது. இராமனல் பொய்புகலத் தூண்டப்பட்ட போது அதைக் கண்டிக்காமல் இணங்கியிருந்தவன் தானே இவன். இவ்விடத்து மொழிபெயர்ப்பாளர் சீனிவாசய்யங்கார் ஓர் குறிப்பு எழுதியிருக்கிறார், அது கவனிக்கத்தகுந்தது. அது வருமாறு, (பக்கம் 244) 'சுமந்திரரிடத்தில் இராமனும் லட்சுமணனும் சீதையும் என்ன சமாசாரம் சொல்லியனுப்பினர்களென்று முதலில் வால்மீகி வர்ணித்ததற்கும் பிறகு அவர் அதை அரசனிடத்தில் தெரிவிப்பதற்கும் சில பேதங்கள் காணப்படுகின்றன. லட்சுமணனுடைய வார்த்தைகள் முதலில் காணப்படவில்லையென்பதைக் கவனிக்கவும்.' இக் குறிப்பைக் கவனித்தால் ஒன்று வால்மீகி முனிவர் முன்னுக்குப் பின் முரணுக எழுதி அதனல் திறமையற்றவன் என்ற பெயரடைய வேண்டும், அல்லது சுமந்திரன் உண்மையில் கொடிய பொய்யனுக வேண்டும். இவ்விரண்டில் வால்மீகியிடத்தில் அறியாமையைக் கற்பிப்பதிலும் சுமந்திரனிடம் பொய்மையும் வஞ்சகமும் உண்டு எனும் உண்மையறிவதே முறை. ஏனெனில் அவன் அத்தகையன் என்பது முன்னரே நிலைநாட்டப் பெற்றது.

இராமனும் சீதையும் மகிழ்ச்சியோடும் படகேறிச் சென்றிருக்க சுமந்திரன் அவர்கள் அழுதுகொண்டு சென்றார்களென்று கூறுகிறான். பின் சீதை கைகேசியைப் பற்றி ஓர் விநோதமான வார்த்தை கூறின

ளெனக் கூறுகிறான். இது அபாண்டமான புளுகே. பின் அதைக் கூறினால் கோசலைக்குப் பிரியமாயிருந்தாலும் அரசனும் கைகேசியும் உயிரைவிட்டாலும் விடுவார்கள் என்று சிந்தித்து அதை மறைக்கிறான். இதனால் இப்பேச்சு கைகேசியினுடைய துர்நடத்தையைப்பற்றியேஇருக்குமென நினைக்க வேண்டியதிருக்கிறது. இப்பேச்சு சீதை கூறாத பொய் மொழியே. இதைச் சுமந்திரன் வேண்டுமென்று கட்டிக்கூறத்தொடங்குகிறான். இவ்வளவு தீமையாளனாகியசுமந்திரனை மந்திரியாகக்கொண்டிருந்த தசரதன் தன்மை மிக அழகிதே! நல்ல வேளையாக அவ்வித அபாண்டப் புளுகைக்கூறாது நிறுத்தினானே சுமந்திரன்! அதுவே மிகப் பெருமையுடைத்து.

தனது மனமுருகுமாறு பேசிய சுமந்திரனுடைய பொய்மொழியைக் கேட்ட தசரதன் 'அழகிற்சிறந்த இராமனுடைய முகமண்டலத்தை நான் பார்க்காவிட்டால் கட்டாயம் இறந்தே போவேன். என்னை இராமனிடம் கொண்டுபோய் விடு' என்று கதறி பின் தான் முனி மகனைக்கொன்ற கதையைக் கூறி 'கோசலே! என்னைத்தொடு. இராமன் ஒரு தடவை என்னைத் தொட்டாலும் போதும், ஒரு தடவை என் கண்ணிற் பட்டாலும் போதும், நான் பிழைத்திருப்பேன். அவனை நான் இறக்கும்போது பார்க்க முடியவில்லையே? இராமனைப் பார்க்காததாலுண்டாகும் சோகம் என் உயிரைவற்றச் செய்கிறது. அவனுடைய பேரழகு வாய்ந்த மதுரமான வாசனை வீசும் முகத்தை அவன் திரும்ப வரும்போது பார்ப்பவர்களே புண்ணியவான்கள்' என்று கதறுகிறான். பின் உயிர் விடுகிறான். இதனால் நாம் முன் கட்டுரைகளில் விவரித்தபடி தசரதன் இராமனிடம் கொண்டிருந்த ஆண் காதல் மிகத் தெளிவாகிறது. தசரதன் பிள்ளைகளாகிய பரதன், இலக்குவன், சத்துருக்கன் இவர்களிடம் காணாத ஓர்வித புது இன்பத்தை இராமனைத் தொடுவதினாலும் முத்தமிடுவதினாலும் கண்டனுபவித்தவனாவான். இவ்வித இன்பத்தை இழந்து அதை நினைந்து நினைந்து ஏங்கி ஏங்கி மனமுடைந்து உயிரையும் தசரதன் விடுகிறான்.

தசரதன் வேட்டையாடி உயிர்க்கொலை செய்வதில் மிகவும் விருப்பமுடையவனென்பது அவனுடையப் பேச்சிலிருந்தே தெரிய வருகிறது. இராமனும் அத்தகையனென்பது முன் கட்டுரைகளில்

விவரிக்கப்பட்டது. தசரதன் தன் அம்பால் சாகக்கிடந்த முனி மகனைக் கண்டபோது அவன் 'மன்னு! நான் சூத்திரப் பெண்ணுக்கும் வைசியனுக்கும் பிறந்தவன். ஆகையால் என்னைக் கொன்றதால் உனக்கு பிரம்மஹத்தி வந்து சேராது' என்று கூறுகின்றதாக வால்மீகி கூறுகிருர். இதைப்போலும் அநியாயம் வேறுண்டோ? ஈதெல்லாம் ஆரியருடைய பித்தலாட்டங்கள். ஆரியர்களுடைய நீதிகள் ஆணுக்கு வேறு பெண்ணுக்கு வேறு, ஒரு குலத்துக்கு வேறு மற்ருெரு குலத்துக்கு வேறு. தமிழ் மக்களுடைய நீதிகளோ அனைவருக்கும் ஒன்றுபோலிருக்கும். இதனைத் திருக்குறளில் காணலாம். இதனுலேயே அறிஞர் சுந்தரம் பிள்ளையும் 'வள்ளுவர் செய் திருக்குறளை மறுவற நன்கு உணர்ந்தோர்கள் உள்ளுவரோ மனுவாதி ஒரு குலத்துக்கொரு நீதி' என்றுரைத்திருக்கின்றனர்.

இவ்விடத்து மொழிபெயர்ப்பாளர் திருவாளர் சீனிவாசய்யங்கார் குறிப்பு கவனிக்கத்தக்கது. அது வருமாறு, (பக்கம் 262)'இங்கே ஒரு விஷயம் கவனிக்கத்தக்கது. தசரதனுல் கொல்லப்பட்டவன் வைசிய பிதாவிற்கும் சூத்திர மாதாவிற்கும் பிறந்தவன். ஆகையால் சங்கர ஜாதியைச் சேர்ந்தவன். அவனுடைய முன்னேர்கள் தவத்தால் உத்தம லோகங்களை அடைந்ததாகச் சொல்லப்படுகிறது. அவன் வேதங்களை அத்யயனஞ் செய்ததாகவும் அக்கினி ஹோத்திரங்களைச் செய்ததாகவும் சொல்லப்படுகிறது. அக்காலத்தில் இந்த உரிமைகள் பிராம்மண க்ஷத்திரிய வைசியர்களென்ற முப்பிறப்பினருக்கும் உண்டென்று சொன்னுலும், கேவலம் வைசியனல்லாமல் சூத்ர ஸ்திரியிடத்தில் பிறந்தவனுக்கு அந்த உரிமையுண்டா? சூத்திர ஸ்திரீக்குத் தவம் செய்யும் உரிமையுண்டா? வானப்ரஸ்த ஆச்ரமத்தை அவர்கள் அனுஷ்டித்ததாகக் காண்கிருேம். ஆனல் இராமன் இராஜ்யபாலனஞ் செய்யும்பொழுது ஒரு பிராம்மணனுடைய புத்திரன் அகாலத்தில் மரணமடைய அதற்கு அரசனுடைய அநீதியே காரணமென்று அந்த பிதா அரண்மனை வாசலில் வந்து முறையிட்டார். இராமன் தன் இராஜ்யத்தில் அதர்மத்தைச் செய்கிறவன் யாரென்று தேடித் தண்டகாரண்யத்தில் சம்பூகனென்ற சூத்திரன் தவஞ் செய்யக்கண்டு அவனைக் கொன்ருர். உடனே அந்த பிராமணச் சிறுவன்பிழைத்தானென்று உத்தரகாண்டத்தில் 73, 76 சருக்கங்களில் காண்கிருேம். இவ்விரண்டும் எப்படிப் பொருந்தும்?'

இதுவே நமது ஐயங்காருடைய குறிப்பு. இதனல் தசரதன் காலத்தில் சங்கர வகுப்பானெருவனே தவம் செய்து நல்ல பதவி பெற்றிருக்க அவனிலும் உயர்ந்த சூத்திரனெருவன் இராமன் காலத்தில் தவம் செய்தது பெரும் குற்றமாகக் கருதப்பட்டிருக்கிறது. இதனல் நாளடைவில் பார்ப்பனருடைய ஆதிக்கம் வலுக்க வலுக்க 'சூத்திரர்' முதலியோர் தாழ்த்தப்பட்டிருக்கிருர்களென்பது தெரிகிறது. ஆரியருள்ளும் பார்ப்பனர் முதலிய ஜாதிகள் அவரவர்கள் தொழிலாலேயே ஏற்பட்டிருக்கிறது. நாளடைவில் அச்சாதிகளை தனித்தனியாகப் பிரித்துவிட்டனர். பின்னர் ஏற்றத்தாழ்ச்சிகளும் உண்டாயின. பின்னர் ஏற்றம் பெற்ருேர் தாழ்ந்தோரை நசுக்கித் தாம் வாழப்பார்ப்பாராயினர். இராமாயணத்தை முதன் முதலாக எழுதின வால்மீகி முனிவரே முதலில் வேடனுக இருந்தவர். பின்னர் அவருடைய தவப்பெருமையால் பார்ப்பனராயினர். ஆனல் அவர், அந்நிலையில் உயர்ந்தவனுகிய முனிவன் வாயினல் முனிவனுகிய தன்னைக் கொன்றதிலிருந்து தசரதனுக்குப் பிரமகத்தி வருவதில்லை என்று கூறியதாக எழுதியிருப்பது அவரது சுயநலத்தையே குறிக்கும். பின்னர் சூத்திரனுகிய ஒருவன் தவம் செய்தது உலகத்துக்கே பெரும் கேடுதருவதாகும் என இராமன் நம்பி அம்முனிவனைக் கொன்ருனென எழுதியிருப்பதும் அவரது சுயநலமே. ஆதலின் சுயநலக்காரர் சிலர் சேர்ந்துகொண்டு பிறரைத் தாழ்த்தி அவர்கள் கேட்டால் தம் நலம் பேணுமாறு துணிந்தனரென்பது இதனல் தெற்றென விளங்குகின்றது. தசரதன் காலத்தில் வைசியனெருவன் சூத்திரப்பெண்ணைக்கலியாணஞ் செய்துகொண்டு ஒரு மகனைப்பெற்ருன், அம்மகனும் தவம் செய்து பெருமை பெற்ருன், வைசிய முனிவன் தந்த சாபம் தசரதனையும் சூழ்ந்து பலித்தது என்று காணப்படும் உண்மைக்கு மாருக இராமன் காலத்தில் ஓர் சூத்திரன் தவம் செய்தமையால் ஒரு பார்ப்பனச் சிறுவன் செத்தானென்பது அறிவுடையோர் ஒப்புமாறில்லை. இதனல் இச்செய்திகளெல்லாம் மேல் வகுப்பினர் பிறரைத் தாழ்த்துமாறு எழுதி வைத்த சூழ்ச்சிகளேயன்றி வேறில்லை.

இராமன் உண்மையில் தெய்வத் தன்மையுடையனேயாயின் அப்பார்ப்பனச் சிறுவன் உயிர் பெற்றெழச் செய்திருக்கலாமே? அதை விடுத்து அவன் ஓர் உயிர்க்கொலை—அதுவும் உலகப்பற்றை

ஒழித்து இறைவழி நின்று தவமுதிர்வெய்திய ஓர் உயிர்க்கொலை—செய்தனனும்; அதனல் பார்ப்பனச் சிறுவன் உயிர்பெற்றனனும். இது அறிவுடைய நன்மக்கள் கூற்ருமா? மனிதரனைவரும் கடவுளுடைய மக்களேயாக அவர் முன் குல வேறுபாடும் அக்குலங்களிலும் ஒரு குலத்துக்கு ஒரு நீதியுமா? என்னே அநியாயம்! இக்கொலை பாதகனுகிய இராமனையும் தெய்வமாக வழிபடுகின்றனரே! பாவம்! பாவம்! ஆனல் இக்காலத்தில் இவ்வாரியருள் ஒரே ஒரு குலம்தான் இருக்கிறது. அது பார்ப்பன வகுப்பே. ஏனைய க்ஷத்திரிய, வைசிய, சூத்திர வகுப்பெல்லாம் அழிந்தொழிந்தன. இப்பார்ப்பனரோ தமிழ் மக்களுடன் நெருங்கிப்பழகி தாம் உயர்ந்த வகுப்பினரென்றும், தம்மின் வேருன தமிழ் மக்களாகிய மற்றையோரனைவரும் சூத்திரர்களென்றும் கூறுவாராயினர். இதனைத் தமிழ் மக்களிற் பெரும்பாலோர் உண்மையென நம்புவாராயினர். ஆரியருக்கும் தமிழருக்கும் யாதொரு சம்மந்தமும் கிடையாது. தமிழ் மக்களுக்கு வெள்ளைக்காரர்கள் எப்படி வேறுபட்ட வகுப்பினரோ அதைப்போலவே ஆரியப் பார்ப்பனரும் வேறுபட்ட வகுப்பினரே. ஆதலின் தமிழ் மக்களனைவரும் இப்பார்ப்பனர் தம்மைச் 'சூத்திர' ரெனக் கூறுவதைக் கேட்டிருத்தல் பரிதாபமே. தமிழ் மக்கள் பண்டைக்காலத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என நான்கு பெரும் பகுதியினராயிருந்தனரெனவும், இவர்கள் தம்முள் தொழில்முறையில் வேறுபாட்டைத் தவிர வேறு கொள்வினை கொடுப்பினை, உடனுறைவு, உடனுணவு இவையெல்லாவற்றிலும் வேறுபாடில்லாமல் ஒருதாய் வயிற்றுப் பிள்ளைகள்போலவே வாழ்ந்துவந்தனரெனவுமே பண்டைத் தமிழ் நூல்களறிவிக்கின்றன. ஆதலின் தமிழ் மக்களே தம்முள் பிறருடைய முயற்சியால் அமைந்து பதிந்து கிடக்கும் வேறுபாடுகளை ஒழித்து ஒன்றுபட வேண்டும். ஒன்றுபட்டாலே வாழ்வுண்டு, ஒன்றுபடாதவரை தாழ்வே. ஆதலின் தமிழ் மக்களனைவரும் வேறுபாடுகளை யொழித்து விரைவில் ஒன்றுபட்டுப் பெருவாழ்வடைய முன்வர வேண்டும். பிறர் தம்மைச் சூத்திரர் என்ற இழி பெயராலழையாமலிருக்கப் பார்த்துக் கொள்ளவேண்டும். சில சமயப்பிரசங்கிகள் பிரசங்க மேடையேறியோ அல்லது சந்திகளில் நின்றுகொண்டோ தம்முன் நிற்கும் அந்நிய சமயத்தினரை நோக்கி "அஞ்ஞானிகளே!

நீங்கள் ஞான மார்க்கமாகிய எங்கள் மதத்தில் வந்து சேருங்கள்" என்று பிரசங்கமியற்றுவதையும் அதை அவர்முன் நிற்போர் கேட்பதையும், பின் அப்பிரசங்கம் செய்தவருடன் பழகும்போது "நாங்கள் அஞ்ஞானிகள்" என்று கூறி அவர் கூற்றுக்கு உடன்படுவதையும் நாம் கண்கூடாகக் காண்கின்றோம். அஞ்ஞானி என்றால் அறிவில்லாதவன் என்பது பொருள். ஆனால் இப்பொருளைத் தெரிந்த எவனாவது தன்னை மற்றொருவன் அஞ்ஞானியென்று கூறவோ தானுஃ தன்னையே அஞ்ஞானி என்று கூறிக்கொள்ளவோ செய்வானா? உண்மையில் அஞ்ஞானியாயிருப்பவன்கூட இத்தகைய இழிசெயலுக்கு உடன்படான். இதைப்போலவே ஆரியப் பார்ப்பனர் தமிழ் மக்களனைவரையும் 'சூத்திர' ரென்றே அழைக்கின்றனர். இவர்களும் அவர்கள் முன்னிலையில் 'நாங்கள் சூத்திரர் தொட்டுவிடாதீர்கள்' என்று கூறி விலகியும் போகின்றனர். ஆரியரைத் தொடுவதோஅல்லது அவர்கள் உண்ணுவதைப் பார்ப்பதோ பாவமெனவும் சிலர் தவறுதலாக நம்புகின்றனர். ஆனால் சூத்திரன் என்ற சொல்லுக்குப் பொருளை இவர்கள் அறிவரேல் பிறர் தம்மை அப்பெயரிட்டழைக்க உடன்படார் என்பது திண்ணம். சூத்திரன் என்றால் வைப்பாட்டி மகன், அடிமை என்று பொருள். உண்மையில் தப்பான நடையுடையவள் மகன் கூடத் தன்னைப் பிறர் அவ்வாறழைக்க உடன் படானே! அவ்வாறிருக்க மிக மேலான வடுப்படாக் குலத்தினரான தமிழ் மக்கள் பிறர் தம்மைச் சூத்திரன் என மிகக் கேவலமான பெயரிட்டழைக்கக் கேட்டிருப்பது மிகவும் விந்தையே! ஆதலின் இனியேனும் இத்தவறு நடைபெறாதென்பது தற்காலத்தில் ஒவ்வொருவரும் சுயமரியாதை உணர்ச்சி பெற்று விளங்குவதிலிருந்து தெளிவாகிறது. மிக உயர்ந்த நிலையும் நல்லறிவும் தமிழ் மக்களிடைத் தோன்றுவதாக.

ஆயின் ஆரியர் தம்முள்ளமைந்திருந்த நான்கு சாதியுள்ளே தற்போது காணப்படும் பார்ப்பன வகுப்பைத் தவிர ஏனைய க்ஷத்திரிய வைசிய சூத்திர வகுப்புக்கள் எங்கு மறைந்தன, எவ்வாறு மறைந்தன? என்றால், மக்கள் அன்னிய நாட்டுக்குப்போய்த் தனித்தனியே வசிக்கத் துணிந்தபோது அவ்வகுப்பு வேறுபாடுதானே ஒழிந்துவிடுமென்பது திண்ணம். இப்போது ரெங்கூன் பினங்கு முதலிய கண்காணா தேசங்களில்போய் வாழும் நம் நாட்டினர் நம்

நாட்டில் வாழும் காலத்துத் தம்முள் கொள்ளும் சாதிவேறுபாட்டை அந்நாடுகளில் வாழும்போது காட்டுவதில்லையென்பது உலகமறிந்த உண்மை. அதைப்போலவே இங்கிலாந்து முதலிய பிறநாடுகளுக்குப் போயிருப்பவரும் பலவகுப்பினரேனும் அந்நாடுகளில் ஒன்றுபட்டே வாழ்வது இன்றியமையாததாகிறது. இப்போது நம் நாட்டில் வாழும் ஆங்கிலேயரும் தம்முள் ஒற்றுமைகாட்டியே வாழ்கின்றனர். இதைப்போலவே ஆரிய மக்களும் நம் நாட்டில் தனித்தனியே அங்கங்கே புகுந்து வாழத் தொடங்கியபோது அவர்களிடையிருந்த சாதி வேறுபாடு நாளடைவிலொழிவதாயிற்று. அதனால் அவர்கள் அனைவரும் தம்முள் உயர்ந்த வகுப்பாகிய பார்ப்பன வகுப்பினரெனவே காட்டி வாழத்தொடங்கினர். அதிலிருந்து அவர்களனைவரும் நாளடைவில் ஒன்றுபட்டுப் பார்ப்பனரெனத் தம்மை அழைத்ததோடு நில்லாமல் தமிழ் மக்களையும் இழிபெயராகிய சூத்திரரென அழைக்கவும் தலைப்பட்டனர். இதுவே ஆரியருளிருந்த நான்கு வகுப்புள் பார்ப்பன வகுப்பொன்றே காணப்படுவதற்கும் ஏனைய வகுப்புக்கள் மறைந்ததற்கும் காரணமாம். இனி கம்பர் புரளியைக் காண்போம்.

'குகன் தனது படகோட்டியை ஏவி இராமன் முதலியோரைக் கங்கையின் தென்கரையில் விடுமாறு செய்து அவர்கள் போவதை வடகரையிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தான்' என வால்மீகி கூற, கம்பர் 'குகனே படகோட்டிச்சென்று அக்கரையடைந்தவுடன் தன்னையும் உடனழைத்தேகுமாறு வேண்டுகின்றனன்' எனக் கூறுகின்றார். மேலும் குகன் சுமந்திரனைத் தன்னுடன் வைத்திருந்து தன் தூதரையனுப்பி இராமன் சித்ரகூடம்வரையிற் போனதையறிந்துகொண்டு அச்செய்திகளைச் சுமந்திரனிடம் கூறுகின்றனன். இராமன் முதலியோர் அயோத்தியிலிருந்து புறப்பட்ட அன்று தமசா நதிக்கரையில் தங்கி மறுநாள் மாலையில் கங்கைக் கரையையடைந்தனர். அதனால் அயோத்தியிலிருந்து கங்கைக் கரையையடைய இரண்டு நாட்களாயிற்று. பின் இராமன் மறுநாள் கங்கையைத் தாண்டி மத்ச நாட்டிலுள்ள காடுகளில் தங்கி, மறுநாள் பாத்துவாசனாச்சிரமத்தில் தங்கி, மறுநாள் யமுனைக் கரையிற்றங்கி, மறுநாள் சித்திரகூட மடைகின்றனன். இதனால் கங்கையிலிருந்து புறப்பட்ட நான்

காம் நாள் அவன் சித்திரகூடமடைகிருன். இவ்வாறு இராமன் சித்திரகூடமடைந்த நிகழ்ச்சியை ஒற்றர் குகனிடம் கூறுகின்றனர். நான்குநாள் நிகழ்ச்சிகளையும் கண்டு அவர்கள் ஒட்டமாக வந்து கூறுவதற்குக்கூட ஒருநாளேனும் வேண்டும். அன்றி, அன்றே வந்தனரெனினும் நான்காம்நாள் மாலையிலேயே அவர்கள் குகனை யடைந்தவராவர். அவர்கள் செய்தி கேட்டறிந்துதான் சுமந்திரன் புறப்பட்டானுதலால் ஐந்தாம் நாட்காலையிலேயே அவன் சிருங்கபேர புரத்தைவிட்டுப் புறப்பட்டிருக்கவேண்டும். ஆனுல் அவன் மூன்று நாள் அங்கே தங்கி நான்காம் நாளே புறப்பட்டனனென வால்மீகி கூறுகிருர். இது எவ்வாறு பொருந்துமோ? மேலும் சுமந்திரன் சிருங்கபேரபுரத்தைவிட்டு அயோத்தியை அடைய மூன்று நாட்க ளாயின எனக் கூறுகிருர் வால்மீகி. ஆனுல் அயோத்தியிலிருந்து மறுநாளே இராமன் முதலியோர் கங்கையை அடைந்தனரென அவர் முன்னர் கூறியது எவ்வாறு பொருந்தும்? அன்றி சுமந்திரன் பொய்மையாளனுனதால் தாமதமாகத் தங்கித் தங்கி வந்தவனுதல் வேண்டும். குறைந்தது இராமன் அயோத்தியைவிட்டு நீங்கிய ஒன்பதாம் நாள் மாலையிலேயே சுமந்திரன் அயோத்தியையடைந்து இராமன் வனம் புகுந்ததைத் தசரதனிடம் கூறியவனுதல்வேண்டும். ஆனுல் வால்மீகி அந்நாளே இராமன் வனமேகிய ஐந்தாம் நாளென சருக்கம் அறுபத்திரண்டிலும் பின் அறுபத்துமூன்றும் சருக் கத்தில் அது ஆறும்நாளெனவும் கூறுகிருர். இதனுல் வால்மீகி முன்னுக்குப்பின் முரணுகக் கணக்கின்றிக் கூறுபவராவார். இஃதிவ் வாருகக் கம்பரோ மிகவும் வேடிக்கையாகக் கூறுகிருர். அதாவது இராமன் அயோத்தியை விட்டுப்போன அன்றிரவே சுமந்திரன் இரா மனைப்பிரிந்து அயோத்தியையடைந்துவிட்டன னெனக் கூறுகிருர். அத்துடன் தசரதனும் அன்றிரவே மடிந்தனனெனக்கூறுகிருர். வால் மீகி கணக்குப்படி உண்மையில் தசரதன் இராமன் பிரிந்த ஒன்பதாம் நாள் மாண்டனன். ஆனுல் வால்மீகி பின் ஓரிடத்தில் ஐந்தென்றும் மற்ருேரிடத்தில் ஆறென்றும் கூறுகிருர். இஃதிவ்விதமிருக்கக் கம்பர் தசரதனை அன்றிரவே மடிந்தனனெனக் கூறுகிருர். இவ்வளவு சீக் கிரமாக அவனை முடியச்செய்ய தசரதன் அவருக்கு என்ன கேடு செய்தான்? ஒன்பது நாட்களுக்குப் பிறகு இறந்த மன்னனை அன்றே இறந்தனனென்கிருரே?

சுமந்திரன் தசரதனையடைந்து இராமனும் இலக்குவனும் கூறியதாகப் பல பொய்மொழிகளைக் கூறினதாகவும், அதைக்கேட்டு தசரதன் புலம்பியதாகவும், அவன் நடுநடுங்கும்படி கோசலை அவனைப் பலவாறு இகழ்ந்துரைத்ததாகவும், பின்னர் தசரதன் அவளைப் பணிந்து தன்னை மன்னிக்குமாறு வேண்டியதாகவும், பின் கோசலை தாழ்ந்துரைத்ததாகவும், அதுகேட்ட தசரதன் சற்றுநேரம் தூங்கிப் பின் விழித்து தான் முனிவனைக் கொன்று பெற்ற சாபத்தைக் கூறியதாகவும், பின் இராமனை நினைத்தேங்கி ஏங்கிப் புலம்பி நெடுநேரம் கழித்து ஒருவருமற்று நள்ளிரவில் இறந்து கிடந்ததாகவும், விடிந்த பின்னரே அவனிறந்தமையை அவன் மனைவியர் அறிந்தரற்றியதாகவும், அதிலும் கோசலையும் சுமித்திரையும் பின்னும் நேரங்கழித்து அரற்றுரையால் விழித்தெழுந்ததாகவும் வால்மீகி முனிவர் கூற, இவ்வளவு நிகழ்ச்சிகளையும் கம்பர் முற்றிலும் மறைத்து "சுமந்திரன் வந்தான், தசரதன் 'இராமன் சேயனோ அணியனோ' என வினவினன், சுமந்திரன் வனம் புகுந்தனனிராமனென்றான், உடனே தசரதன் மடிந்தான்" என்று கூறுகிறார். இந்நிலையை விளக்கக் கம்பர் பாடிய பாடல்கள் இரண்டே.

சுமந்திரன் தசரதனிடம் இராமனும் இலக்குவனும் கூறியதாகக் கூறிய பொய்மொழிகளையெல்லாம் உண்மைபோல சுமந்திரன் பிரிவதன் முன்னரே அவனிடம் இராமனும் இலக்குவனும் கூறியதாகக் கம்பர் பாடுகிறார். அப்பொய்யுரையிலும் சீதை ஒன்றும்பேசாது மனங்கலங்கி நின்றாளென்றுக் கூறியதை விடுத்துக் கம்பர், சீதை மாமியருக்கு வணக்கமுரைத்துத் தங்கையர்க்குப் 'பூவையையும் கிள்ளையையும்போற்றுமாறு கூறுக' எனக் கூறினாளெனக் கம்பர் பொய்புகலுகிறார். சுமந்திரன் கோசலையிடம் பொய்புகலத்துணிந்து பின் கூறாதிருந்த தீய செயலைக் கம்பர் கூறாது மறைத்தார். தசரதன் தான் செய்த பாவச்செயலை இராமன் காடேகு முன்னரே கோசலையிடம் கூறியதாகக் கம்பர் கதைப்போக்கையே மாற்றிக் கூறியுள்ளார். ஈது முன்னரும் காட்டப்பெற்றது. தசரதன் அநாதைபோல விடியுமட்டும் செத்துக்கிடந்ததையும் கோசலையும் சுமத்திரையும் நெடுநேரம் தூங்கியதையும் கம்பர் மறைத்து, தசரதன் செத்தனன், உடனே அவனைக் கோசலையும் தொட்டுப்பார்த்துச் செத்தமையுணர்ந்து அரற்றினளெனக் கம்பர் கூறுகிறார். இவ்வாறுஉண்மைக்கு மாறாகக் கோசலையை

நல்லவள் போலக் காட்டுவதாலும் கைகேசியைத் தீயவள்போலக் காட்டுவதாலும் இக்கம்பர் என்பெற்ரூர்? கைகேசி தசரதனிறந்தமை யறிந்து வந்து அழுததையும் கோசலை அவளைத்திட்டியதையும் வால்மீகி கூறியிருக்க கைகேசியைப்பற்றிய பேச்சையே அவ்விடத்துக் கம்பர் கூறவில்லை. தசரதன் இறந்தபின் ஊரார் சபைகூட்டியதைக் கூருது மறைத்துவிட்டு முனிவன் பரதனை அழைத்துவர ஆளனுப்பியதைமட்டும் கம்பர் கூறுகிருர்.

---

## ஐயவினுக்களின் விடைகளுக்கு விளக்கம் தேவை.

---

திரு. சந்திரசேகரப் பாவலர் அவர்களுக்கு "சுயமரியாதை விரும்பும் நேசன்" எழுதுவது:—

அன்பு மிக்க ஐயா,

தாங்கள் 16—12—28-ல் "குடி அரசி"ல் காரைக்குடி திரு. ஆ. சொக்கலிங்கன் அவர்களின் ஐயவினுக்களுக்கு விடையளித்துள்ளீர்கள். அது பொதுஜனங்களின் திருப்திக்குப் போதுமானதாயில்லாததால் அடியில் காணும் சந்தேகங்களையும் தீர்த்துத் தங்கள் கடனுற்றக் கோருகிறேன்.

1. இராமாயணம் நடந்தகதையாயிருப்பினும் கட்டுக்கதையாயினும் சுயமரியாதைக்குப் பங்கம் விளைவிக்கும் சிற்சில பாகங்கள் தவிர மற்றவைகள் பொதுஜனங்களை நல்வழிப்படுத்தச் சான்ருக இருப்பதால் ஜனங்கள் நடந்தகதையாகக் கொள்வதில் நஷ்டம் என்ன? அந்த சிற்சில பாகங்களும் திருத்தப்பட்டால் போதாதா? இராமாயணம் படிப்பதால் கெட்டுப்போனவர்களைவிட நல்வழிப்பட்டவர்களைத் தானே அதிகமாகப் பார்க்கிரேும். இதனுல் நஷ்டம் என்ன?

2. முதல் விடையில் நடந்தகதையல்லவென்று தெரிவித்த தாங்கள், அடுத்தாற்போல் இராமன் என்ற ஆரியமன்னன் தமிழரை வென்ற கதையை வால்மீகி, அய்யங்கார் கவியைப் போன்று திருமாலின் அவதாரமெனக் கூட்டி எழுதியதாகச் சொல்கிறீர்கள். இராமன் என்ற அரசன் எந்தக் காலத்தில் இருந்தான்? தமிழரை

இ—29.

எப்போது வென்ருன்? அது உண்மையாக நடந்த வரலாறு எப்படி? வால்மீகி எப்படித் திரித்துக் கூறுகிருர்? என்பதற்குச் சரித்திர ஆதாரம் இருக்கிறதா? அறிஞரின் துணிபு என்ருற் போதுமா? எந்த அறிஞர்? அவருக்கு அத்தாட்சி எது?

3. கபாடபுரத்தின் வரலாற்றைத் தாங்கள் குறிப்பிட்ட காலத்தில் கதை எழுதப்பட்டதைக்குறிக்கிறதேதவிர நடந்ததென்பதைக் குறிக்க ஆதாரம் எது? குறிப்பிட்ட ஊர்களைப் பொறுத்து இராவணன் தமிழ்மகன், இராமன் ஆரியன் என்று சொல்ல முடியுமா? இராமயணத்தைப்படிப்போர் அவ்வாறு நினைக்கிருர்களா? நினைத்தால் அப்போதே இராமாயணம் தொலைந்திராதா? முதலில் எழுதிய வால்மீகியும் அவ்வாறு கூருதிருக்கும்போது தாங்கள் ஏன் கற்பித்துக்கொள்ளவேண்டும்?

4. வால்மீகியின் நடையைக் கம்பர் மாற்றியது சுயமரியாதையின் உதயமல்லவா? அதற்காக வருத்தப்படுவானேன்? இராம கதையில் தமிழரை இழிவுபடுத்தும் பாகத்தைக் கம்பர் ஒளிக்கிருர் என்கிறீர்கள். அம்மாதிரித் தமிழரை இழிவுப்படுத்த எழுதிய கதை என்று கம்பர் அறிந்திருந்தார் என்பதற்கும், தாங்கள் இப்போது அவ்வாறு கொள்வதற்கும் ஆதாரம் எது?

5. ஒன்றைக் கற்பனை செய்துகொண்டு கதையை மாற்றுவதால் பயனென்ன? அக்கதையின் சற்பாத்திரர்களை அசற்பாத்திரர்களாகக் கொள்ளும்படி செய்வதால் பலரின் மனதைப் புண்படுத்துவதைத்தவிர இலாபமென்ன விருக்கிறது? கதையினுல் ஒரு சாரார் பிழைப்பதைமட்டும் எடுத்துக் காட்டிக் குற்றங்களைத் திருத்துவதுடன் மட்டும் நில்லாமல், தாங்கள், இராமாயணக் கட்டுரைகளால் சுயமரியாதையைப் பரப்பும் வேலைக்கு இடையூருக நிற்பதை அறிவீர்களா? இராமாயணத்தைப்பற்றி முற்றிலும் வெறுக்கத்தக்கவாறு தாங்கள் எழுதிவருவதால் "குடியரசி" ன் இதழ்கள் பலராப்பர் உடைக்கப்படாமலேயே குப்பைக்குப் போவது தங்களுக்குத் தெரியாதென்றே நினைக்கிறேன். இதனுல் "குடியரசி" ல் வெளியாகும் இதர பல முக்கிய கட்டுரைகளையும் மறைத்து வைத்தவராகிறீர். தங்களின் விரிவான நோக்கத்தை விரைவில் விளக்கக் கோருகின்றேன்.

## "சுயமரியாதை விரும்பும் நேசனு" க்கு
### திரு. சந்திரசேகரப் பாவலரின்
# மறுமொழி.

---

1. தமிழ்ப் பொதுமக்கள் இராமாயணத்தை நடந்த கதையாகக் கொண்டாலும் கொள்ளாவிட்டாலும் கேடொன்றுமில்லை. ஆனால் அவர்கள் அது தம்மவர் வரலாறு என்று மயங்கிப் படிக்கும்போது தான் கேடு வருவதாகும். ஏனெனில் தம்மவரை இழிவுபடுத்தி இகழ்ந்தும் பகைவரைப் புகழ்ந்துமுள்ள நூலைப் பொதுமக்கள் பாராட்டி அறியாமையிற்படித்து வருவாரேல் அதைப்போலும் இழிவு அவர்களுக்கு வேறு வேண்டுமோ? ஆதலின் உண்மையை எடுத்துக் காட்டிப் பொதுமக்களை நல்ல வழியிலே செலுத்துவதற்கு அறிஞர் யாவரும் கடமைப்பட்டவராவர். அதனால் அறிஞராகிய நமது சுயமரியாதை விரும்பும் நேசரும் அக்கடமை புடையவரே. பொது மக்களை நல்வழிப்படுத்துவதற்குத் தடையாகவுள்ள சிற்சில பாகங்கள் இராமாயணத்தில் இருப்பதாகக் கொண்டு அவைகளை மட்டும் திருத்தினால் போதாதா என்று வினவுகிறார் நேசர். மணற் சோற்றில் கல்லைத் தேடினாற்போலவே, தீமைதரும் பாகங்களை இராமாயணத்தில் தேடுவது. ஏனெனில், மணற்சோறுமுழுதும் தீமை விளக்கும் பாகங்களே நிரம்பியுள்ளது. இராமாயணம் படித்தோர் நலம் பெறுவர் என்பது முயற்கொம்பே. "இராமாயணம் படித்ததால் கெட்டுப்போனவர்களைத் தவிர நல்வழிப்பட்டவர்களைத்தானே அதிகமாகப் பார்க்கிறோம்" என்கிறார் நேசர். இதனால் அவர் இராமாயணம் படித்ததால் கேடடைந்தோரும் சிலர் உளரென உடன்படுகிறார். ஆனால் அவர் நலம்பெற்றோர் ஒருவரையாவது காட்டுவாரா? அவரால் முடியாது, முடியாது. அவர் அன்புகூர்ந்து நலம் பெற்றோர் இவரெனவும், இன்னவிதமான நலம் பெற்றோரெனவும் எடுத்துக் காட்டாது வாளா, நலம்பெற்றோருளரென வரைதலால் பயன் என்னே? மேலும் நலம்பெற்றோர் ஒருவரும் இலரென்பதற்கு நமது நேசரின் கட்டுரையே இதற்குச் சான்றாகும். எவ்வாறெனில் சுயமரியாதை விரும்பும் நமது நேசரே இதுவரை நாம் எழுதிவரும் கட்டுரைகளைப் படித்தும், தமிழ் மக்களாகிய வாலி

முதலியோரைக் குரங்குகளெனவும், இராவணேச்வரன் முதலியோரை அரக்கரெனவும் இழிவுபடுத்துவதோடு நில்லாமல் அத் தமிழ் முடிவேந்தரையும், அவரைச்சார்ந்த வீரரையும் வஞ்சித்துக் கொன்று பழியேற்ற சகோதரத் துரோகியும் பொய்யனுமாகிய இராமனுடைய வரலாற்றை இன்னும் தமதெனை நம்பியிருக்கின்றாரே! அறிஞராகிய இவரே இங்ஙிலையினரென்னில், ஏனையோரைக் கூறவும் வேண்டுமோ? நமது நேசர் இராமாயணத்தில் சுயமரியாதைக்குப் பங்கம்விளைக்கும் சிற்சில பாகங்களாவது இருக்கின்றன என்று கருதுகின்றமையை யறிந்து பெருமகிழ்ச்சியடைந்தோம். இனியாவது நமது நேசரை நமது கட்டுரைகளை மறுமுறைப் படித்து, வால்மீகி இராமாயணத்தையும் படிக்குமாறு வேண்டுகின்றோம். படிப்பரேல் இராமாயணம் முழுவதும் மணற்சோறே என்பதை உணராதிரார். மேலும் நஞ்சில் நலந்தரும் பாகமும் இருக்குமோ? தமிழ் மக்கள் தமது முன்னோராகிய இராவணாதியரைத் தீயோரெனவும் பகைவராகிய இராமனாதியோரை நல்லோரெனவும் சித்தரித்துக் கூறும் கதையைப்படித்து உண்மையை அறியாமையால் தமது முன்னோராகிய இராவணாதியரைத் தமது பகைவர்போல் நம்பித் தாமும் இகழ்வதும், பகைவராகிய இராவணாதியரைத் தாமும் புகழ்வதும் சுயமரியாதைக்குக் கேடுவிளைக்கும் செயல்களே! அவை அறிவுடைமையுமாகாது, உண்மையுமாகாது என்பதை இனியாவது நமது நேசர் தெரிந்துகொள்ளுமாறு வேண்டுகிறோம்.

2, 3. இத்தலைப்பில் நமது நேசர் எழுதியுள்ளனவற்றுக்கு மறுமொழியாக அவரை நாம் முன்னர் எழுதியுள்ள "விடை"யையே நன்றாகப் படித்துப் பார்க்க வேண்டுகின்றோம். "முதல் விடையில் நடந்தகதையல்லவென்று தெரிவித்த தாங்கள்" என்று எழுதுகின்றனர் நமது நேசர். இது தவறு என்பதை அவர் மறுமுறை நமது விடையைப் படித்துப்பார்த்தால் உணர்வார். "ஆராய்ச்சிக்காரர்கள் இராமாயணம் நடந்த காலத்தைத் தீர்மானிக்கப் போதிய சான்றுகள் கிடையாமையால் அது நடந்ததொன்றன்று என்று கூறுகின்றனர்; அக்கூற்றைப் பொது மக்கள் நம்பார்" என்றே நாம் குறித்துள்ளோம். "கபாடபுரத்தின் வரலாற்றைத் தாங்கள் குறிப்பிட்டகாலத்தில் கதை எழுதப்பட்டதைக் குறிக்கிறதே தவிர, நடந்ததென்பதைக் குறிக்க ஆதாரம் எது?" என்று வினவுகிறார்

நேசர். இது வியப்பாகவே உள்ளது. ஏனெனில் கபாடபுரத்தைப் பற்றி இலங்கைக்குப் போகும் வழி கூறுமிடத்து, ஓர் நூலில் கூறப் பெற்றிருந்தால் அந்நூல் வரலாறு நடைபெறும்போது அக்கபாட புரம் இருந்ததெனெ அறியலாமேயன்றி அந்நூல் எழுதப்பட்ட காலத்திலிருந்ததெ‌ன எவ்வாறு அறியலாம்? மேலும் இராமாயணம் என்ற நூல் வால்மீகி முனிவரால் எழுதப்பெற்று இராமனுடைய பிள்ளைகளாலேயே இராமனது முன்னிலையில் பாடப்பெற்றது என்ற வரலாறே எப்படியாவது அது கபாடபுரவரலாற்றுக் காலத்தில் நடந்ததெனக் கொள்வதற்குத் தகுந்த ஆதாரமாம்.

"இராமாயணத்தைப் படிப்போர் இராவணன் தமிழ்மகன், இராமன் ஆரியன் என்று நினைக்கிறார்களா? நினைத்தால் அப்போதே இராமாயணம் தொலைந்திராதா" என நமது நேசர் எழுதுகிறார். நேசர் கூறும் மொழிகளைப் பொன் மொழிகளாகவே போற்றுதல் வேண்டும். ஏனெனில் இவையனைத்தும் உண்மை மொழிகளே. இராமன் ஆரியன், இராவணன் தமிழ்மகன் என்ற உண்மை உணராது தமிழ் மக்கள் இராமாயணத்தைப் படித்துப் பாழாகின்றமைக்கே உண்மையறிவாளிகள் கவல்கின்றனர். ஏனெனில் இவ்வுண்மை யறிவு எப்போது தோன்றுகின்றதோ அப்போதே தமிழ் மக்களிடை இராமாயணம் தொலைந்துவிடும். தமிழ்ப் பொதுமக்களுக்கு இவ்வுண்மையை எடுத்துக்காட்ட வேண்டுவது ஒவ்வொரு கற்றுவல்ல அறிஞரின் கடமையாகும்.

இராமன் ஆரியன், இராவணன் தமிழ்மகன், என்பதை நாம் கற்பித்துக்கொள்ளவில்லை. இராமன்வாழ்ந்தது வடநாடு, இராவணன் வாழ்ந்தது தென்னாடு; அப்போது கபாடபுரமிருந்தது என்பதனால், இராமன் ஆரியன் என்பதும் இராவணன் தமிழ்மகன் என்பதும் விளங்கவில்லையா? இதற்குச் சரித்திர ஆராய்ச்சி மிகுதியும் வேண்டாம். ஆரியர் இற்றைக்கு ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இந்தியாவின் வடக்கே இருந்து வந்து நுழைந்து வட இந்தியாவிற் குடியேறினர் என்றும், அவர்கள் பல போரிட்டுத் தென்னிந்தியாவிலும் பரவத் தொடங்கினரெனவும், தென்னிந்தியாவில் வாழ்ந்திருந்தோர் தமிழரெனவும் இந்துதேசச் சரித்திர நூல்கள் கூறும் உண்மைகளைப் பள்ளிக்கூடச் சிறுரும் அறிவர். ஆரியர்

புலாலுணவில் விருப்பமிக்குடையோர், தமிழ் மக்கள் புலாலுணவை வெறுத்தவர். இராமனுதியோர் புலாலுணவிற் பெரும் விருப்புடையோர்; அதனுல் பன்றி, மான் முதலிய காட்டுமிருகங்களை அடித்தடித்துத் தின்றனர், யாகங்களின் பேரால் ஆரியர் பல மிருகங்களைக் கொன்று தின்றனர். அத்தீச்செயலைத் தமிழ்மக்கள் கண்டித்தனர். அதனுலேயே ஆரியருக்கும் தமிழ்மக்களுக்கும் பகைமையும் போரும் விளைந்தது என்ற உண்மைகளையும் இப்போது படிப்படியாகத் தமிழ்மக்கள் உணர்ந்து வருகின்றனர். இவ்வுண்மைகளெல்லாம் வால்மீகி இராமாயணத்தினுல் தெற்றென மலையிடையிட்ட விளக்குப் போல விளங்குகின்றன என்பதை நமது நேசர் தெரிந்துக் கொள்ள அவரை வேண்டுகின்ரும். வால்மீகி இவ்வரலாற்றைச் சிறுபான்மை இராமனுக்குத் தெய்வத்தன்மை கற்பிக்குமிடங்களைத்தவிர பெரும்பாலும் நடந்தபடியே கூறுகிருர் என்றும், கம்பர் வால்மீகி கூறிய வரலாற்றையே பெரும்பாலும் திரித்தும் மாற்றியும் புதுவது புனைந்தும் பொய் புகன்றும் தமிழ்மக்களிடைப் பொய்யான கதையைப் பரப்பித் தமிழ்மக்கள் மனதைக் கெடுத்து குலத்தைக் கெடுக்கும் கோடாரிக் காம்பானுர் என்றுமே நாம் கூறினேம், கூறுகிரும். வால்மீகி கூறும் வரலாற்றைக் கம்பர் உண்மையாகக் கூறியிருப்பரேல் தமிழ்மக்கள் மிகுதியும் உண்மையுணர்தற்கு இடமுண்டு. ஆதலின் உண்மையில் கேடுபுரிந்த தீமையாளர் கம்பரே. இதனுல் தமிழ்மக்கள் உண்மையுணர்ந்து இராவணனைப் போற்றுமாறும் இராமனைப்பற்றி நினைக்கும் எண்ணங்களை மாற்றி வால்மீகி கூறுமாறு அவன் மிகவும் தீயவன் என்ற எண்ணத்தை மனதிற் கொண்டு அவன் உண்மையில் திருமாலின் பிறப்பாகமாட்டான் என்ற உண்மையை பரப்புமாறும் செய்யவேண்டியது அறிவாளிகளின் இன்றியமையாக் கடமையாகும்.

4. "வால்மீகியின் கதைநடையைக் கம்பர் மாற்றியிருப்பது சுயமரியாதையின் உதயமல்லவா?" என்கிருர் நேசர். வால்மீகியின் கதைநடையைக் கம்பர் சுயமரியாதைக்கானவழியில் மாற்றியிருந்தால் நலமேயாம் என்பதில் என்ன தடை? ஆனல் கம்பர் சுயமரியாதைக்குக் கேடான வழிகளிலேயே கதையை மாற்றிப்பாடியிருக்கிருர். அம்மாற்றங்களை அவ்வப்போது பலவிடங்களில் விளக்கிவந்தோமெனினும் இவண் இரண்டோரிடம் குறிப்பாம். வால்மீகியார் விவரித்தெழுதும்

அசுவமேதயாக ஆபாசங்களையெல்லாம் கம்பர் மறைத்தாரே! இவர் உண்மைத் தமிழ் மகனாயின் ஆரியர்களுடைய யாகங்களின் ஆபாசங்களையெல்லாம் விளங்க எடுத்துக்காட்டித் தமிழ்மக்களுக்கு உண்மையை விளங்கச் செய்திருப்பாரன்றோ? 'ஆபாசங்களை மறைத்ததில் கேடொன்றுமில்லையே, அதனால் கம்பருடைய சிறந்தஅறிவு தான் எழுதத்துணிந்த நூலில் ஆபாசமான வரலாறுகளை மறைக்கத்தூண்டியது' என்றால், இவர் தம் சிறந்த அறிவு அகலிகையினுடைய வெறுக்கத்தகுந்த வரலாற்றை வால்மீகி குறிப்பதைக் காட்டிலும் ஏன் அதிக ஆபாசமாக எழுதத்தூண்டிற்று. மேலும் இராமன் தசரதன் கோசலை முதலியோரை வால்மீகி எவ்வாறு தீயவராகக் குறிக்கிறாரோ அவ்வரலாற்றிலெல்லாம் கம்பர் அவர்களையெல்லாம் மிகநல்லவர்களாகக்காட்டுகிறாரே. வடமொழி அறியாத உண்மைத் தமிழ் மக்களுக்கு வால்மீகி, இராமன் முதலியோரைப் பேச்சளவில் நல்லவரென்று குறித்தாலும் அவர்களுடைய செயல்களை நடந்தாங்கு குறித்துள்ளார். அச்செயல்கள் இராமன் முதலியோருடைய தீயகுணங்களைக் கலங்கரை விளக்கென அறிஞருக்கு விளக்குகின்றன.

"இராமன்கதையில் தமிழரை இழிவு படுத்தும் பாகத்தைக் கம்பர் ஒளிக்கிறார் என்கிறீர்கள்" என்று நேசர் குறித்திருக்கிறார். இது உண்மையன்று. கம்பர் தமிழரை இழிவுபடுத்தும் பாகத்தை விவரித்திருப்பதோடு நில்லாமல் ஆரியருடைய இழிவான தன்மைகளையே தமிழ்மக்களிடைக் காட்டாமல் மறைக்கிறார். உண்மை இதுவே. இதனால் உண்மையுணர்ந்த போது தம்மை வையம் இகழும் என அறிந்தே அவர் முதலில் "வையமென்னையிகழவும் மாசெனக் கேய்தவும்" எனக்கவிபாடிச் சென்றார். கம்பருடைய தீய வஞ்சகச் சுயநலச் செய்கைகளாகிய பொய்ம்மைகளைத் தமிழுலகம் அறிந்த போது அவரை இகழாது என் செய்யும்?

5. 'ஒன்றைக் கற்பனை செய்துகொண்டு கதையை மாற்றுவதால் என்ன பயன்? அக்கதையின் சற்பாத்திரங்களை அசற்பாத்திரங்களாகக் கொள்ளும்படி செய்வதால் பலரின் மனதைப்புண்படுத்துவதைத் தவிர லாபமென்னவிருக்கிறது?..........சுபமரியாதையைப் பரப்பும் வேலைக்கு இடையூறாக நிற்பதை அறிவீர்களா?' என்று நேசர் வினவுகிறார். இதனால் நேசர் திருவுள்ளம் நமது கட்டுரை

களால் புண்படுகின்றது என்று தெரியவருகிறது. அறிஞராகிய நமது நேசர் மனதிலேயே கம்பரும் ஆரியரும் செய்த சூழ்ச்சியின் பயனாக இராமனையும் தசரதனையும் பற்றிச் சற்பாத்திரங்களென்ற எண்ணம் பதிந்திருக்குமேல் அதிகமாகக் கற்றறிவில்லாத பொதுமக்களின் நிலை எவ்வாறிருக்குமென்பதை அறிஞர் சிந்தித்துத் தெளிக. நாம் வேண்டுமென்று ஒன்றையும் கற்பிக்கவில்லை. புதிதாக இராமாயணம் ஒன்றும் எழுதவுமில்லை. எல்லாம் வால்மீகிமுனிவர் எழுதியதையே இங்கேஎடுத்தெழுதுகின்றோம். வால்மீகி கூறுகிறபடி இராமன் தசரதன் சுமந்திரன் முதலியவர்களுடைய செயல்கள் தீயனவே ஆதலின் அவர்கள் தீயமதியினர் என்றுதானே நாம் கூறுகின்றோம். மேலும் மொழிபெயர்ப்பாளராகிய சென்னை சீனிவாசய்யங்காருடைய குறிப்புக்களையும் அங்கங்கே எடுத்து வரைந்துள்ளோம். அவருடைய குறிப்புகளும் நமது முடிவையே தெளிவாகவும் அழுத்தமாகவும் வலியுறுத்துகின்றன. இவ்வாறாக நமது நேசர், கம்பர்புரட்டில் மயங்கியோ அன்றி வேறெக்காரணம்பற்றியோ இவ்வாறு வரைந்தது நம் சிந்தையை வருத்துகின்றது. நமது நேசரை இனியாவது ஆய்ந்தோய்ந்து சிந்தித்து உண்மையை உணர்ந்து நமது கட்டுரைகள் சுயமரியாதையைப் பரப்புவனவே என்பதைத்தெரிந்து, தாமும் அவ்வாறே சுயமரியாதையைப் பரப்புவதற்கு முனைந்துழைக்குமாறு பணிவுடன் வேண்டுகின்றோம். நமது கட்டுரைகளைக் காய்தல் உவத்தலின்றி அமைதியாகப் படித்துப்பார்க்குமாறு அவரைத் திரும்பவும் கேட்டுக்கொள்ளுகின்றோம்.

"இராமாயணத்தைப்பற்றி முற்றிலும் வெறுக்கத் தக்கவாறு தாங்கள் எழுதிவருவதால் 'குடியரசி'ன் இதழ்கள் பல ராப்பர் உடைக்கப் படாமலேயே குப்பைத்தொட்டிக்குப்போவது தங்களுக்குத் தெரியாதென்றே நினைக்கின்றேன்" என்று நமது நேசர் குறிக்கிறார். ஒரு பத்திரிகையைப் பார்ப்போர் அதை உடைத்துப் பாராமலேயே குப்பைத்தொட்டியிலெறிவரென்றால் அவர் தம் மதியுடைமை பாராட்டத்தகுந்ததே! அவரவர் செயலே அவரவர் குணத்தை வெளிக் காட்டுமன்றோ? ஆதலின் அவ்வாறிருப்பார் சிலரென நமது நேசர் அறிவரேல் அவர்களுக்கு நல்லறிவுச்சுடர் கொளுத்தி அறியாமையை நீக்கி உண்மையை விளக்கி அவர்களைக் 'குடி அரசி'ன் இதழ்களைக் கவனித்துப் படித்து நல்வழியிலே

நடக்கும்படிச் செய்தருளுமாறு நமது நேசரைப் பன்முறை வேண்டு கின்றோம். எமக்கு உண்மையை வெளிப்படுத்த வேண்டுமென் பதே முக்கிய நோக்கம். யாமும் கம்பராமாயணத்தைமட்டும் படித்திருந்தபோது இராமனைத்தெய்வம்போற்கருதி பக்திசெலுத்தி வந்தது உண்மை. ஆனல், சில காலத்திற்குப்பின், இராமன் ஆரியன் இராவணன் தமிழ்மகன் என்ற உண்மை தெரியவந்தபோது இராமனதியர் தன்மைகளைக் கம்பர் கூறுமாறு முதனூலாராகிய வால்மீகியார் கூறுகின்றனரா என ஆய்ந்துபார்க்க அவா எழுந்தது. அதன்படி வால்மீகி இராமாயணத்தைப் படித்து அதனல் இராமன் முதலியோர் தீயோர் என்ற உண்மையும் தமிழ் மக்களாகிய இராவ ணாதியோரை வஞ்சித்துக்கொன்றவனே இராமன் என்னும் உண்மை யும் புலனாயின. அவைகளை எம் உடன்பிறந்தோராகிய தமிழ்மக்க ளனைவரும் உணர்ந்து தெளிதற்காக வெளிப்படுத்துவது எமது இன்றியாமையாக் கடமையெனக்கொண்டு இக் 'குடி அரசி'ன் மூலம் வெளிப்படுத்தலானோம். நமது சுயமரியாதை விரும்பும் நேசருக்கு எமது பேரன்பை உரிமையாக்குவதோடு அன்னரை நமது கட்டுரைகளைக் கவனித்துப்படித்து எழும் ஐயங்களைச் சிந் தித்துத் தெளிவுபெறாதவைகளை எமக் கறிவிக்குமாறு வேண்டிக் கொள்ளுவதோடு இக் 'குடி அரசை' அனைவரும் கவனித்துப் படிக்குமாறு வேண்டும் முயற்சிகளையும் செய்து உண்மை தெரியா தாருக்கு உண்மைச் சுயமரியாதையைப் பரவச்செய்யுமாறு மெய்யாக உழைக்க முன்வர மறுபடியும் அவரைக்கேட்டுக்கொள்ளுகிறோம்

---

# பன்னிரண்டாம் அத்தியாயம்.



தூதர்கள் வருவதற்கு முந்தினநாளிரவில் பர தன் தசரதனுடைய இறப்பை அறிவிக்கும் சில தீய கனக்களைக் கண்டு வருந்தியிருந்தான். அப் போது அயோத்தியிலிருந்துவந்த தூதர்கள் கேகய மன்னனையும் அவன் மகன் யுதாசித்தை யும் கண்டு, பரதனையடைந்து வசிட்டனும் மந்

திரிகளும் அவனை உடனே அழைத்துவரக் கூறியதைப் புகன்றனர். தன்னைப் பெற்றோர் முதலிய எல்லாருடைய நலத்தையும் பரதன் வினவ அவர்கள் ஆமென்றுக் கூறி அவசரப்படுத்தினர். பரதன் தன் கனவாலும், தூதர்கள் அவசரத்தாலும் மனங்கலங்கி விடை பெற்றுப் புறப்பட்டான். அவன் ஏழுநாட்கள் இரவுபகலாகச் சென்று எட்டாவதுநாட்காலையில் அயோத்தியில் நுழைந்தான். நகரம் பொலிவழிந்திருப்பதைக் கண்டு அவன் மனம்வருந்தித் தன்னை விரைவில் வரவழைத்ததால் ஏதோ தீமை நிகழ்ந்திருக்க வேண்டுமெனத் தேரோட்டியிடம் கூறிக்கொண்டு அரண்மனையை யடைந்தான். அவன் தசரதனிருக்குமிடத்தில் அவனைக் காணமல் கைகேசி வீடுபோய் அவளை வினவ, கைகேசி தசரதன் இறந்ததைக் கூறினள். உடனே பரதன் கீழே விழுந்து நெடுநேரம் அழுது "கடைசியாக என் தந்தை யாது கூறினர்?" என வினவினன். கைகேசி "இராமா, சீதா என்றுக் கூவி அவர் உயிரைவிட்டார். இராமன் சீதை இலக்குவருடனே அயோத்திக்குத் திரும்பும்போது பார்ப்பவர்களே பயன்பெற்றோர் என்றுக்கூறி யிறந்தார்" எனப் புகன்றாள். பரதன் "இராமனெங்கே" என்று கேட்க அவள் "இராமன் சீதையுடனும் இலக்குவனுடனும் காடேகினன்" என்றாள். இதைக்கேட்ட பரதன் தனது அண்ணனுடைய ஒழுக்கத்திற்சந்தேகப்பட்டு வாட்டமடைந்தவனாய் "எந்தப் பிராமணனது பொருளையாவது இராமன் பறித்தனனோ? பெண்களைக் கற்பழித்தானோ? பார்ப்பனனைக் கொன்றவனைப்போல இராமனை ஏன் காட்டிற்குத் துரத்திவிட்டார்கள்?" என்று வினவினன். கைகேசி நடந்த வரலாற்றைக் கூறி அவனை முடிசூடிக்கொள்ளச் சொன்னாள். நடந்ததையறிந்த பரதன் "தீயவளே! உன்னால் முறைமை அழிந்தது. நான் இராமனை இப்போதே அழைத்துவந்து முடிசூட்டுவேன். உன் மனப்படி நடவேன்" என்று கடிந்துரைத்தான். அவன் மறுபடியும் "நீ பெண்ணா, பேயா? இவ்விதமான கொடிய தீமை செய்தாயே? கோசலைக்குப் பிள்ளையைப் பிரித்துப் பொறுக்க முடியாத துன்பத்தை உண்டுபண்ணிவிட்டாய். உன் உயிரைக் கழுத்திற் கயிறிட்டாவது விட்டுவிடு" என்று சீறினன். அப்போது சுமந்திரன் முதலிய அமைச்சர் வந்தனர். அவர்களை நோக்கி அவன் "நான் ஒருபாவமும் அறியேன். என்னை இவள்

கெடுத்துவிட்டாள்" என்று கதறினன். இச்சத்தத்தைக்கேட்ட கோசலை சுமத்திரையுடன் பரதனைப் பார்க்க வந்தாள். பரதனும் சத்துருக்கனுடன் அவளைப் பார்க்கப் போய் வழியில் கண்டு பணிந்தான். கோசலை "பலநாளாக நினைத்திருந்த உன் எண்ணம் ஈடேறியது. கைகேசியும் பல சூட்சிகள் செய்து இந்நாட்டை உன்வசமாக்கினாள். இனி எதிரற்று ஆள். என்மகனைக் காட்டிற்கனுப்பியதால் அவள் என்ன பெற்றாள்? உன்னைப் பிரேதக்கிரியைகள் செய்யாமல் தசரதர் தடுத்திருக்கிறார். அவருடைய பிரேதத்தை எடுத்துக் கொண்டு இராமனிடம் போகிறேன். என்னை இராமனிடம் கொண்டு போய் விடு" என்று கொடிய சொற்களால் நிந்தித்தாள். பரதன் தன் மனம் துடித்து "அம்மா! எனக்கொன்றும் தெரியாது. நான் மனமாரக் குற்றம் செய்தால் எள்ளன்னம், பாயாசம், ஆட்டின் மாமிசம் இவைகளைத் தேவதைகளுக்கும் தென்புலத்தாருக்கும் விருந்தினர்க்கும் ஊட்டாமல் எவன் உண்கிறானோ அவனடையும் தீய கதியை நானடைவேன்" என்று இவ்வாறு பல வஞ்சினங்கூறி அவளைத் தேற்றினன். கோசலை அவனை வாழ்த்திப் புலம்பினள்.

வசிட்டன் தசரதனுடைய பிணத்தை விரைவிற் கொளுத்துமாறு ஏவ, பரதன் வருந்தி எண்ணெயிற்கிடந்த சவத்தை எடுத்துக்கொண்டுபோய்ச் சரயூ நதிக்கரையை யடைந்தான். அரசனுடைய மனைவிமார் தத்தம் ஊர்திகளிலேறிவந்தனர். பின் மனைவியரும் பிள்ளைகளும் கட்டையிற்கிடந்த சவத்தைச் சுற்றிவந்தனர். பரதன் எரி மூட்டினன். பின் அரசனுடைய மனைவியர் முதலிய எல்லோரும் ஊருக்குத் திரும்பினர். பத்துநாட்கள் கழிந்து பதினோராம் நாளில் புண்ணியாகவாசனம் நடந்தது. பன்னிரண்டாவது நாள் மாசிகம் முதலிய கிரியைகள் நடந்தன. தசரதனுக்குத் திருப்தியுண்டாவதற்குப் பரதன் பிராமணர்களுக்கு வேண்டுவன தந்தான். பதின்மூன்றாவது நாள் காலையில் சஞ்சயனம் செய்ய பரதன் சுடுகாட்டுக்குப்போய் தசரதனுடைய எலும்புகளையும் சாம்பலையும் கண்டு புலம்பி வசிட்டன் ஏவலால் அவைகளுக்குச் செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்துமுடித்தான்.

அரண்மனை வந்தவுடன் சத்துருக்கன் "அண்ணா! இராமனுவது அபவாதத்துக்குப் பயந்து காடேகினன். இலக்குவன் ஏன்

மன்னனைக் கண்டித்து இராமனுக்கு முடிசூட்டியிருக்கக்கூடாது ?" என்று கூறினன். அப்போது கூனி அங்கே வர சத்துருக்கன் அவளைக் கீழே தள்ளி அடித்தான். அவள் கதறினள். அவன் பின்னும் அவளைத் தரையில் தள்ளி அங்குமிங்கும் இழுத்துதைத் தான். அப்போது அவளை விடுவிக்க வந்த கைகேசியையும் அவன் நிந்தித்தான். பரதன் உடனே சத்துருக்கனைக் கண்டித்தான். மறுபடியும் சத்துருக்கன் உதைத்துத்தள்ள கைகால்கள் முறிந்து கீழே விழுந்த கூனி புலம்பினள். கைகேசி அவளைத் தேற்றினள்.

ஊரார்கூடி பரதனுக்கு முடிசூட்ட வேண்ட அவன் மறுத்து இராமனை அழைத்துவரத் துணிந்து கங்கைக் கரைவரை வழியுண் டாக்கினன். வசிட்டன் குறுநில மன்னர், அமைச்சர் முதலிய அனை வரையும் சபை கூட்டி பரதனை எதிர்கொண்டழைத்து அரசாட்சியை ஏற்றுக்கொள்ளக் கூறினன். பரதன் அதைத்தீய சொல் என்று கருதியதால் வசிட்டனை நிந்தித்து சுமந்திரனை நோக்கி சேனைகளைப் புறப்படக் கட்டளையிட ஆணை தந்தான். எல்லோரும் புறப்பட்ட னர். பரதன் தேரேறினன். கைகேசியும், சுமத்திரையும், கோசலை யும் புறப்பட்டனர். எல்லோரும் கங்கையை யடைந்துத் தங்கினர். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

பரதனிடம் தசரதன் இறந்ததைக் கூறாதிருக்குமாறு அவனை அழைத்துவரச் சென்றோரிடம் வசிட்டன் கட்டளையிடுகிறான். இத னால் தன் தந்தை முதலியோர் நலன் கேட்ட பரதனிடம் அவர்கள் பொய்புகல நேர்ந்தது. வசிட்டன் அவ்வாறு உண்மையைக் கூறா திருக்க ஆணை தந்த உண்மை, கேகய மன்னனுக்குத் தெரிந்திருந்தால் அவன் பரதனோடு அயோத்தி வந்து முடிசூட்டியிருப்பான். மேலும் தன் மகள் கைகேசியை மணக்கும்போது செய்துக்கொடுத்த வாக் குறுதிக்குமாறாக, தசரதன் இராமனுக்கு முடிசூட்ட முயன்றமைக்கு வசிட்டன் முதலியோர் உடந்தையாயிருந்ததை அவன் அறிந்து அவர்களை நிந்திப்பான். ஆதலின் வஞ்சகனாகிய வசிட்டன் உண்மை யைக்கூறாது பரதனை அழைத்தால் அவன் மட்டும் அயோத்திக்கு வருவான், அப்போது வேண்டுவன செய்துக் கொள்ளலாமென நினைத் தான். அவன் சூழ்ச்சியும் பலித்தது. பின் குடிகள் சென்று வேண்டியும் பரதன் முடிபெற மறுத்ததையும் அதற்கு முன்னரும்

அவன் கோசலையிடம் வஞ்சினமுரைத்து எவ்வாற்றுலும் இராமனை யழைத்துவரத் துணிந்ததையும் அறிந்திருந்துங்கூட வசிட்டன் மறுபடியும் சபைகூட்டிப் பரதனை யழைத்து முடிசூட வேண்டுகிறான். இது தன்மேல் குற்றமில்லாமல் தப்பித்துக் கொள்வதற்குச் செய்த சூழ்ச்சியேயாகும். பரதன் வந்தபோது அவனுக்கு உண்மையை உரைத்து முடிசூட்டாமல் அவன் உரிமையற்ற இராமனை யழைத்து வந்து முடிசூட்ட ஏன் பார்த்திருந்தாயென கேகயன் வினவில் அப்போது வசிட்டன் அகப்பட்டுக்கொள்வான்; அதனால் வசிட்டனுடைய தீயசிந்தைகளையும் சூழ்ச்சிகளையும் உலகமறியும்போது யாவரும் அவனை இகழ்வார்கள். இவ்வுண்மையை அறியாமலிருந்தும் பரதன் வசிட்டனை அப்போது நிந்திக்கிறான். இதனால் தீமைசெய்கிறவர்கள் எவ்வாறுவது நிந்தனையடைவர் என்பது விளங்குகின்றது. இச்சூழ்ச்சியால் வசிட்டன் மற்றொரு நன்மையுமடைகிறான். அதாவது பரதன் சபைமுன் வாக்குரைத்தால் அதன்படி நடக்கத்தவருன், அதனால் அவ்வாறு வாக்குரைக்கச்செய்து தன்னுடைய தீய தோழனுகிய தசரதனுடைய பேராசைப்படி இராமனை யழைத்து வந்து முடிசூட்டிவிடலாம் என முனிவன் நினைத்தான். இதிலும் அவன் வெற்றி பெறுகிறான். இதனால் கேகய மன்னனுக்குத் தான் சபைகூட்டி முடிசூட்டப் போனதாகவும் பரதனே மறுத்துவிட்டனனென்றும் சமாதானம் கூறிக்கொள்ளலாம், தன்னுடைய சூழ்ச்சிகளும் தசரதன் சூழ்ச்சிகளும் மறையக்கூடும். இராமனும் அரசு பெறுவான். வசிட்டனைப்போன்ற தீயோரும் உளரோ? வேறுகதைகளிலும் இதைப்போல் கேட்டறிய முடியாதே!

பரதனிடம் கைகேசி தன்கணவன் இறக்கும்போது கூறியவற்றைத் தன்னிடம் கூறியது போலக் கூறுகிறாள். தசரதன் இறக்கும்போது கோசலையின் அரண்மனையிலேயே இருந்தான். மறுநாளே அவன் இறந்தமைபறிந்து அங்கே கைகேசி போகிறாள். இதனால் இவள் இச்சொற்களைப் பரதனுக்குத் திடீரென்று ஏக்கம் வராமலிருக்கும்படி உண்மையை மறைத்துக் கூறியவளாவள். இச்சொற்களை இவள் எவ்வாறு அறிந்தனளோ?

இராமன் காட்டுக்குப் போய்விட்டானென்பதைக்கேட்ட பரதன் இராமன் ஏதாவது பெரிய குற்றஞ் செய்தே நாட்டைவிட்டுத்துரத்

தப்பட்டிருக்க வேண்டுமென ஐயுற்று வினவுகிறான். இவ்விடத்தில் மொழிபெயர்ப்பாளர் சீனிவாசய்யங்கார் "இராமனுடைய கல்யாண குணங்களைப் பூரணமாகவறிந்த பரதன் இப்படிச் சந்தேகப்படுவதே தகாது" என்று குறித்திருக்கிறார். இது தகுமோ தகாதோ, பரதன் இராமனை விபசாரம் முதலிய கொடிய குற்றங்களைச் செய்திருப்பானோ என்று சந்தேகித்தது உண்மை. பரதன் இராமனுடைய தீயநடைகளை உணர்ந்திருந்தமையினாற்றான் அவ்வாறு சந்தேகித்தனன் போலும்! ஆனால் அவன் ஏன் இராமனை அழைத்து வந்து முடிசூட்டத் துணிகிறான்? என்றால், பரதன் வீரத்தன்மையுடையோனாயிராமல் பயங்காளியாயிருந்தான். மேலும் அவனுக்கு தன் தந்தை செய்த வாக்குறுதியால் நாடு தனக்குரிமையானது என்ற உண்மையும், பிறப்பால் உரிமையுள்ள தன்னை வஞ்சித்துத் தன் தந்தை இராமனுக்கு நாடளிக்க முயன்ற உண்மையும் தெரியாது. அவன் உண்மையாகவே தன்னுடைய தாய் வம்புக்காரி, அவள் இராமனை வஞ்சித்துத் துரத்திவிட்டாள்; அதனால் கொடிய பாவம் தனக்கு வந்து சேரும் என்று நம்பி நடுங்கினான். இவ்வாறு அவனுடைய அச்சமும் அவசரமும் அவனுக்கு மனநடுக்கத்தைத் தந்தன. மேலும் கைகேசியுங்கூட பரதனை பிறப்பால் அரசுரிமையுடையவன் என்பதை உணராளே. உணர்ந்திருப்பின் கட்டாயம் அதைக்கூறி பரதனைத் தன் வசப்படுத்தியிருப்பாள். இவ்விபரீதங்களினாலேயே பரதன் மிகவும் பழிக்கு அஞ்சினவனாய்த் தன் தாயைத் தாயென்றும்பாராமல் 'கயிறிட்டு உயிரை விடு' எனப் பலவாறு தகாதமுறையில் நிந்திக்கிறான். தன்னைப் பெற்ற தாயை நிந்தித்த இவன் மக்களுக்கு ஓர் வழிகாட்டியே! இவனைப்பார்த்து உலகத்தார் நடப்பரேல் உலகம் விரைவிற் கெட்டழிவது திண்ணம். தன்தாய் தவறி நடந்தால் அவளைக் கண்டிக்கும் முறை வேறு.

பரதனைப்பார்க்கவந்த கோசலை அவனைக் கொடுமையாக நிந்திக்கிறாள். பரதன் மனம் துடிக்கிறான். அப்போது அவன் கூறியதில் எள்ளன்னம், பாயசம், ஆட்டின்மாமிசம் இவைகளைத் தேவதைகளுக்கும் விருந்தினருக்கும் தென்புலத்தாருக்கும் ஊட்டாமல் எவன் உண்கிறானோ அவன் நரகமடைகிறான் என்று கூறப்படுகிறது. இதுவும் நாம் முன் கட்டுரைகளில் ஆரியரைப்பற்றிப் புலாலுண்போரென்று கூறிய உண்மையை வலியுறுத்தும். விருந்தினர் வந்தபோது புலா

னுணவும், தெய்வம் தொழும்பொழுது உயிர்க்கொலையும் அவர்களுக்கு இன்றியமையாதது. நாம் முன் கட்டுரைகளில் சீதை கங்கைக்கும் யமுனைக்கும் நேர்ந்துக் கொண்டபோது பல உயிர்ப்பிராணிகளை வதைத்துத் திருப்தி செய்கிறேன் என்ற வரலாறே இதற்குத் தகுந்த சான்றும். மேலும் இவர்கள் பிதிர்களைத் திருப்தி செய்வதற்கும் மாமிசம் இன்றியமையாதிருந்தது. இதற்கு இவர்களுடைய மனுநீதிசாத்திரம் மேற்கோளாயிருக்கிறது. மேற்கோளாகச் சிலவற்றை இங்கே அந்நாளிலிருந்து குறிப்போம்.

பிதிர்களுக்குத் திதி கொடுப்பதைப்பற்றி மனுஸ்மிருதி மூன்றாவது அத்தியாயம் விளங்கக் கூறுகிறது. அதில் சுலோகம் 268ல் 'பாடீனசம் முதலிய மச்ச மாமிசத்தால் சிரார்த்தம் செய்தால் பிதிர்கள் இரண்டுமாதம் வரையிலும் திருப்தியடைகிறார்கள். அரிணமென்கிற மான் மாமிசத்தாற் செய்தால் மூன்றுமாதம் வரையிலும், செம்மறியாட்டு மாமிசத்தாற் செய்தால் நான்குமாதம் வரையிலும், பறவைகளின் மாமிசத்தாற் செய்தால் ஐந்துமாதம் வரையிலும் திருப்தியடைகிறார்கள்.' சுலோகம் 269ல் 'வெள்ளாட்டின் மாமிசத்தாற் செய்தால் ஆறுமாதம் வரையிலும், புள்ளிமான் மாமிசத்தாற் செய்தால் ஏழுமாதம் வரையிலும், கருப்புமான் மாமிசத்தாற் செய்தால் எட்டுமாதம் வரையிலும், கலைமான் மாமிசத்தாற் செய்தால் ஒன்பது மாதம் வரையிலும் திருப்தியடைகிறார்கள்.' சுலோகம் 270ல் 'முள்ளம்பன்றி, காட்டெருமைக்கடா இவைகளின் மாமிசத்தாற் செய்தால் பத்துமாதம் வரையிலும், முயல் ஆமை இவைகளின் மாமிசத்தாற் செய்தால் பதினொருமாதம் வரையிலும் திருப்தியடைகிறார்கள்.' சுலோகம் 271ல் பசுவின்பால், தயிர், நெய் இவைகளாற் சிரார்த்தஞ் செய்தால் ஓராண்டு வரையிலும், தண்ணீர் குடிக்கும்போது இரண்டு காதும் தண்ணீரிற்பட குடிக்கின்ற க்ஷீண இந்திரியத்தையுடையதாகிய வார்த்தீனசமென்னும் கிழவெள்ளாட்டுக்கடாவின் மாமிசத்தாற் செய்தால் பன்னிரண்டு ஆண்டுகள் வரையிலும் திருப்தியடைகிறார்கள்.' சுலோகம் 272 'அந்தந்தக் காலத்திலுண்டான கரியமுது, முள்ளுள்ள வாளைமீன், கட்கமிருகம், சிவந்த ஆடு இவைகளின் மாமிசங்களால் செய்தால் அளவற்றநாள் வரையில் திருப்தியடைகிறார்கள்.' சுலோகம் 123 'மாதந்தோறும் செய்யத்தக்க அமாவாசிய சிரார்த்தத்தைப் புதிதாயும் நாற்றமில்லாமலுமிருக்கிற

மாமிச முதலியவற்ருலே செய்பத்தக்கது.' ஐந்தாம் அத்தியாயம் சுலோகம் 16 'ஆயிரம் பல்லுள்ள புடீனசமென்னும் மீனும், சிவப்பு மீனும் எக்கியத்திலும் சிரார்த்தத்திலும் விதிக்கப்பட்டிருக்கிறது. கும்பலோடு சஞ்சரிக்கிற மீனும், சிங்கமுக மீனும், முள்மீனும் மற்றக் காலங்களில் உண்ணலாமென்று சொல்லப்பட்டிருக்கிறது.' சுலோகம் 18 'முள்ளம்பன்றி, சல்லியமிருகம், உடும்பு, காண்டாமிருகம், முயல் இவைகள் ஐந்து நகங்களுள்ளவைகளாயிருந்தபோதிலும் உண்ணலாம். ஒரு பக்கம் பல்லுள்ள மிருகங்களில் ஒட்டகம் நீங்கலாக மற்றவைகளை உண்ணலாம்.' சுலோகம் 28 'பிரமன் இவ்வுலக முழுவதையும் சீவனுக்கு ஆகாரமாக உண்டு பண்ணினர். ஆகையால் நெல் முதலான தாவரமும் மிருக முதலான சங்கமமும் சீவனுக்கு ஆகாரமாகவே இருக்கின்றன.' சுலோகம் 30 'ஆதலால் பிராமணன் புசிக்கத்தகுந்த பிராணிகளை தினந்தோறும் புசித்த போதிலும் பாவத்தையடையமாட்டான். புசிக்கத்தக்கவர்களும் கொல்லத்தகுந்தவைகளும் பிரமனலேயே படைக்கப்பட்டிருக்கின்றனவல்லவா?'

மேலே கண்டவைகளைச் சிந்தித்தால் ஆரியர் எவ்வளவு தூரம் இழிவான அறிவுடையவர்களாயிருந்தார்களென்பதை உணரலாம். மனிதன் தின்பதற்காகவே மிருகங்களையும் பறவைகளையும் பிரமன் படைத்தானென்று அவர்களுடைய சட்டநூலாகிய மனுஸ்மிருதியே கூறுகிறது! என்ன அநியாயம்! இவ்வளவுகேவலமான அறிவுடைய மக்களும் இருந்திருப்பார்களா? மிருகங்கள் தின்பதற்காகவே மனிதரைப் பிரமன் படைத்தான் என்று அம்மிருகங்கள் விதித்துக் கொண்டு மனிதர்களைக் கொல்லத்துணிந்தால் இம்மனு முதலிய அறிவற்ற மிருகங்கள் யாது கூறுமோ? இம்மனுவைப் பகுத்தறிவுள்ள மனிதனென்பதா, அறிவற்ற மிருகமென்பதா? இவன் பகுத்தறிவற்ற மிருகமென்பதை நன்கு நிரூபித்துவிட்ட பின்னரும் இவனை மனிதனென்று எவ்வாறு கொள்வது? இச்சுயநல மிருகத்தை ஒரு வகுப்பார் தமது நீதிநூலாசிரியன் எனப்பாராட்டுகின்றனரே? பரிதாபம்! இதனல் இவ்வாரியமக்கள் புலாலுண்ணுந் தன்மை மிக விபரமாகத் தெளிவாகின்றது. இதற்குச் சான்ருக இக்காலத்திலும் சென்னைமாபுரிக்கு வடக்கேயுள்ள பார்ப்பனமக்களனைவரும் புலாலுண்பவராக

இருத்தலே அமையும். வடநாட்டுப்பார்ப்பனருள் புலாலுண்ணாதோர் கிடைப்பது அருமையினும் அருமை.

தென்னாட்டுப்பார்ப்பனரோ தமிழ்மக்களிடைக் காணப்படும் மிகச் சிறந்ததான கொல்லாமையைக் கற்றுக்கொண்டனர். அதனால் புலாலுணவையும் மறுத்தனர். ஏனெனில், அவ்வாறு அவர்கள் நடந்து கொள்ளாதிருப்பின் அவர்களைக் கேடுகெட்ட மிருகங்களாகவே தமிழ்மக்கள் மதித்திருப்பர். ஆனால் தென்னாட்டுப்பார்ப்பனரோ அடிக்கடி பலவேள்விகள் புரிந்து எண்ணிறந்த ஆடுகளைக் காயடித்துக் கொன்று நெய்யிலிட்டுப் பொரித்துத் தின்கின்றனர். இதை அவர்கள் தேவதைகளுக்குப் பிரியமான செயலென்று கூறித் தமிழ்மக்களை ஏமாற்றி வந்ததோடு அமையாது தமிழ்மக்களிற் சிலரையும் தம் வசப்படுத்தி, சிறுதெய்வ வழிபாடுகளைப்புகுத்தி, கடவுள் மிருகங்களை மனிதர்கள் தின்பதற்காகவே படைத்தார் என்ற தீய கொள்கையையும் பரப்பிப் பலரைப் புலாலுணவு உண்ணுமாறும் செய்து விட்டனர். ஆரியருக்கும் தமிழருக்கும் ஏற்பட்ட பழக்கத்தால் ஆரியர் புலாலுணவைக் குறைப்பதையும் தமிழரிற் சிலர் புலாலுண்பதையும் கற்றுக்கொண்டனர். மேலும் தேவதைகளுக்குப் பூசை செய்யும்போது கட்டாயம் ஆடுமாடுகளைக் கொன்று தின்னவேண்டும், இல்லையானால் பாவம் வந்து சேரும் என்ற தப்பான தீயகொள்கையையும் தமிழ்மக்களிற் சிலரிடம் புகுத்தினர். இது எதனால் விளங்குகிறதென்றால், மேலே பரதன் 'இராமனுக்குத் தீமை நினைத்திருந்தால் ஆட்டுமாமிசத்தைத் தேவதைகளுக்கு ஊட்டாமல் உண்பவன் அடையும் பாவத்தில் போகிறேன்' எனச் சூளுரைப்பதால் இது தெளிவாகிறது. ஆனால் தற்போது பலர் இதன் உண்மையை உணரத் தொடங்கியுள்ளர். ஆனால் சிறுதெய்வ வழிபாடுகள் ஒழிவதோடு பலியிடுவதும் நாளுக்குநாள் குறைந்துவருகிறது. இதுகண்ட பார்ப்பனர் யாகமென்று பெயர் வைத்து அடிக்கடிப் பல ஆடுகளை வதைத்துக் கொல்லுவதில் மிகுதியாக முனைந்துளர். பரிதாபம்! இத்தகைய ஆரியச்சூழ்ச்சித் தீமைகள் ஒழிந்து கொல்லாவிரதம் இக்குவலயமெல்லாம் ஓங்குநாள் எந்நாளோ என்று அறிஞரனைவரும் வேண்டும் முயர்ச்சிகளைச் செய்து கொல்லாவிரதத்தைப் பரப்ப வேண்டும்.

தமிழ்மக்கள் மறந்தும் பிறன்கேடுசூழா மாண்பினர். இன்னு செய்தாரைத் தண்டிக்க அவர்நாண நன்னயஞ்செய்யும் நடையினர். இன்னுசெய்தார்க்கும் இனியவேசெய்வதுதான் சாலுமெனக்கொண்டு யாவருக்கும் நலமேபுரிவர். ஆதலின் தமிழ்மக்களனைவரும் தமது முன்னேரியல்புணர்ந்து நல்வழிப்படுமாறு வேண்டுகின்றேம்.

நிற்க, பரதன் தசரதனுக்குப் பிணக்கிரியைகள் செய்தான். இக்காலத்தில் இவர்கள் பன்னிரண்டு மாதங்களிற் செய்யுங் கிரியைகளெல்லாம் அக்காலத்தில் பன்னிரண்டு நாட்களில் முடிந்துவிட்டதாகத் தெரிகிறது. பதின்மூன்றும் நாளே சாம்பலும் எலும்பும் அப்புறப்படுத்தப் பெற்றன. இதைப்பற்றி மொழிபெயர்ப்பாளர் சினிவாசய்யங்கார் எழுதும் குறிப்புக்களாவன. (பக்கம் 301) "அக்காலத்தில் சகலகிரியைகளும் பன்னிரண்டு நாட்களில் முடிந்துவிட்டதென்று தெரியவருகிறது. இப்பொழுது அவைபன்னிரண்டு மாதங்களில் ஊனமாசிகம், மாசிகம், சோதகும்பம் என்று கிரமமாக நடந்து வருஷத்தின் முடிவில் ஆப்திக சிரார்த்தத்துடன் பூர்த்தியாகிறது." (பக்கம் 303) "மனுஷ்ய தேகம் அநித்யமானதால் இப்பொழுது சஞ்சயனம் இரண்டாவது நாளிலேயே செய்யப்படுகிறது" இக்குறிப்புக்கள் முன்னுக்குப்பின் முரணுகின்றன. மனித உடல் நிலைபற்றதனுல் பதின்மூன்றும் நாள் நடந்த தீபாற்று விழா இக்காலத்தில் இரண்டாம்நாளே நடக்கிறதென்றுல் அதன் முன் நடந்த கிரியைகளெல்லாம் அதன் முன்னரே யன்றே முற்றுப்பெற அறிஞர் விரும்புவர். அவ்வாறின்றி அவை பன்னிரண்டு நாட்களுக்குப் பதிலாகப் பன்னிரண்டு மாதங்களில் நடக்கின்றன என்றுல் அது வைதிகர்கள் சூழ்ச்சியேயன்றி வேறன்று. என்னையெனில் பன்னிரண்டு நாட்களிலும் தொடர்ந்து ஒருவன் கிரியைகளைச் செய்வானேல் வைதிகர்களுக்கு வருவாய் அதிகமாயிருக்காது. அவைகளை விட்டுவிட்டு முப்பதுநாள் தள்ளித்தள்ளிச் செய்தால் செய்பவர்களுக்குச் சலிப்புத் தோன்றுது, அதனுல் வருவாயும் மிகும். இதனுல் இவ்வாறு ஆரிய வைதிகர்கள் கிரியைகளை மாற்றிக்கொண்டதற்குக் காரணம், தம் வருவாயை மிகுதிப்படுத்திக்கொள்ளவேயன்றி வேறன்று.

ஆரியப் புரோகிதர்கள் தம் வருவாயைக் கருதி ஆரியப் பொதுமக்களிடைத் தமக்குப் பிணச் செயல்களைப் புரிவதற்குப் பிள்ளைக

ளில்லாமல் இறப்பவன் புத் என்னும் நரகத்தை அடைவான் என்றும், புத் என்னும் நரகத்திலிருந்து பெற்றோரை மீட்பவனே புத்திரன் என்றும், ஆதலின் எவ்வாற்றானும் பிள்ளைப்பேறு இன்றியமையாததென்றும் வலியுறுத்தி ஓர் பெரிய அச்சத்தையும் பரப்பினர். இவ்வித அச்சம் தோன்றியபின்னரே ஆரியர் நெடுநாள் பிள்ளையில்லாதபோது தம்மனைவியரைப் பிறர் வசம் ஒப்புவித்தாவது பிள்ளைப் பேறடைந்தனர் என்ற வரலாறு காணப்படுகின்றது. இதற்குச் சான்று தசரதன் அசுவமேதம் செய்யத் தொடங்கி கோசலை முதலிய தனது மூன்று மனைவியரையும் யாகம் நடத்திய நான்கு பிராமணரிடம் ஒப்புவித்து இராமன் முதலிய நான்கு பிள்ளைகளைப் பெற்றதே. பாண்டு, திருதராட்டிரன், விதுரன் முதலியோர் தம் உண்மைத் தந்தை இறந்த பின்னர் வியாச முனிவனுடைய சேர்க்கையாற் பிறந்ததும், குந்தி தன்கணவன் பாண்டு இறக்குந்தருவாயிலிருக்கும்போது பிறரைக்கூடி தருமன், பீமன், அருச்சுனன் என்ற மூன்று பிள்ளைகளைப் பெற்றதும், குந்தியின்கணவனாகிய பாண்டுவின் இரண்டாம் மனைவியாகிய மத்தரை யென்பாள் பிறரைப் புணர்ந்து நகுலன் சகாதேவன் என்ற பிள்ளைகளைப் பெற்றதும் இதனாலேயே.

பிள்ளைப்பேறில்லாமல் இறப்போர் பிணத்தை மற்றவர் கொளுத்தினால் அது வேகாது போலும்! மற்றவர் புதைத்தால் அதை மண் தின்னாது போலும்! ஒரு சாரார் தம் வயிற்றுப் பிழைப்பும் வாழ்வும் கருதிப்புனைந்துரைத்த சூழ்ச்சியுரைகளுக்குப் பொது ஆரிய மக்கள் மயங்கி ஈடுபட்டனரே! பரிதாபம்! பரிதாபம்! இத்தீய கொள்கைகளும் சாதி வேறுபாடுகளும் பிற்காலத்திலேயே தமிழ்மக்களிடை அவ்வாரியரால் பரப்பப்பட்டன. அக்காலத்திலேயே கபிலர் அகவல் போன்ற அறிவுரை நூல்கள் தோன்றத் தொடங்கின. ஆதலின் தமிழ்மக்கள் இவ்வுண்மைகளை யெல்லாம் தெளிந்துணர்ந்து திதி கொடுத்தல், சாதி வேறுபாடு பாராட்டல் முதலிய அறக்கொடுஞ் செயல்களை இனியேனும் விட்டொழிக்குமாறு வேண்டுகின்றோம். இத்தீய செயல்களால் பொருள் கெடுவதோடு சில சோம்பேரிகளே வயிறு புடைக்க உண்டுவாழ்கின்றனர். இக்கொடிய வழக்கங்களாலேயே தமிழ்மக்கள் வறுமை நோயுற்று வருந்துகின்றனர். தமிழ் மக்களே! இனியேனும் ஆரியமக்களுடைய இக்கேவலமான இழிந்த

புரட்டுகளுக்குச் செவிகொடுத்து மயங்காமல் மெய்யறிவு பெற்றுச் செல்வவாழ்க்கையை யடைந்து நல்வழிப்பட முந்துங்கள், முந்துங்கள்.

வால்மீகி முனிவர் எழுதுகின்றார் "தசரதனுக்குத் திருப்தி யுண்டாவதற்குப்பரதன் பிராமணர்களுக்கு வேண்டுவன தந்தான்" என. தசரதன் இராமனிடத்துள்ள மயக்கத்தால் மனமுடைந்து மாண்டுமடிந்து சாம்பலாயினன். அச்சாம்பலைத் திருப்தி செய்வதெப்படி? தசரதன் உயிரோடிருக்கும்போதாவது இராமனை அவன் முன் கொண்டுவந்து விட்டிருந்தால் அவனைக் கட்டித் தழுவி முத்தமிட்டு மடிமீது வைத்துத் திருப்தியடைந் திருப்பான். ஆனால் பரதன் இதைவிட்டு பார்ப்பனருக்கு வேண்டுவன தந்திருப்பனேல் தசரதன் ஒருபோதும் அணுவளவேனும் திருப்தி யடைந்திரான். உண்மை இவ்வாறிருக்க மாண்டு மடிந்த தசரதனை—சாம்பலும் எலும்புமான சவத்தை—திருப்தி செய்யப் பார்ப்பனருக்கு வேண்டுவன தந்தான் என்று கூறினால் இது சுயநலப் புரோகிதர் புரட்டென்னுமல் வேறென்னென்பது? தம் வயிற்றுப் பிழைப்புக்காக ஆரியப் புரோகிதர் எழுதிவைத்த மயக்குரைகளே இவைகள். இவைகளையெல்லாம் தமிழ்மக்கள் தம் குடியைக்கெடுக்கவந்த சூழ்ச்சிப்பேச்சுக்களாகவே கருதுதல் வேண்டும்; தமது நல் வாழ்க்கையைப் பாழாக்க வந்த படிற்றுரைகளென்றே தள்ளுதல் வேண்டும். தமிழ் மக்களே, அறிவிற் சிறந்த நீங்கள் நல்வாழ்வடைய உண்மையாக உங்களுக்கு விருப்பமிருக்குமேல் இத்தீய புரோகிதப்புரளிகளில் மயங்காது நல்வழிப்படுவதோடு நம்முடைய முன்னோர்களாகிய பண்டைத் தமிழ்மக்கள் இத்தகைய தீய செயல்களைக் கொண்டிருந்தனரல்லர் என்ற உண்மையினையும், இத்தீய செயல்களெல்லாம் ஆரியப் புரோகிதராலேயே நம்மிடைப் பரப்பப்பெற்று வேரூன்றின என்ற உண்மையினையும் உண்மையாக நம்பி இறந்தவர்களாகிய நம்முடைய தாய் தகப்பனுக்குப் பதில் வேறொருவனை நமது தந்தையாக இருத்தி வேண்டுவன கொடுக்கும் திதிகளை அறவே ஒழித்து விடுமாறு உங்களைத் திரும்பவும் வேண்டிக்கொள்கின்றேன். நாம் நம்முடைய நல்லொழுக்கமுடைய தாயினிடம் அவள் காதலித்துக் கூடிய மெய்க் காதலனாகிய நமது தந்தைக்குப் பிறந்திருக்க வேறொரு தடிமகனை நமது தந்தையாகக் கருதி வேண்டுவதைத் தந்து விலாப்புடைக்க

ஊட்டினுல் அது நமது இழிவான வெறுக்கத்தகுந்த மடமையே யாகுமன்றோ? நமது உத்தமியாகிய அன்னைக்குக் கணவனுகிய நம் தந்தைக்குப் பதில் வேறொருவனைக் கணவனுக இருத்துவோமேல் இதைப்பார்க்கிலும் வெறுக்கத்தகுந்த இழிசெயல் வேறு என்ன இருக்கிறது? அறிவுடையாரே, சிந்தித்துப்பாருங்கள்; சிந்தித்து அமைதியாகத் தெளிந்து உண்மையைக் கடைப்பிடித்து இவ்விழிந்த செயல்களை உடனே விட்டொழியுங்கள், விட்டொழியுங்கள். இப் பாவிப்புரோகிதர்கள் உங்களுடைய நெற்றி வெயர்வை நிலத்தில் விழ நீங்கள் அரும்பாடு பட்டுத் தேடிய பொருளை உங்களிடமிருந்து பறித்து விலாப்புடைக்க உண்டு கொழுப்பதோடு நில்லாமல் அவர்களை உங்களைப்பெற்ற தந்தையாகவும் கருதச் செய்கின்றனரே! இதை நினைக்க நினைக்க அறிவுடைய எவனுடைய மனம்தான் கொதிக்காமலிராது. இம்மடத்தனமான பழக்க வழக்கங்கள் என்று நம் நாட்டை விட்டொழியுமோ அன்றே நம் நாடு புனிதநாடாகும். அதுவரை கேடுகெட்ட இழிந்த தன்மையதாகவே இருக்குமென்பதில் ஐயப்பாடு யாதுளது? இதற்கு மேற்கோளாகக் கபிலர் அகவலில் உள்ள அடிகளைக் கீழே குறிப்போம். அவைகளை அறிஞர் சிந்தித்துத் தெளியவேண்டுகின்றோம்.

"பார்ப்பன மாந்தர்காள்! பகர்வது கேண்மின்
இறந்த வராயுமை இவ்விடை இருத்தி
பாவனை மந்திரம் பலபட உரைத்தே
உமக்கு அவர் புத்திரர் ஊட்டினபோது
அடுபசியாற் குலைந்து ஆங்கவர் மீண்டு
கையேந்தி நிற்பது கண்டதார்? புகலீர்.
அருந்திய உண்டியால் யார்பசி கழிந்தது?
ஒட்டியர் மிலேச்சர் ஊணர் சிங்களர்
இட்டிடைச் சோனகர் யவனர் சீனத்தர்
பற்பலர் நாட்டிலும் பார்ப்பார் இல்லையால்"

இதில் ஏனைய நாடுகளில் பார்ப்பார் இருக்கின்றனரா? அங்கிருப்பாரெல்லாரும் திதி கொடுக்கின்றனரா? அவர்களனைவரும் நரகமே புகுகின்றனரா? எனக்கபிலர் கடாவுகின்றனர். சாதி வேறுபாட்டைப்பற்றி இவர் கூறுவன வற்றையும் இங்கே குறிப்போம்.

"முற்படைப்பதனில் வேருகிய முறைமை போல்
நால்வகைச்சாதி இந் நாட்டினில் நாட்டினீர்
மேல்வகை கீழ்வகை விளங்குவது ஒழுக்கால்
பெற்றமும் எருமையும் பிறப்பினில் வேறே.
அவ்விரு சாதியில் ஆண்பெண் மாறிக்
கலந்து கருப் பெறல் கண்டதுண்டோ?
ஒருவகை சாதியாம் மக்கட் பிறப்பில்ஈர்
இருவகையாக நீர் இயம்பிய குலத்துள்
ஆண்பெண் மாறி அணைதலும், அணைந்தபின்
கருப்பொறை உயிர்ப்பதும் காண்கின்றி லீரோ?

எனக்கபிலர் வினவும் வினக்களை எவரே மறுக்கமுடியும்? காளை யும் எருமையும் மாடென்னும் பொதுப் பெயருடனிருந்தாலும் பசு எருமையையும், எருமை பசுவையும் பெறுவதை நாம் கண்டதில்லை. ஏனெனில் அவை பிறப்பினில் வேறு வேருகப் படைக்கப் பெற் றவை. ஆனல் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ள மனிதரில் மேல் வகுப்பு கீழ் வகுப்பு என்ற பிரிவில் மேல் வகுப்புப் பெண்ணைக் கீழ்வகுப்பினன் கூடிப் பிள்ளையைப்பெறுதல் உலகமறிந்ததே. ஆயின் இவ்விருவரும் வேறு வேறு வகுப்பென்று எங்ஙனம் கருத முடியும்? மணந்து கூடின் கருப்பெறுதல் இல்லாமல் இருந்தாலே யன்றோ வேறு வேறுவகை யென்று பிரிக்கமுடியும்? என்று நமது கபிலமுனிவர் கற்றறிவில்லாத மிருகங்களும் எளிதில் உணருமாறு மனிதர்களனைவரும் ஒரேவகுப்பினரே, அவர்களுள் ஆண் பெண் என்ற பாகுபாட்டைத்தவிர வேறுவகுப்பில்லை என்று கூறி கடைசி யாக அவர்,

"குலமும் ஒன்றே, குடியும் ஒன்றே
இறப்பும் ஒன்றே, பிறப்பும் ஒன்றே
வழிபடு தெய்வமும் ஒன்றே, ஆதலால்
முன்னேருரைத்த மொழிதவருமல்
எந்நாளாயினும் இறப்பவருக்கு இட்டு
புலையும் கொலையும் களவும் தவிர்ந்து
நிலை பெற அறத்தில் நிற்பதை அறிந்து
ஆணும் பெண்ணும் அல்லதை உணர்ந்து

பேணி உரைப்பது பிழையெனப்படாது
சிறப்பும் சீலமும் அல்லது
பிறப்பு நலம் தருமோ? பேதையீரே !"

என நல்லுரைகளைப்பறை சாற்றுகின்றார்.

எம்முடன்பிறப்பினரான பேரறிவாளரே! மேலே கண்ட கபில முனிவரின் நல்லுரைகளைச் சிந்தித்து குலமும் ஒன்றே, குடியும் ஒன்றே, வழிபடுதெய்வமும் ஒன்றே என்ற பொன்னுரைகளைப் போற்றி உங்கள் வீடுகள்தோறும் பொன்னெழுத்திற் பொறித்து ஒற்றுமையுற்று நல்வாழ்வடைய முன்வாருங்கள், முன்வாருங்கள். இவ்வாறு ஒற்றுமையுற்று ஒரேகுலத்தினராவீரேல் நீங்கள் நினைத்து முடிக்க அரிதாம்பொருளும் உளதாமோ? 'சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை.' அவ்வாறு நம்நாட்டினரனைவரும் ஒன்றி ஒரேகுலத்தினராகி விளங்கும்நாள் மிகவிரைவில் தோன்றுமாறு முயன்று வெற்றிபெற்று நல்வாழ்வடையுங்கள்.

சத்துருக்கன் மிகவும் கிழவியாகிய கூனியைக் கீழே தள்ளி அவளுடைய கைகால்கள் முறியுமாறு அடிக்கிறான். இத்தகைய பாதகனுடைய வெறுக்கத்தகுந்த செய்கையை என்னென்பது? இராமன் முன்னர் கிழவியாகிய தாடகையைக் கொன்றான். தடிமகனாகிய சத்துருக்கன் கிழவியை அடித்துக் கீழே தள்ளி மிதித்தானென்றால் அவனுடைய ஆண்மைதானென்னே? சிறு பிள்ளைகள் 'செத்த பாம்பை அடித்துப்போட்டேன் சந்தமாமா ! சாகிற கிழவியை குத்திப் போட்டேன் சந்தமாமா !' என்று வேடிக்கையாகப் பாட்டுப்படிக்கும். அதற்கு இலக்கியமாக நமது சத்துருக்கன் சாகப்போகிற கிழவியாகிய கூனியைக் கீழே தள்ளி அடித்துமிதிக்கிறான். இனி இவ்வரலாற்றில் கம்பர் செய்துள்ள புரளியைக் காண்பாம்.

தூதர், வசிட்ட முனிவன் ஏவலோடு வந்தோமெனப் பரதனிடம் கூறியதாக வால்மீகி கூறக் கம்பர் தசரதனிடமிருந்து வந்ததாகவே கூறுகின்றனர். பரதன் கனாக்கண்டு வந்திருந்தமையைக் கம்பர் கூறவேயில்லை. பரதன் அயோத்தி வந்ததும் தன் தந்தையிருக்கும் அரண்மனையிற் காணாது தன்தாயகம் வந்தான் என்று வால்மீகி கூறக் கம்பர் அவன் தசரதன் வீட்டிலிருக்கும்போது தோழியையனுப்பிக் கைகேசி அவனை அழைக்கிறாளெனக் கம்பர் கதை கட்டுகிறார்.

பின் இராமன் குற்றமிழைத்துக் காடேகினனோ என்ற பரதன் வினவுக்குநேராகத் தான்செய்த சூழ்ச்சியைக் கைகேசி கூறினளென வால்மீகி கூறக் கம்பரோ பரதன், குற்றமிழைத்ததால் இராமன் காடேகினனோ என்று கேட்டுவிட்டு, அவன் குற்றம் செய்யான் எனத் தானே சமாதானம் செய்துகொண்டு அவன் காடேகியது மன்னன் இறக்குமுன்னே பின்னே என வினவினனெனவும், அதற்குக் கைகேசி முன்னே எனக்கூறி வாளாவிருந்தனளெனவும், பின்பே இராமன் வனமேகக் காரணமென்னவெனப் பரதன் வினவியபின்பே அவள் உண்மை கூறினளெனவும் கம்பர் கதை கட்டுகிறார். இதனால் அவர் எண்ணம், கைகேசி தான்செய்த தீமையைக்கூற அஞ்சி மறைக்க முயன்றதுபோற் காட்டி அவளை மிகத்தீயவளாக்கவே. பரதன் எவ்வாறு தன் தாயை இகழ்ந்தானென வால்மீகி கூறுகிறாரோ அதற்கு நூறுமடங்கு அதிகக் கடுமையாக அவன் அவளை இகழ்ந்ததாகக் கம்பர் கூறுகிறார். அவள்மேல் தமக்கிருந்த சின வெறியையெல்லாம் கம்பர் பரதன் வாயால் போக்கிக்கொள்கின்றனர்.

பரதனைக்கண்டவுடன் கோசலை அவனைப் பலவாறு இகழ்ந்ததோடு நில்லாது அவன் தசரதனது சவச்சடங்குக்காகான் எனவும் கூறி அச்சுறுத்துகின்றாள் என வால்மீகி கூறுகிறார். கம்பரோ இவ்வுண்மையை மறைத்துக் கோசலை பரதனுடைய வருத்தங்கண்டு 'அப்பா! நீ கைகேசி செய்த தீமையை அறிந்திலைபோலும்' என மட்டும் வினவினதாகக் கூறுகிறார். இது கோசலையை மிகவும் நல்லவளாக உலகத்தாருக்குக் காட்டவே. கம்பருடைய தீயமதி இருந்தவாறு மிக அழகிதே! உண்மையை உள்ளவாறு கூறாமல் புரட்டுவதால் இவர் என் பெற்றார்? கைகேசி இவருக்குச்செய்த தீமையென்ன, கோசலை செய்த நன்மையென்ன?

பரதன் தசரதனுடைய பிணத்திற்கு எரிமூட்ட எழுந்தபொழுது வசிட்டன், தசரதன் பரதனை விலக்கிய கூற்றைக்கூறித் தடுத்து அவன் மனம் வருந்த சத்துருக்கனைக்கொண்டு தீமூட்டியதாகக் கம்பர் வேண்டுமென்று கதை கட்டுகிறார். பரதனுமா இவர் உண்ணும் சோற்றில் மண்ணைவாரியிட்டான்? இவர் என் பரதனிடமும் கொடுமை காட்டி, வேண்டுமென்று பொய்புகலுகிறார்? வசிட்டன் இச்சொல்லைக் கூறியதாகவே குறிக்காமல் பரதனே கைப்பட எல்லாச் செயல்களை

யும் செய்து முடிக்கிருனென வால்மீகி மிகத் தெளிவாக கூறியிருக்கிருர்.

தசரதனுக்குப் பட்டமகிஷியரைத்தவிர அறுபதினுபிரம் மனேவியரிருந்தனரென மிகைபடக் கூறிய கம்பர், தசரதனிறந்தவுடன் முனிவன் அவர்களைப்பார்த்து அப்பிணத்தைச் சுடும்போது தீயிற் புகுங்களெனக் கூறினதாகப் பொய்புகன்றிருப்பதோடு தசரதனைத் தீயால் கொளுத்திய அன்று அவர்களனைவரும் தீயிற் புகுந்திறந்தனரெனவும் ஓர் அபாண்டமான பொய்யைக்கட்டிவிடுகிருர். இவைகளைப் பற்றி வால்மீகி ஒன்றும் கூருததோடு தசரதனைக் கொளுத்தியபின் அப்பெண்களனைவரும் அயோத்திக்குத் திரும்பினரெனவும் தெளிவாகக் கூறியிருக்கின்ருர். வால்மீகி கூறியிருந்தால்கதைபோக்குக்குக் கம்பர் சொல்லித் தொலேயட்டும். கூருத பொய்யை ஏன் இவர் கட்டிக்கூறவேண்டும்? அறுபதினுயிரம் பெண்களும் மாண்டமெடியத் தீவளர்த்த அந்த செய்தியைக் கம்பர் விவரித்திருப்பின் அவருடைய சிறந்த அறிவு திகழும். பெண்களை மிகக்கேவலமாக்குகின்றனர் கம்பர்.

குடிகள் வந்து பரதனை அரசேற்கவேண்டியதையும், அவன் மறுத்துப்பக்கத்திலிருப்போரைக் கங்கைவரை வழிசெய்ய ஏவியதையும் கம்பர் மறைத்தார். மேலும் பரதன் சுமந்திரனை நோக்கிச்சேனை முதலியோரைப் புறப்படக் கட்டளையிடுமாறு ஏவியதாக வால்மீகி கூறக் கம்பர் அவன் தன் தம்பி சத்துருக்கனை நோக்கிக் கூறியதாகக் கூறுகிருர். மேலும் பரதன் மரவுரியுடுத்துத் தேரேறி அயோத்தியை நீங்கினுனெனப் பொய் புகல்கிருர். சத்துருக்கன் கூனியை அடித்ததை வால்மீகி புறப்படுமுன்கூறக் கம்பர் அவர்கள் புறப்பட்டு வாயிலேயடைந்தவுடன் கூறுகிருர்.

பரதன் முதல்நாள் இராமன் தங்கிய சோலேயிலே தானும் தங்கியிருந்து அங்கிருந்து கால்நடையாக இராமனைப்போல் நடந்து சென்ருனென்று கதை கட்டுகிருர். இராமன் கங்கைக்கரை வரை தேரிற் சென்றதை மாற்றி காலே வரையே சென்ருனென முன் கதை கட்டியதற்கேற்ப இங்கும் இவர் கதையை மாற்றிக் கதை கட்டினுர் போலும்!

---

# பதின்மூன்றும் அத்தியாயம்.



ரதன் சேனையோடு கங்கைக்கரையை யடைந்ததைக் கண்ட குகன் "மனத்தாலும் எண்ணமுடியாத சேனையுடன் இவன் வருகிருன். இவன் வேடர்களான நம்மைச் சிறைசெய்வானே அல்லது கொல்வானே? அல்லது இராமனைக் கொல்ல வருகிருனே? வேடர்களே நீங்கள் மரக்கலங்களில் ஏறித் துறையைப் பாதுகாத்துப் போருக்குத் தயாராயிருங்கள்" என்று கூறிக் காணிக்கையும் புலாலும் பழமும் எடுத்துக்கொண்டு பரதனிடம் போனன். சுமந்திரன் அவன் வருவதைக் கண்டு பரதனை நோக்கி "இவன் வேடர் தலைவன் குகன். இராமனுக்கு உயிர்த்தோழன். இராமனிருக்குமிடம் அறிந்தவன். உன்னைக்காண வருகிருன்" என்ருன். பரதன் அவனை அழைத்து வரச்சொன்னன். குகன் வந்து பரதனைப் பணிந்து "இது உங்கள் நாடு. கங்கைக்கரை வரையில் வழிபோட்டதை உணர்ந்தும் தாங்கள் வருவதாக எனக்குத் தெரிவியாததால் மோசம் போனேன். அடிமைகளாகிய எங்கள் ஊரில் தங்கி நாங்கள் கொடுக்கும் புதுப்புலால், உலர்ந்தபுலால் இவைகளை உண்டு இன்றிரவு தங்கவேண்டுகிறேன்" என்ருன். பரதன் "உன் பேச்சால் மிக மகிழ்ந்தேன். பரத்துவாச முனிவனுடைய குடிசையை அடைய வேண்டும். கங்கையையும் தாண்டவேண்டும்" என்று கூறினன். குகன் அவனை நோக்கி "அதற்கு வேண்டுவன செய்கிறேன். ஆனல் உமது பெரியசேனை எனக்கு ஓர் ஐயத்தை உண்டாக்குகிறது. நீர் இராமனிடம் நல்ல எண்ணத்துடன் போகிறீரா, கெட்ட எண்ணத்துடன் போகிறீரா?" என்று கேட்டான். "நான் இராமனை அழைத்துவரப் போகிறேன். இது உண்மை" என்ருன். குகன் பரதனைப் புகழ்ந்தான். பரதன் இராமனை நினைத்து வருந்தி குகனிருக்குமிடம் போனன். குகன் அவனுக்கு இராமன் படுத்திருந்ததும் இலக்குவன் புலம்பியதும், இராமன் தூங்கும்போது இலக்குவன் என்ன செய்துவிடுவானே என்று சந்தேகித்து தான் வில்லேந்தி

அவன் சென்ற இடங்களெல்லாம் அடிதோறும் பின்தொடர்ந்து சென்று இராமனைக் காத்திருந்ததும், (சருக்கம் 87) அவர்கள் சடை பூண்டு ஓடமேறியதும், தன் வேலைக்காரன் அவர்களை அக்கரை சேர்த்ததுமாகிய வரலாற்றை விவரித்துச் சொன்னான். அதுகேட்ட பரதன் மூச்சற்று வீழ்ந்தான். கோசலை ஓடிவந்து "ஐயோ! இலக்குவனுக்காவது இராமனுக்காவது ஏதாவது துன்பம் நேர்ந்ததா" என்றழுதாள். பரதன் தெளிந்து அவளைத்தேற்றி இராமன் படுத்த இடம் முதலியவைகளைக் கேட்டறிந்து புலம்பினான். அவன் அன்று முதல் மரவுரியுடுத்துச் சடை பூணத்துணிகிறான். மறுநாள் பரதன் கங்கையையடைந்து சேனையை நிறுத்தி பரத்துவாசனைக் காணச்சென்றான்.

பரதன் ஆயுதங்களையும் நகைகளையும் சட்டையையும் தலைப் பாகையையும் கழற்றி வைத்துவிட்டு வெண்பட்டணிந்து வசிட்டனை முன்னிட்டுச் சென்று பரத்துவாசனைக் கண்டான். அம்முனிவன் பரதனை "இராமனைக் கொல்ல வந்தாயோ?" என வினவினன். பரதன் வருந்தினன். முனிவன் அவனைச் சோதிக்கவே கூறியதாகச் சொல்லி அவனை அவனுடைய சேனையோடு தங்கி விருந்துண்ண வேண்டினன்.

பரத்துவாசன் யோக மகிமையால் விசுவகர்மன் மயன் முதலிய தச்சர்களையும் அரம்பை மேனகை முதலிய தேவதாசிகளையும் அப்சரசுகளாகிய பெண்களையும் அழைத்தான். மைரேயம், சுரா என்கின்ற சாராயங்களையும் கள்களையும் வரவழைத்தான். நல்ல சோற்றுடன் மாமிசங்களையும் பானங்களையும் வரவழைத்தான். அதன் பயனாக தேவதைகள் எங்கும் நிறைந்து வந்து பரதனுக்கும் அவன் சேனைக்கும் வேண்டுவன உதவினார்கள். சில பெண்கள் பாடினார்கள். சிலர் ஆடினார்கள். பரதன் தனது மந்திரி பிரதானிகளுடன் வரிசையாக உட்கார்ந்தான். பிரமன் இருபதினாயிரம் தாசிப்பெண்களையும் குபேரன் இருபதினாயிரம் தாசிப்பெண்களையும் அனுப்பினார்கள். அவர்களில் மிக அழகானவர்கள் பரதன் முன் ஆடினார்கள். சில செடிகள் பெண்களின் உருவெடுத்துக்கொண்டு "உங்கள் விருப்பப்படி எங்களை அனுபவியுங்கள். கட்குடியில் விருப்பமுள்ளவர்களே! இந்த இனிமையான சாராயங்களைக் குடியுங்கள். இந்த சுத்தமான மாமிசங்களை உண்ணுங்கள்" என்றன.

ஒவ்வொரு ஆண்மகனையும் ஏழெட்டுப் பெண்கள் கைப்பற்றிக் கொண்டு என்னெய் தேய்த்துக் குளிப்பாட்டி, கால்பிடித்து, அலங்கரித்து அந்தரங்கமாக சுரா முதலிய பானங்களைக் குடிக்கச் செய்தார்கள். பரதனுடன் வந்த யானைக்காரர்களும், குதிரைக்காரர்களும், மற்றவர்களும் அளவுக்குமிஞ்சிக் குடித்து புத்தி மயங்கி தங்கள் வாகனங்கள் போனவிடந் தெரியாமல் மயங்கினார்கள். ஆட்டுமாமிசங்களும் பன்றி மாமிசங்களும் நிரம்பியிருந்தன. விசித்திரமாகப் பக்குவஞ்செய்யப்பட்ட மான், மயில், கோழி முதலிய பிராணிகளின் மாமிசங்கள் சூடாக பானைகளில் குன்றுகளைப்போல் வைக்கப்பட்டிருந்தன. இவைகளையெல்லாம் அவர்கள் உண்டு களித்து அன்றிரவைக் கழித்தார்கள். விடிந்தவுடன் முனிவன் இராமனிருக்குமிடத்தைப் பரதனுக்குக் கூறினான். பரத்துவாசன் வினவ, பரதன் கோசலையையும் சுமத்திரையையும் சுட்டிக்காட்டி தன் தாயாகிய கைகேசியைச் சுட்டும்போது அவளை இழித்துக் கூறுகிறான். பின் பரதன் விடைபெற்று ஓர் பல்லக்கிலேறிச் சேனைசூழச் சென்றான். சித்திர கூடமடைந்து ஓரிடத்தில் புகைகிளம்புவது கண்டு பரதன் தன்சேனையை நிறுத்தி அவ்விடத்தை நோக்கி இராமனைக் காணச்சென்றான். அச்சேனையால் துன்புறுத்தப்பட்ட மிருகங்கள் அக்காட்டை விட்டு ஓடிப்போயின.

இராமன் சீதைக்கு வனத்தின் அழகைக் காண்பித்து மந்தாகினி நதியையும் காட்டி "பெண்ணே! அதோ சக்கரவாகப் பறவைகள் சம்போகத்திற்காக ஒன்றுக்கொன்று இனிய குரலுடன் அழைத்து சம்போக காலத்தில் உண்டாகும் அழகிய ஒலிகளை ஒலித்துக்கொண்டு ரதியின்பொருட்டு அந்தப் பூக்களின்மேல் ஏறுகின்றன. இந்தச் சித்திரகூடம் மிகவும் ஏகாந்தமான போகங்களை அனுபவிக்கும் இடமாக இருத்தலால் இது அயோத்தியினும் இன்பந் தருகிறது. இந்நதி மிகவும் காமத்தை உண்டாக்குகிறது. நாமிருவரும் இதில் நீராடுவோம்" என்று பலவாறு கூறி அவளுடன் திரிந்தான். இராமன் அங்கே ஓரிடத்தில் உட்கார்ந்து "சீதே! இதோ சுத்தமான மாமிசம் இருக்கிறது பார். இது சுவையுள்ளது; நன்றாக வெந்தது" என்று தான் முதலில் சுவைபார்த்து அவைகளைச் சீதைக்குக் கொடுத்து மகிழ்வித்தான். அப்போது பல மிருகங்கள் சேனையைக்கண்டு அஞ்சி ஓடி வந்தன. அதன் காரண

மறிய இராமன் தம்பியை ஏவினன். இலக்குவன் ஓர் மரத்திலேறிச் சேனையைக் கண்டு "நெருப்பை அணை. சீதை குகைக்குள் போகட்டும். போருக்குத் தயார் செய்" என்று கூற இராமன் அது யாருடையதென்று வினவ, பரதனுடையதென்றறிந்துக்கூறி அவனை இகழ்ந்து "நாம் மலைமேலேறியோ இங்கு நின்றோ சண்டை செய்வோம். இன்று நான் பரதனைக்கொல்லாமல் விடுவதில்லை" என்றான். இராமன் "பரதன் மிகவும் நல்லவன். அவன் அயோத்தி வந்ததும் என் துன்பம் அறிந்து கைகேசியை இகழ்ந்துரைத்துத் தந்தையையும் இசைவித்து என்னை அழைத்துப்போக வருகின்றான். மூத்த மகனுக்கே அரசுரிமை உண்டு என்பதை அவன் நன்றாக அறிவான். பரதன் நம்மைப் பார்க்க விரும்புவது இந்தச் சமயத்திற்குத் தகுந்ததே. இதுவரை அவன் உனக்கு ஏதாவது கெடுதி செய்ததுண்டா? முன் தந்தையைக் கொல்வேனென்றாய், இப்போது அண்ணனைக் கொல்வேனென்கிறாய், உனக்கு அரசாட்சி வேண்டுமென்று விரும்புகின்றாய் போலும். பரதனை நோக்கி 'அரசை எனக்குக்கொடு' என்றால் உடனே கொடுத்துவிடுவான்" என்று கூறினான். இலக்குவன் உடனே வெட்கமடைந்தான். அவன் "நமது தந்தைதான் அழைத்துப்போக வந்தாலும் வரலாம்" என்று பேச்சை மாற்றப்பார்த்தான். இராமன் "இருக்கலாம். ஆனால் நமது தந்தையின் வெண்குடையைக் காணேன். கீழே இறங்கு. பரதனிடம் நான் கூறுமாறு நடந்துகொள்" என்று எச்சரித்தான். இலக்குவன் கீழிறங்கி வணக்கத்தோடும் நின்றான்.

பரதன் தனது சேனைகளை நிறுத்திவிட்டு கால் நடையாக இராமனைத் தேடி வந்தான். புகை வருமிடத்தை நோக்கி சத்துருக்கன் முதலியோரோடும் புலம்பிச் சென்று இராமனைக் கண்டான். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

பரதன் செயல்களினால் அவன் இராமனிடம் உண்மையான அன்பு கொண்டிருந்ததாகத் தெரியவருகிறது. கங்கைக் கரையில் இராமன் ஓர் மரத்தடியில் படுத்திருந்ததைக் கேட்டு பரதன் மூச்சற்று வீழ்கிறான். இதைக்கண்ட கோசலை இராமனுக்காவது இலக்குவனுக்காவது ஏதோ கேடு வந்தது கேட்டே பரதன் துன்புறுகிறான் என எண்ணி அழுகிறாள். இது இயல்பேயாயினும் மூச்சற்றுக்

கீழே விழ்ந்த பரதனுக்கு மனத்துன்பம் போக்குமாறு தேடாமல் தன்மகனையே நினைப்பது அவளது சுயநலத்தையும் உண்மையின் மையையும் காட்டும்.

பரத்துவாச முனிவன் பரதனைக் கண்டதும் 'இராமனைக் கொல்லவா வந்தாய்' என அவன் மனம் வருந்துமாறு கேட்டுவிட்டு அவன் வருந்தித்துடிப்பதைக் கண்டு பேச்சை மாற்றி "யான் உன் உண்மையறிவேனாயினும், உன்னைச் சோதிக்கவே வினவினேன்" என்று கூறுகிறான். இது அவனுடைய இழிமதியையே உணர்த்து கிறது. என்னை? முக்காலமும் உணர்பவனாகத் தன்னைக் கூறிக் கொள்ளும் முனிவன் பரதனுடைய உண்மையறிந்தும் அவன் மனம் வருந்துமாறு வினவுவானேன்? இது அவனது அறியாமையை உணர்த்துமன்றோ? இதனால் அம்முனிவனும் அவனையொத்த ஆரிய முனிவர்களும் முக்காலமும் அறிவார்கள் என்று புராண இதிகாசங்களில் ஆரியர் கூறுவது முழுப்பொய் என்பதும் ஆரியர் கள் தங்களுக்கு வலிமைத் துணையாம் தங்கள் முனிவர்களை நம்பி உலகினர் மயங்கி ஈடுபடுமாறு கட்டிவிடும் கதைகளே இவை என்ப தும் தெளிவாக விளங்குகின்றதல்லவா?

பரதன் கங்கைக்கரை வந்த அன்றே மரவுரியுடுத்தத் துணி கிறான் என்று குறித்த வால்மீகர் அதற்கு மாறாக பரத்துவாசனைக் காணச் சென்றபோது நகைகளையும் சட்டையையும் தலைப்பாகையை யும் கழற்றி வைத்துவிட்டு வெண்பட்டணிந்து சென்றான் என்றுக் கூறுவதால் அவன் தான் கூறியபடி செய்யாமல் இருக்கிறான் என்ப தும் பரத்துவாசனை யடைந்தபோது கூட மரவுரியுடுத்தவில்லை என் பதும் புலனாகின்றன.

பரத்துவாசன் பரதனுக்கும் அவனுடைய சேனைக்கும் விருந்து செய்கிறான். அதில் பிரமன் குபேரன் இந்திரன் முதலியவர்களால் அனுப்பப்பெற்ற அறுபதினாயிரம் தாசிப்பெண்கள் வந்ததாகவும், அப்பெண்கள் சேனாவீரர் ஒவ்வொருவருக்கும் ஏழெட்டுபேராகக் கூடிக்கொண்டு முழுக்காட்டி, அந்தரங்கமாகக் கூடி சுரா முதலிய சாரா யங்களை ஊட்டினார்களென்றும் தெரியவருகிறது. பல செடிகள் பெண்ணுருவடைந்து அவர்களோடும் கூடினவாம். ஆரியர் விருந்து மிக அழகிதே. உணவும், சாராயமும், கட்குடிகளும், பெண்கள்

சேர்க்கையும்தான் அவர்கள் நடத்தும் விருந்தின் பெருமைபோலும். அதிலும் அரசர்கள் நடத்தும் விருந்தில் வேண்டுமானால் தாசிப்பெண்கள் நடனமும் சேர்க்கையும் குடியும் இருந்தாலும், முனிவன் நடத்தும் விருந்திலுமா இந்தத்தப்பான இழி செயல்கள் வேண்டும்? பரத்துவாசன் தனது தவவலிமையை நல்ல வழியிலேயே பயன்படுத்துகின்றான்! ஒரு முனிவன் நடத்தும் விருந்திலேயே இவ்வளவு ஆபாச அட்டூழியங்களும் நடைபெற்றனவென்றால் அரசர்கள் நடத்தும் விருந்துகளும் ஆரியப்பொதுமக்கள் நடத்தும் விருந்துகளும் எவ்வளவு கேவலமாக இருந்திருக்க வேண்டும். பரதனுடைய சேனை வீரர்கள் குடித்து மயங்கிப் பெண்களோடு ஆடிக் கீழ்வீழ்ந்து தமது ஊர்திகள் போன இடங்கூடத் தெரியாமல் கிடந்தார்களாம். பரத்துவாசன் இத்தகைய இழிவான, அறிஞர் வெறுக்கத்தக்க, விருந்தை நடத்தி மகிழ்ந்து பெருமைபாராட்டினனும். பரதன் முதலியோரும் அதைப் புகழ்ந்தனராம். ஆரியர் தம் விருந்துமுறை மிக அழகிதே! நாம் முன் கட்டுரையில் எடுத்துக்காட்டிய மனுநூலால் கண்ட விருந்து முறைக்கு இம்முனிவன் விருந்து ஓர் பொருத்தமான எடுத்துக்காட்டாகும். பரத்துவாசன் நடத்திய விருந்தில் ஆட்டு மாமிசங்களும், பன்றி மாமிசங்களும் நிரம்பியிருந்தனவாம். விசித்திரமாகப் பக்குவம் செய்யப்பட்ட மான், மயில், கோழி முதலிய பிராணிகளின் மாமிசங்கள் சூடாகப் பானைகளில் மலைகளைப்போல வைக்கப்பட்டிருந்தனவாம். இவைகளையெல்லாம் அத்தாசிப் பெண்கள் இன்சொற்கூறி ஊட்ட, அவர்கள் உண்டு மகிழ்ந்தனராம். ஐயோ அநியாயம்! காட்டில் வாழ்ந்த ஆடுகள், பன்றிகள், மான்கள், கோழிகள், மயில்கள், இன்னும் மற்றைய பிராணிகள் இவைகளையெல்லாம் கொன்று அவைகளின் உடல்களாகிய பிணங்கள் எரிப்பதற்குத் தகுந்த சுடுகாடாக பரதன், அவன் சேனை வீரர்கள் இவர்களுடைய வயிறுகள் ஆயினவே! மாமிசங்கள் வெந்து மலை மலையாகக் குவிக்கப்பெற்றிருந்தனவாம். எண்ணிறந்த உயிர்களுக்கு எமனாயினனே இச்சண்டாளன், பரத்துவாசன்! இவனும் ஓர் முனிவனும், இவன் செய்வதும் தவமாம்!

'உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை அற்றே தவத்திற்குரு' என்றார் பொய்யில் புலவரும். தவத்தின் தன்மை யாது? உயிர்களுக்கு வரும் துன்பங்களுக்கு இரங்கி அத்துன்பங்

களைப் போக்குதலும், உயிர்களுக்கு ஒரு விதமான துன்பமும் செய்யாமலிருத்தலுமே தவத்தின் தன்மையாம். இதுவே தமிழ் மக்கள் கொண்ட தவமாம். ஆரிய மக்களோ மலை மலையாக உயிர்ப்பிராணிகளைக் கொன்று குவித்துச் சுட்டுத்தின்று பலவகைப்பட்ட சாருயங்களையும் குடித்துத் தாசிப் பெண்களுடன் ஆடுதலும், பிறரை ஆட்டுவித்தலுமே தவமெனக் கொண்டனர் போலும். இது உண்மையென்பதற்குப் பரத்துவாசன் செயலே தகுந்த எடுத்துக் காட்டாகிறது. மேலும் இவர்கள் செய்யும் தவமாகிய யாகமும் பல உயிர்ப்பிராணிகளுக்கு இவர்களை எமதர்மனுக்கி இவர்களுடைய வயிறுகளை அவைகளுடைய பிணம் இடும் காடாகவுமாக்குவதே என்பது உலகமறிந்ததே.

குகன் பரதனுக்குப் புளுப்புலால், உலர்ந்தபுலால் முதலியன தருவதாகக் கூறுகிறுன். பரதன் இராமனிருக்குமிடத்தை யடைந்தபோது இராமன் சீதையை நோக்கி "சீதே! இதோ சுத்தமான மாமிசம் இருக்கிறது பார். இது சுவையுள்ளது. நன்ருக வெந்தது" என்றுக் கூறி தான் முதலில் சுவைபார்த்து அவைகளை அவளுக்குக் கொடுத்து மகிழ்வித்தான். என்னே இவ்விராமன் முதலியோருடைய இழிவான வாழ்க்கை! உயர் வொழுக்கமுடைய தமிழ்ப் பெருமக்களே! இதனைச் சிந்தித்துப் பாருங்கள். இத்தகைய இழிதொழிலொழுக்கமுடைய அன்னியனுகிய ஆரியன் இராமனையும் நம்முடைய உடன் பிறந்தாரிற் சிலர் தெய்வமென எண்ணி வணங்குகின்றனரே! இதைப்போல இழிவான செயல் வேறென்ன இருக்கிறது! வால்மீகி கூறுகிற இவ்வுண்மைகளை உணர்ந்த பின்னரேனும் நாம் இவைகளை யெடுத்துக்காட்டி அவர்களை நல்வழிப்படுத்தவேண்டாமா? நம் உடன் பிறப்பாளர்களாகிய தமிழ் மக்களைத் தவறு கண்டவிடத்து நல்வழிப்படுத்த வேண்டுவது நமது கடமையல்லவா?

"நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேல் சென்றிடித்தற் பொருட்டு"

"அழிவின் அவை நீக்கி ஆறுய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு"

என நமது தெய்வத் தமிழ்ப் பெருபுலவர் திருவள்ளுவர் திருவாய் மலர்ந்து கட்டளையிட்டருளி யிருக்கின்றனரன்ருே? ஆதலின்

நம்முடைய கடமையை உணர்ந்து நாமும் கம்பரைப்போலக் கோடரிக்காம்பாகாமல் உண்மைத் தமிழ்மக்களெனப் பெயரெடுக்க முன்வருவோமாக. இத்தகைய இழி செயல்களையெல்லாம் மறைத்து இழிதகையர்—கம்பர் இராமாயணம் பாடியமையன்றோ, தமிழ்ப்பெருமக்கள் உண்மையுணராது தம் மூதாதையரை அநியாயமாகக் கொன்று இழிவுபடுத்திய கதையைப் பாராட்டிப் படிப்பதோடு நில்லாமல், தமது முன்னோரை வஞ்சித்துக் கொன்ற பாதகனாகிய இராமனையும் தெய்வம்போல் வழிபடுகின்றனர்? இவ்வுண்மைகளை உணரும் நண்பர்கள் இனியேனும் அறியா நண்பர்கட்கு இவைகளை எடுத்துக்காட்டி நல்வழிப்படுத்த முன்வர அவர்களை அன்புடன் வேண்டுகிறோம். இத்தகைய கொடிய தீமைகளைத் தமிழுலகத்துக்கு விளைத்த இனத் துரோகியாகிய கம்பரை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் நம் உள்ளத்தே ஊற்றெடுக்குந் துயரத்துக்கோர் அளவுமுண்டோ? அவர் விதைத்த தீமைப் பயிரைக் கருவறுக்க வேண்டியதே ஒவ்வொரு தமிழ்மகனுடைய இன்றியமையாத முதற் கடமையாகும். எம் உடன்பிறப்பாளரே! இக்கடனுணர்ந்து மெய்த் தொண்டாற்றி நலம் புரிய முன் வாருங்கள்! முன் வாருங்கள்!!

இராமன் சீதையை நோக்கி "பெண்ணே! அதோ சக்கரவாகப் பறவைகள் சம்போகத்திற்காக ஒன்றுக்கொன்று இனிய குரலுடன் அழைத்து சம்போககாலத்தில் உண்டாகும் அழகிய ஒலிகளை ஒலித்துக்கொண்டு சேர்க்கையின்பொருட்டு அந்தப்பூக்களின்மேல் ஏறுகின்றன. இந்தச் சித்திரகூடம் மிகவும் ஏகாந்தமான போகங்களை அனுபவிக்கும் இடமாக இருத்தலால் இது அயோத்தியினும் இன்பந்தருகிறது. இந்நதி மிகவும் காமத்தை உண்டாக்குகிறது" என்று கூறி அவளுடன் நீர் விளையாட்டு ஆடுகிறான். இதனால் இராமனுடைய மனநிலை எப்படிப்பட்டது என்பது தெரிகிறது. அப்போது இலக்குவனும் அருகிலிருக்கிறான். இதனால் அவர்களுடைய ஒழுக்கநிலை மிகவும் இழிந்தது என்பது விளங்குகிறது. இராமனும் சீதையும் படுத்திருக்கும்போது அவர்களுடைய கால்களை சிருங்க பேரபுரத்தில் கழுவினவன் தானே இவ்விலக்குவன். இவர்கள் வெட்கமானத்தை உதிர்த்தவர்கள் போலும்! இராமனும் சீதையும் காமப் பித்தேறி மிருகங்களைப்போல பகலென்றும் பாராமல் இரவென்றும் பாராமல் காமஇன்பம் நுகர்ந்து திரிந்தனரென்பது தெரியவரு

கிறது. இதுபற்றியே சிதை இராமனைப் பிரியாமல் காடுவந்தாள் என நாம் முன் குறித்தது இதனால் நிலை பெறுகிறது.

இலக்குவன் எப்படியாவது பரதனைக் கொன்றுவிடுவதாகக் கூறுகிறான். இதனால் இவன் பரதனைக் கொன்றுவிட்டால் எப்படியாவது தான் பட்டத்துக்கு வந்துவிடலாம் என எண்ணுகிறான். இராமன் மகா சூதனென்பதும் அவன் எவ்வாறாவது பரதனை ஏமாற்றி அரசைக் கைக்கொள்வதற்கு வழி காட்டுக்குப்போவதே எனத் துணிந்து காடுபோந்தனனென்றும் முன் கூறினோம். அவன் இலக்குவனுடைய தந்திரத்தை உடனே அறிந்து "முன் தந்தையைக் கொல்வேனென்றாய், இப்போது அண்ணனைக் கொல்வேனென்கிறாய். உனக்கு அரசாட்சி வேண்டுமென்று விரும்புகின்றாய் போலும்!" என்று மிகவும் உண்மையாக வினவுகிறான். தீயவனாகிய இலக்குவன் தனது சூதை இராமன் உணர்ந்து கொண்டது பற்றி வெட்கி, உடனே பேச்சை மாற்றி 'நமது தந்தை வந்தாலும் வரலாம்' என்கிறான். இத்திய மதியனை என் செய்வது? இராமனுக்கு இலக்குவனுடைய தீயசிந்தை நன்றாகத்தெரியும். அதனாலேயே "முன்னால் தந்தையைக் கொன்று அரசைப்பெறலாமென்றாய்" என்கிறான். இதனால் இலக்குவன் முன்னர் கோசலை முன்னிலையில் "அண்ணா! நீ அரசைக் கைப்பற்று. உனக்குப் பிரியமில்லையானால் நான் அரசாட்சியைப் பெறுகிறேன்" என்று சொல்லிய பேச்சை இராமன் மறவாமல் நினைத்திருந்தது விளங்குகிறது. அயோத்தியாகாண்டம் சருக்கம் இருபத்துமூன்றில் இராமனை நோக்கி இலக்குவன் "இராஜ்யம் அடிக்கடி மாறுமென்று தங்களுக்குச் சந்தேகமுண்டாகி அதனால் தங்களுக்கு இராஜ்யம் வேண்டாமென்றால் சமுத்திரத்தை அதன் கரைகாப்பதுபோல நான் இந்த இராஜ்யத்தைக் காப்பாற்றுவேன். இப்படியே சபதம் செய்கிறேன்" என்றுகூறிய செய்தி காணப்படுகிறது. இவ்விடத்து நாம், முன் 23-12-28ல் வெளிவந்த எட்டாம் கட்டுரையிலுள்ள பின்வரும் குறிப்பை அறிஞர் சிந்தித்து உண்மையுணருமாறு மறுபடியும் கீழே குறிக்கின்றோம். அது வருமாறு:—

"தந்தையைக் கொன்றேனும் அரசைக் கைப்பற்ற வேண்டுமென்பதே அவனுடைய கேவலமான எண்ணமாக இருக்கிறது.

இவனைப்போலும் பிள்ளைகள் வேண்டுவது அவசியமே. இராமனுங் கூட அவனை நோக்கி 'நமது தகப்பனாராயிருந்தாலும் அவரைக் கொன்று நாடாளுவோமென்ற கேவல புத்தியை விட்டுவிடு' என்று கூறுகிறான். இலக்குவன் இவ்வளவோடு நின்றதாகத் தெரியவில்லை. இலக்குவனுடைய பேராசை அதன் மேலும் அளவுகடந்து செல்லுகிறது. அவன் 'அண்ணா! தசரதனையும் கைகேசியையும் காட்டுக்கனுப்பி உமக்கு அரசைத் தருகிறேன். அரசாட்சி அடிக்கடி மாறுமென்று தங்களுக்குச் சந்தேக முண்டாகித் தங்களுக்கு அரசாட்சி வேண்டாமென்றால் நானே அரசாட்சியை ஏற்றுக்கொண்டு நாட்டைக் காப்பாற்றுவேன்' என்று கூறுகிறான். இதனால் அவன் உள்ளக்கிடை இதுவென விளங்குகிறது. இராமன் தனக்கு அரசாட்சி கிடைக்கவில்லையென்ற கவலையாலோ, அல்லது உள்ளபடி உலகத்திலுள்ள வெறுப்பாலோ அரசாட்சி வேண்டாமென்றால் தானாவது அதைக் கைப்பற்றிக் கொள்ளலாமென்ற கெட்ட எண்ணம் இலக்குவனிடமிருந்ததாகத் தெரிகிறது. இதனால் அவன் தான் இராமனை அணுகியிருந்து எப்படியாவது ஒரு காலத்தில் தானே அரசனாக வரலாம் என்ற பேராசையுடையவனாக இருந்தானென்பது புலனாகிறது".

இவன் இராமனைக் காட்டில் கொன்று அரசு பெறவும் எண்ணமுடையவனாயிருந்திருக்கும் அவ்வளவு கெட்டவன் என்பது குகன் இலக்குவனைச் சந்தேகித்ததிலிருந்து தெளிவாகிறது. இலக்குவனைப்போலும் கொடிய பாதகருமுளரோ? இனி கம்பர் புரளியைக் காண்பாம்.

வால்மீகி, பரதன் வந்ததையறிந்த குகன் தன் சேனையை எச்சரித்து காணிக்கையோடும் அவனைக் காணவந்ததாகவும், சுமந்திரன் அவனை இராமனுடைய உயிர்த்தோழனெனவும், இராமனிருக்குமிடமறிந்தவனெனவும் பரதனிடம் கூறியதாகவும், குகன் வந்துபணிந்து பரதனை எதிர்கொண்டழையாமைக்கு மன்னிக்கவேண்டி அன்றிரவை விருந்துண்டு கழிக்கக் கேட்டுக்கொண்டதாகவும் கூறுகிறார். கம்பர் இதற்குமாறாக நாடகம்போலக் கதையையே மாற்றுகிறார். அவர், குகன் தென்கரையில் நின்று பரதன் வருவதைக்கண்டு மிகச் சினங்கொண்டு தன் வீரரோடும் வீரம்பேசி நின்றதாகவும், அவன் நிற்பது

கண்ட சுமந்திரன் இராமனுடைய உயிர்த்தோழன் அவன் எனக் கூறியதாகவும், உடனே பரதன் அவனைத்தானே வலியச் சென்று காணவேண்டுமென்று தம்பியோடும் கங்கைக்கரையில் சென்று நின்றதாகவும், குகன் அவனைப் பார்த்து இராமனைப்போல மரவுரியுடுத்திருந்ததோடு துக்கமுகத்துடனிருந்ததை யறிந்து துணுக்குற்று வில்லையெறிந்து தனியே ஒரு தோணியேறி வந்து பரதனைப் பணிந்ததாகவும், பரதனும் எதிர் பணிந்ததாகவும் கூறுகிறார். கம்பர் குகனைத் தென்கரையில் நிறுத்தி வடகரைக்குக் கொண்டு வந்ததை நோக்க அவனூர் தென்கரையிலேயே இருந்ததாக மயங்குமாறுள்ளது. அவனுடைய ஊர் உண்மையில் வடகரையிலேயே இருந்தது. குகன் இலக்குவனைச் சந்தேகித்த செய்தியைக் கம்பர் முற்றிலும் மறைத்தார்.

இவ்விடத்திலே கம்பர் மிகவும் பிழைபட்டார். என்னை? சுமந்திரன் பரதனிடம் குகன் இராமனுக்கு உயிர்த்தோழனெனக் கூறினானெனக் கூறுகிறார். இராமன் குகனோடு அப்போதுதான் பழகுகிறானென்பது போலக் கதையைக் கூறிவரும் கம்பர், இராமனுக்கும் குகனுக்கும் நேர்ந்த நட்பைச் சுமந்திரன் அறிந்தவாறு கூறாமல் அவனை அயோத்திக்கு அருகிலிருக்கும் சோலையிலிருந்தே பிரித்துவிட்டு இவ்வாறு கூறுவரேல், அது இவருடைய மறதியையே காட்டும். மிகவும் ஞாபக வல்லமையுடையவராகச் சொல்லப்படும் கம்பர் இவ்விடத்து தாம் முன் கூறியதை முற்றிலும் மறந்துவிட்டு, வால்மீகி கூறிய கதையை, அதாவது கங்கைக்கரை வரை சுமந்திரன் இராமனுடன் சென்று அவனைப் பிரிந்த பின்னரும் சில நாளிருந்து மீண்ட கதையை தாம் மாற்றிவிட்டதை உணராமல் இங்கே திடீரெனத் தம்மையும் மறந்து இராமனுக்கும் குகனுக்கும் உள்ளநட்பைச் சுமந்திரன் கூறியதாகக் கூறுகிறார். இப்பிழைக்கு யாதொரு சமாதானமும் கூறவே முடியாது. அறிஞர் இதனைச் சிந்தித்துக் கம்பர் பிழையைத் தெளிவார்களாக.

கங்கையைத் தாண்டும்போதுதான் முதன்முதலாகக் குகன் தசரதனுடைய தேவியரைக் கண்டதாகவும், குகன் அவர்களை வினவ பரதன் அவர்களை ஒவ்வொருவராகச் சுட்டிக்காட்டியதாகவும் கூறுகிறார் கம்பர். வால்மீகியோ, பரதனும் குகனும் சந்தித்த அன்றே

அவன் அவர்களிடை இராமனுடைய வரலாறு கூறியதாக விளம்புகிறார். மேலும் குகன் அவர்களை யாரென வினவியதாகவாவது பரதன் அவர்களை இன்னாரெனக் குறித்துக் கூறியதாகவாவது வால்மீகி கூறவேயில்லை. அவர்களை இன்னாரென அறிய வினவியவன் பரத்துவாச முனிவனெனவும், அவனிடமே பரதன் அவர்களை இன்னாரெனக் கூறியதாகவும் அவர் கூறுவர். அவ்வரலாற்றை வேறு படுத்தினர் கம்பர்.

கோசலையை இன்னாளெனப் பரதன் கூறியபோது குகன் அவளடி வீழ்ந்ததாகவும், அவள் இவன் யாரென வினவியதாகவும், அவன் இராமனுக்கு இளையவன் எனக்கும் தம்பியர்க்கும் மூத்தவன் என்று விடைபகர, உடனே கோசலை 'இராமன் காடேகியதும் நலமே யாயிற்று, எனக்கு முன் மைந்தர் நால்வரோடும் இம்மைந்தனையும் பெற்றேன். ஐவீரும் ஒருவீராய் அகலிடத்தைக் காத்தீர்' என மகிழ்ந்துக் கூறியதாகவும் கம்பர் புதுக்கதைகட்டுகிறார். இவ்வாறு கோசலை வாயில் இச்சொற்களையேற்றித் தீயவளாகிய அவளை உலகினர் மிக நல்லவளென நினைக்குமாறு செய்யவே இவர் இவ்வாறு கதையை மாற்றிப் புதுவது புனைகிறாரென்பது வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றது. தீயவளாகிய கோசலையை இவ்வாறு உயர்த்திக் கூறிய கம்பர் அடுத்த கவியில் கைகேசியை மிக இழிகுணத்தளாகக் காட்டி மகிழ்கிறார். இவர்தம் தீய மகிழ்ச்சி மிக அழகிதே. இத்தீயவர் கவியையும் அறிஞர் சிலர் உண்மையுணராது பாராட்டிப்படிக்கின்றனர்.

பரதன் சோலையை விட்டுப் புறப்பட்டபோது இராமன் அங்கிருந்து நடந்து வந்ததைபுணர்ந்து தானும் காலால் நடந்து வந்தனனென்று கூறியதற்கேற்ப கங்கையைவிட்டுப் புறப்பட்டபோதும் காலாலேயே நடந்து போயினன் என்கின்றார் கம்பர். உண்மை ஈதன்று. பரதன் இராமனைக் காணும் வரை தேரிலேயே சென்றதாக வால்மீகி கூறுகிறார்.

பரத்துவாசன் விருந்திலே விருந்தினர் புலாலருந்தி சாராயங்கள் பலவற்றைக் குடித்ததையும் பலவகைப்புலால் மலைமலையாகக் குவிந்திருந்ததையும் பிற ஆபாசங்களையும் கம்பர் மறைத்தார்.

இராமன் சீதையோடு கொஞ்சிக் குலாவி நீர்விளையாடி தான் சுவைத்துப்பார்த்த இனிய புலாலை அவளுக்கூட்டிய வரலாற்றை யெல்லாம் கம்பர் மறைத்ததோடு நில்லாமல், பரதனைக் கொல்லத் துணிந்த இலக்குவனை அரசாட்சி விருப்புடையனென இராமன் கண்டித்ததையும், தன் குற்றம் வெளிப்பட்டதுணர்ந்த இலக்குவன் நாணிப்பேச்சை மாற்றப்பார்த்ததையும் முற்றிலும் மறைத்துவிட்டார் கம்பர். இவ்வரலாறுகளையெல்லாம் தமிழ் உலகினர் உணர்ந்தால் உண்மையுணர்ந்து இழிதொழிலிராமனையும் பாதகனாகிய இலக்குவனையும் வெறுத்து இகழுவரன்றோ? அது கோடாரிக்காம்பாகிய கம்பர் கருத்து மாற்றத்தாலல்லவா? அதனாலேயே அவைகளை மறைத்து இலக்குவனையும் இராமனையும் மிக நல்லவர்களாக இவர் காட்டுகிறார்.

---

## திரு. பாவலரவர்களுக்கு ஐய வினா.

ஐயா, தாங்கள் 'குடி அரசு' ப் பத்திரிகையில் தொடர்ச்சியாக எழுதிவரும் இராமாயணக் கட்டுரையில் கண்டுள்ள விஷயங்கள் பெரும்பாலும் எனக்கு உடன்பாடாயிருந்தாலும் சில ஐயங்கள் நிகழ்வதால் ஒரு ஐயத்தை மாத்திரம் வினாவாகத் தங்கள் கவனத்துக்குக் கொண்டுவரத்துணிவு கொண்டுள்ளேன்.

கேகய நாட்டரசன் மகளாகிய கைகேசியைத் தசரத மன்னருக்கு மணஞ்செய்யப் பேசுங்கால் அரசன், மன்னனுக்காக மணம்பேச வந்தவர்களை நோக்கி "நமது மன்னருக்கு மூத்த மனைவியர்களிருக்கிறார்கள். அவர்களிலும் மூத்தவள்பால் பிறக்கும் புத்திரனுக்கே அரசுரிமையாகுமே தவிர எனது புத்திரியின்பால் பிறக்கும் புத்திரனுக்குப் பட்டம் (அரசுரிமை) இல்லையாகையால் பெண்தர இசையே" னென்று மொழிந்தது தெரிந்த தசரதன், தனக்குக் கைகேசியை மணஞ்செய்துக் கொடுத்தால் அவள்பால் பிறக்கிற குழந்தை (புத்திரனு)க்கே அரசுரிமை அளிப்பதாக வாக்குறுதி செய்ததின்பேரில் கைகேசிக்கும் தசரதனுக்கும் மணம் நடந்ததாயும் இந்த நடவடிக்கைகள் வசிஷ்டருக்கும் சுமந்திரருக்கும் தெரியுமென்றும் தங்கள் ஆராய்ச்சியில் முடிவுகட்டியிருக்கிறீர்கள்.

இதனுல் கல்யாணம் நிறைவேறின பின் மக்கட்பேற்றுக்காக அஸ்வமேதயாகம் பண்ணினுர்களென்றும், அதன் பின்னர் இராமன் பரதன் இலக்ஷ்மணன் சத்துருக்னன் முதலிய நாலுமக்களேப் பெற்ருர்களென்றும் தெரிந்தாலும் அஸ்வமேதயாகம் கைகேசியைக் கல்யாணம் செய்து எவ்வளவு ஆண்டுகளுக்குப்பின் என்பது நிச்சயமாகத் தெரியவில்லே.

தங்கள் கட்டுரையில் கைகேசிக்கும் பரதனுக்கும் மேற்குறித்துள்ள தசரதன் கொடுத்த வாக்குறுதி தெரியவராது என்றும், வாக்குறுதிப்படி அரசுரிமை பரதனுக்குரித்தாயுள்ளதை அந்த வழியின்றி வேறு வழியில் தசரதனிடம் பெற்று பரதனுக்கு அரசுரிமையடையச்செய்தாளென்றும், முன் தான் கொடுத்த உறுதிமொழிப்படி அரசுக்குரிமையுள்ள பரதனுக்கு வேறு வழியிலாவது தன்னிடமிருந்து அரசைப் பெற முயற்சித்த கைகேசியைத் தசரதன் மனம் போனவாறு வருத்தமாக இழிமொழிகளால் பேசியும் எப்படியும் கடைசிவரை இராமனுக்கு அரசுரிமையைக் கொடுக்க முயற்சித்தானென்றும், அதற்கு உடந்தையாக அடிமுதல் முடிவரை குருவான வசிஷ்டரும் மந்திரியான சுமந்திரரும் உண்மைவழிதப்பி இருந்தார்களென்றும், ஆதலால் அவர்கள் மூவரும் இழிதகைமையாளர்களென்றும் பல இடங்களில் எடுத்துக்காட்டியிருக்கிறீர்கள்.

மேற்சொல்லிய வாக்குறுதி கைகேசிக்கும் பரதனுக்கும் அவர்கள்பால் அன்புகொண்ட அயோத்திவாழ் மக்களுக்கும் தெரியாதிருக்க முடியாது என்பதே நமக்குள்ள உறுதி. இதுவிஷயமாகத் தங்கள் கட்டுரையில் மேற்கண்டவர்களுக்குத் தெரியாமலிருப்பதற்குச் சரியான காரணம் காட்டப்படவில்லே.

தங்கள் ஆராய்ச்சியில் சிறுசிறு வாக்கியங்களுக்கும் இடம் காலம் முதலிய பாகுபாட்டைக் கொண்டும், அறிவிற்கு எது சரியென்று ஒப்புக்கொள்ளலாமென்பதைக் கட்டுரை பார்க்கும் அறிவாளிகள் பலர் ஏற்கும்படியான வழியில் ,விரிவுரை செய்தும் ஆராய்ச்சிக்கு அரண்செய்துப் போகிற தாங்கள் இந்த இராமாயணக் கதைக்கே இதுதான் ஆரம்பம் என்று சொல்லும்படியான ஒரு இடத்தில் ஏற்படுகிற ஐயத்தைத் தாங்கள் தீர்த்துவைக்க முற்பட

வீர்களென்று எதிர்பார்த்து இந்த ஐயவினவைக் "குடி அரசி" ன் வாயிலாகத் தங்களுக்குத் தெரிவித்திருக்கிறேன்.

எழுதிய என்பால் காய்தல் உவத்தலின்றியும் ஐயந் தீர்த்துக் கொள்ள அவாவுற்ற அன்பனென்றும் கருதி அமைந்த விடையளிப்பீர்களாக.

மு. சண்முகம்.

---

## திரு. சண்முகம் அவர்களுக்கு மறுமொழி.

---

நண்பர் திரு. சண்முகம் அவர்கள் விடுத்த ஐயவினக்களைக் கண்ணுற்றேன். அன்புகூர்ந்து அயோத்தியா காண்டம் கட்டுரை பதினென்கைப் பார்க்க அவரை வேண்டுகின்றோம்.

---

# பதினென்காம் அத்தியாயம்.

---



பரதன் இராமனைச் சிரமத்துடன் இன்னானென வறிந்து அவனடியில் வீழ்ந்தான். பரதனை இன்னானெனச் சிரமத்துடன் அறிந்த இராமன் அவனைத் தூக்கி "குழந்தாய்! நீ ஏன் இங்கே வந்தாய்? உன்னைவிட்டுத் தந்தை பிரிந்திருக்கமாட்டாரே; ஆகையால் உன்னைப் பிரிந்ததால் அவர் இறந்துவிட்டாரா? அதனல் பகைவர்கள் உன்னிடமிருந்து நாட்டைப் பிடுங்கிக்கொண்டனரா? அல்லது குடிகள் உன்னிடம் அன்பு குறைந்து, கைகேசி என்னைக் காட்டிற்குப் போகச்சொன்னதற்காக உன்னை நகரத்திலிருந்து துரத்திவிட்டார்களா? அல்லது தந்தைக்குப் பணிவிடை செய்ய மனமில்லாமல் வந்துவிட்டனையா? தந்தை நலமே இருக்கிறாரா? அல்லது தம் வாக்கைத் தவறமுடியாததால் நேர்ந்த துன்பங்களால் பச்சாத்தாபமடைந்து அவருக்கு ஏதாவது

நோய் உண்டாயிற்று? உன் தாய் கைகேசி தன் எண்ணப்படி காரியம் முடிந்து சுகமாக இருக்கிறளா? நீ, உன் மனைவிகளை இன்சொற்களால் மகிழ்வித்து நலம்புரிகின்றனையா? அவர்கள் பிற ஆண்களுடன் கலந்துபேசாமல் மிகவும் பத்திரமாகப் பாதுகாக்கின்றனையா? அவர்கள் சொல்வதை உண்மையென்று நம்பாமலிருக்கிறயா? மிகவும் சஞ்சலமான தன்மையுடையவர்களாகையால் மறைபொருள்களை அவர்களுக்குச் சொல்லாமலிருக்கிறயா? உன் மனைவியர்கள் சம்போக சுகத்தைக் கொடுப்பதனுலும் நற்பிள்ளையைப் பெறுவதனுலும் பயன் படைத்திருக்கின்றனரா? என்று மடமடவென்று பரதனுடைய மறுமொழியை எதிர்பாராமலே பல கேட்டுக்கொண்டே போனன். பரதன் "மூத்த பிள்ளையாகிய உமக்கே அரசு உரியது. தந்தை உம்மைப் பிரிந்த கவலையால் நான் கேகய நாட்டிலிருக்கும்போதே உயிரை விட்டார். நானும் தம்பியும் உருத்திரகிரியைகள் செய்துவிட்டோம். நீங்கள் செய்யவேண்டும்" என்றன். இராமன் "தந்தையே இறந்தீரா? என் செய்வேன்? பிணச்செயல்களைப் பக்கத்திலிருந்து செய்த பரதனும் தம்பியும் நலம் பெற்றனர்." என்று கதறினன். சுமந்திரன் அவர்களை ஆற்றங்கரைக்கு அழைத்துப் போனன். இராமன் தம்பியோடும் தண்ணீரில் இறங்கிக் குளித்துத் தண்ணீரைக் கையிலெடுத்துக்கொண்டு தந்தையே, நாங்கள் கொடுக்கும் இந்தத் தண்ணீர் தங்களைச்சேர்ந்து உமக்கு மகிழ்ச்சியைத் தரட்டும்' என்று தர்ப்பணம் செய்தான்.

பின் அவன் குடிசைக்கு வந்து தம்பிமார்களைப் பற்றிக்கொண்டு அவர்களுடன் அலறி அழுதான். அது கேட்டுப் பரிவாரங்கள் அங்கே வந்து சேர்ந்தன. வசிட்டன் அரசன் மனைவியரை அழைத்து வந்தான். கோசலை சுமத்திரையையும் மற்ற அரசமனைவியரையும் பார்த்து இராமன் தசரதனுக்குத் தர்ப்பணம் பண்ணியிருக்கும் இடத்தில் புலம்பினள். அவள் "இதோ புங்கைப் பிண்ணுக்கை இராமன் பிண்டமாக வைத்திருக்கிறன். இதை மன்னர் பிரானுகிய தசரதர் எப்படி உண்பார்?" என அலற தசரதனுடைய மனைவியர் அனைவரும் அவளைத் தேற்றினர்கள். இராமன் தன் தாய்மார்கள் எல்லோரையும் தனித்தனி வணங்கினன். அவர்கள் அவனைக்கண்டு அழுதனர். இராமன் பின் வசிட்ட முனிவனைக்கண்டு வணங்கி அருகில் உட்கார்ந்தான். அனைவரும் சூழ இருந்தார்கள்.

இராமன் தன்னை அழைத்துப்போகவே பரதன் வந்திருக்கிறான் என்பதையுணர்ந்து அவன் வந்தகாரணம் வினவினன். பரதன் "பாவியாகிய கைகேசி சொல்லைக்கேட்டு உமக்கு உரிய அரசை அறிவில்லாமல் தசரதர் எனக்குத் தந்து விட்டார். நீர் வந்து முடிசூட்டிக்கொள்ளவேண்டும். உம்மை அழைத்துப்போகவே நமது தாய்மார்களெல்லாரும் வந்திருக்கிறார்கள்" என்றான். இராமன் "உன்னைப் போலும் உத்தமன் நாட்டுக்கு ஆசைப்பட்டு அண்ணனுக்குத் தீங்கு செய்வானே? இருந்தாலும் தந்தையின் கட்டளையின்றி நான் எதையும் ஏற்றுக்கொள்ளேன்" என்று புகன்றான்.

மறுநாள் காலையில் பரதன் "நீர் கொடுத்த அரசை நான் உமக்குத் திரும்பக் கொடுக்கிறேன். கைகேசியைச் சமாதானப்படுத்தியிருக்கிறேன். அந்தப்புரப் பெண்கள் களித்து உம்மை உபசரிக்க நீர் முடிசூடும்" என்று வேண்டினன். அதற்கு இராமன் "நமது தந்தை கட்டளையை நாம் மீறுதல் கூடாது. ஆதலின் நீ கவலைப்படாமல் அயோத்தி சென்று நாட்டை ஒப்புக்கொள்" என்றனன். பரதன் "நமது இறந்த தந்தையைப்பற்றிக் குற்றம் சொல்லக்கூடாதுதான். ஆனால் எவன்தான் ஒரு பெண்ணுக்காக நீதியை விட்டுக் கொடுத்துப் பாவியாவான்? மூத்தவராகிய உமக்கன்றோ நாடு? தந்தை பாவம் செய்தால் அதைத் தீர்ப்பது மகன் கடமையல்லவா? ஆதலின் நீர் வந்து உமக்குரிய நாட்டை ஒப்புக்கொள்ளும்" என்று மறுபடியும் வேண்டி நின்றான். இராமன் அதற்கு இணங்காதது கண்டு தாய்மார்களும் ஏனையோரும் இராமனை வேண்டினார்கள்.

அப்போது இராமன் "பரதா! நமது தந்தை உனது பாட்டனாராகிய கேகய மன்னரிடம் கைகேசியிடம் பிறந்தவனுக்கே அரசாட்சியைக் கொடுக்கிறேனென்று இந்த சுல்கத்தை பிரதிக்ஞை செய்தனர். மேலும் தேவாசுரப் போரில் கைகேசிக்கு இரண்டு வரங்களையும் தந்தார். பிறகு உன் தாய் இரண்டு வரங்களைக் கேட்க அதன்படி உனக்கு நாட்டையும் எனக்குக் காட்டையும் தந்தார் தசரதர்; ஆதலின் நமது பிதா கைகேசியிடத்தில் பட்டிருக்கிற கடனை நீ எனக்காகவாவது தீர்க்கவேண்டும். நீ நாடாள் நான் காடாள்கிறேன். நீ மக்களை ஆள், நான் மிருகங்களை ஆள்கிறேன். நீ குடை நிழலிலிரு, நான் மரநிழலிலிருக்கிறேன்" என்றனன். அவ்வேளையில்

சாபாலி முனிவன் "இராமா! யார் யாருக்குத் தந்தை? இவ்வுடலுக்குக் காரணம் சுக்ல சுரோணிதங்களே. அதிலும் ஒருவாறு உடலுக்குக் காரணமான தசரதருடல் பிணமாகி ஐந்து பூதங்களிலும் கலந்துவிட்டது. ஆதலின் நீ தந்தை சொற்படி நடக்கிறேனென்பதில் பயனில்லை. அரசாட்சியை ஏற்றுக்கொள். மேலும் செத்தவர்களுக்குத் திதி முதலியவை செய்கிறார்கள். இதனாலென்ன பலன்? இங்கிருப்பவரில் அவர்கள் உணவுக்குக் கையேந்தி நிற்பதைக் கண்டவர் யார்? திதியைச் செய், இதைச் செய், அதைச் செய் சுவாமிக்குப் பணத்தைக் கொடு என்று பணம் தேடுவதற்குச் சாமார்த்தியமான புத்திசாலிகள் தமக்கு வழியாக இந்த நூல்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். செத்தவனால் என்ன தின்ன முடியும்? ஒருவன் உண்ணும் உணவு மற்றவனுக்குச் சேர்வதாக இருந்தால் வழிப்பயணம் போவானுக்கும், அயலூரிலிருக்கும் நமது நண்பனுக்குமாக நாம் இங்கு உண்ணலாமே? அதனால் அவர்களுடைய வயிறு நிரம்பவேண்டுமல்லவா? அப்படி நிரம்புவதில்லை. உயிரோடிருப்பவர்கள் நிலையே இவ்வாறிருக்க செத்தவனுக்கு அது எவ்வாறு உதவும்? ஒரு நாளும் உதவாது. ஆதலின் நீ நாட்டை ஒப்புக்கொள்" என்று கூறினன்.

இராமன் அது கேட்டு "நீர் கூறுவது செய்யத் தக்கதுபோலத் தோன்றினாலும் செய்யத்தகாததே. நான் அரசேற்கேன் எனச் சத்தியம் செய்துவிட்டு எவ்வாறு தவறுவேன்? என்னை உலகம் ஒப்பாது. இவ்வளவு கேவலமான நாத்திக புத்தியுடைய உம்மை வைத்திருந்த என் தந்தையின் செயலை நான் மிகவும் இகழ்கிறேன். நான் வாக்குறுதி செய்தபோது கைகேசியும் மகிழ்ச்சியடைந்தாள். வேதத்துக்கு உடன்பாடில்லாத உம் சொல்லை நான் வெறுக்கிறேன்" என்றனன். முனிவன் எப்படியாவது இராமனை இணங்கவேண்டுமென்றே அவ்வாறு கூறியதாகவும் உண்மையில் வேதத்தில் தனக்குப் பற்றுண்டென்றும் கூறினன். வசிட்டன் "சாபாலி சிறந்தவ" னென்றுக் கூறி இராமனுடைய குல வரிசையை யெடுத்துச்சொல்லி மூத்தானே பட்டத்துக் குரியவனாதலால் அரசேற்க வேண்டினன். இராமன் "ஆசிரியனிலும் தந்தையே சிறந்தவனாதலால் தந்தை கட்டளைப்படி காட்டிலேயே இருப்பேன்" என்றான். உடனே பரதன் குடிசை வாயிலில் தருப்பையை விரிக்கும்படி சுமந்திரனிடம்

சொன்னன். அவன் தாமதிக்கவே தானே விரித்துப் படுத்துக் கொண்டு பரதன் "இராமன் அயோத்தி திரும்பும்வரை இங்கேயே படுத்திருப்பேன்" என்றான். இராமன் அச்செயலைக் கண்டித்தான். உடனே பரதன் குடிகளைப்பார்த்து இராமனை வற்புறுத்த ஏவினன். அவர்கள் "இராமன் சொல்லுவது சரியென்று எங்களுக்குத் தெரிகிறது, ஆகையால் அவனை வற்புறுத்துவது கூடாது" என்றார்கள். பரதன் எழுந்து "இந்நாட்டையான் விரும்பவில்லை, எனக்குப் பதிலாக இராமன் நாடாளட்டும் நான் அவனுக்காகக் காட்டில் வாழ்கிறேன்" என்றான். இராமன் உடனே "தசரதர் செய்தது சரியே. பரதன் மேலானவனென்று எனக்குத் தெரியும். நான் பதினன்காண்டுகள் காட்டில் வாழ்ந்தபின் அயோத்திக்கு வந்து முடிசூட்டிக் கொள்ளுகிறேன்" என்றனன். அங்கிருந்த முனிவர்களும் அது சரி என்றனர். பரதன் திரும்பவும் இராமனை அப்போதே வர வேண்ட இராமன் கண்டிப்பாக மறுத்துரைத்தனன். பரதன் பாதுகைகளில் இராமனைக் கால்வைக்கச்சொல்லி தூக்கிக்கொண்டு, தான் அயோத்தியின் வெளியிலிருந்து பதினன்காண்டுகளும் பாதுகையை வைத்து நாடாளுவதாகவும், அக்கெடுக்கழிந்த மறுநாள் இராமன் வராது போனல் தான் தீயில் விழுவதாகவும் கூறினன். இராமன் அதற்கிசைந்து அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பினன். பரதன் பரிவாரங்களுடன் புறப்பட்டு பரத்துவாச முனிவனைக் கண்டு நடந்ததைப் புகன்று, சிருங்கபேரபுரத்தையும் கடந்து அயோத்தியை அணுகினன். பின் அவன் அயோத்தியில் நுழைந்து தசரதனுடைய அரண்மனையிற்புகுந்து கவலையுடன் பார்த்தான், அவன் தன் தாய்மார்களை அங்கேவிட்டு, நந்திக்கிராமத்துக்கு வந்து பாதுகைக்கு முடிசூட்டி நாடாண்டு இராமன் வரும்நாளை எதிர்பார்த்திருந்தனன். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

தந்திரசாலியாகிய இராமன் தசரதனல் பட்டத்துக்குரியவன் பரதனே என்பதையறிந்தும் தனக்கு நாடுதர முயன்ற தசரதன் சூழ்ச்சியில் இணங்கி ஈடு பட்டனனெனவும், உண்மையறியாதவளேனும் கைகேசியால் அச்சூழ்ச்சி தற்செயலாகத் தடைப்பட்டதையுணர்ந்த இராமன் தனக்கு நாடு கிடைக்கவேண்டுமேல் அப்போது காடுபோவது தான் அதற்குவழி, ஏனெனில், இவர்களுடையசூழ்ச்சி வெளிப்படில் உலகம் அத்திய செயலுக்கு இணங்காதெனத் துணிந்

தனனெனவும், பின் இலக்குவனும் தசரதனும் தடித்தனத்தால் நாடுபெறுக என ஏவியும்கூட அதற்கு அது வழியன்றென நன்குணர்ந்த இராமன் இணங்காமல் காடுபோந்தனனெனவும், அவன் முதன்முதல் கைகேசியிடத்திலும் பின்னர் தனித்தபோதும் அரசாட்சியில் மிகவும் ஆவல் காட்டினனென்பதும் முன்னர் தெளிவாக நிலைநாட்டினேம். இக்கட்டுரையில் இராமனுடைய ஒப்பற்ற சூழ்ச்சி எவ்வாறு பலனளித்ததென்பதை இப்போது எடுத்துக் கூறுவோம்.

தசரதன் கைகேசியை மணம் செய்யும்போது அவள் சிறுபெண்ணாக இருந்தாள். அவன் கேகய மன்னனிடம் அவளுடைய மகனுக்கே அரசாட்சியைத் தருவதாக வாக்களித்தபோது அவ்வாக்கை யுணர்ந்தார் ஒரு சிலரே. அவர்களுள் கேகயன், தசரதன், சுமந்திரன், வசிட்டன் முதலியோரே முக்கியமானவர்கள். தசரதனுக்கு நெடுநாள் பிள்ளைகளே இல்லாதொழிந்தனராக இவ்வாக்குறுதியை உணர்ந்த சிலரும் அதனை மறந்தவராயினர். ஆனல் கேகயனுவது தசரதன், சுமந்திரன், வசிட்டனுவது இதனை மறப்பதற்கு ஏதுவேயில்லை. தசரதன் பிள்ளைகளைப் பெற்றபோதும் அவனுக்குப் பரதனுக்கே நாட்டைக் கொடுக்கவேண்டுமென்ற எண்ணமிருந்திருக்கலாம். ஆனல் அவனுக்கு இராமனிடத்தில் காதல் வீழ்ந்தபோழ்துதான் அவனுடைய மனம் மாறத்தொடங்கி தன் மனம்போலிசைந்து நடக்கும் தலைமகனுக்கே நாட்டைத் தரவேண்டுமென்ற எண்ணம் உண்டாகிறது. அதனல் தசரதன் பரதனைக்கேகயம் போக்கி இராமனுக்கு முடிசூட்ட வேண்டுவன செய்கிறுன். இராமனும் பரதனை வஞ்சித்து நாடாள அவன் மனப்படி யொழுகுகிறுன். முடிசூட்டுக்கு முதல்நாள் இரவுகூட தசரதன் இராமனை யழைத்துப் பரதன் கேகயத்திலிருக்கும் வரைதான் இராமனுக்குக் கேடுவராது எனவும், என்றுலும் உண்மையுணர்ந்த நீதியாளர் இச்சூழ்ச்சியை யுணர்ந்து இராமனுக்குக் கேடுசெய்தலும் கூடுமெனவும், ஆதலின் எச்சரிக்கையுடனிருக்கவேண்டுமெனவும் எச்சரித்தனுப்புகிறுன். முடிசூட்டுச் செய்தியைக் கைகேசி யறியாவண்ணம் கூடியவரை அவன் மறைக்கிறுன். கைகேசி உண்மையை அறியாதவளேனும் எவ்வாறே மனம் மாறி கூனியின் சொற்படி சம்பரப்போரில் அவன் தந்த இரண்டு வரங்களால் பரதனுக்கு நாடும், இராமனுக்குப் பதினன்காண்டு காடும் கேட்டுப் பெறுகிறுள்.

"கைகேசி உண்மையை அறிவள், ஆனல் அதனல் தன் கணவ னுக்கு வரும் பழிச்சொல்லை நீக்குமாறு வேறு காரணம் காட்டித் தன் மகனுக்கு நாடு பெறுகிறுள்" என்று சிலர் கூறுவனவெல்லாம் புனைந்துரைகளே. அவை உண்மையற்றன. என்னை? கைகேசி அத்தகைய மனநிலையுடையவளெனின் தன் மனப்பான்மையைத் தன் கணவனிடம் கூறிச் சுலபமாக வெளிக்குத் தெரியாமல் பரத னுக்கு நாடு பெற்றிருப்பாள். அதற்காக இராமனைக் காட்டுக் கனுப்ப முயன்றிராள். தசரதனும் அவள் சொல்லுக்குக் கட்டுப்படா திரான். மேலும் தன் கணவனுடைய வஞ்சகச் செயல்களை அவள் அப்போது வேறு காரணங்காட்டி மறைத்தாலும் கேகயன் முதலி யோர் வரும்போது உண்மை வெளியாகாமற் போகாது. அப்போது உலகம் தசரதனுடைய வஞ்சனைக்காக அவனை இகழாதிராது. இச் சிறிய உண்மையை உணராதவாறு கைகேசி அவ்வளவு அறிவற்ற வளா? நுண்ணிய அறிவினளான கைகேசி தன் மகனுக்கு நாடு பெற வேண்டுமென்ற நோக்கத்திலேயே இரண்டு வரங்களையும் கேட்டனள். மேலும் தசரதன் தந்த வாக்குறுதியை அவள் அறிந் திருப்பளேல் உடனே அவள் தசரதன் சூழ்ச்சியைத் தன் தந்தைக் கறிவித்து வேண்டுவன செய்திருப்பாள். மற்றும் அவள் இராம னிடம் உண்மையைக் கண்டித்துக் கூறியிருப்பாள். உண்மைக்குக் கட்டுப்படாதிருக்க ஒருவராலும் முடியாது. குடிகள் அவ்வுண் மையையறிந்தால் இராமனுக்கு முடிசூட்ட ஒரு நாளும் இடங் கொடுத்திரார். பின்னர் இராமன் பரதனிடம் உண்மையை யுரைத்த போது பரதன் தன்னுடன் வந்த குடிகளை நோக்கி இராமனையழைக் கக்கூற அவர்கள் 'இராமன் கூறுகிறது சரியாகவே இருக்கிறது; ஆதலின் நாங்கள் இராமனை அழையோம்' என்று கண்டிப்பாகக் கூறியதை இக்கட்டுரையில் மலேயிடை விளக்கெனக் காண்கிறோம். ஆதலின் அவர்கள் முன்னரே இவ்வுண்மையை யுணர்ந்திருப்பின் தசரதனைக் கண்டித்துப் பரதனையழைத்து முடிசூட்டச் செய்திருப்ப ரன்றே?

கைகேசி தசரதன் வாக்குறுதியை உணர்ந்திருப்பளேல் பரதன் தன்னை இகழும்போது தான் மெய்மையை வழுவாது நடந்த சால்பினை அவனுக்கு எடுத்துக் காட்டியிருக்கத் தவருள். கைகே சிக்கு நியாயத்தை நிலைநாட்டித் தன்னுடைய கணவனை பழியற்றவ

ணுக்கவேண்டுமென்பதே நோக்கமாயிருக்குமேல் அவள் தசரதனைக் கண்டித்துக் கொடியவளென்ற பேரெடாமலே பரதனுக்கு முடிசூட்டி தசரதனை நல்லவனாக்கி யிருக்கலாம். தசரதனும் உண்மைக்குக் கட்டுப்படாதிரான். ஏதோ ஓர் சமயம் பெண்ணாகிய அவளுக்குக் கொடுத்த வரத்துக்குக் கட்டுப்படாதிருக்க இயலாத தசரதன் தன்னை யொத்த முடிமன்னனிடம் கொடுத்த வாக்குறுதியைத் தட்டி நடக்க ஆற்றலுள்ளவனாவானோ? மேலும் கேகயனிடம் வாக்குறுதி தந்திரானேல், அவன் கைகேசி கேட்ட வரங்களை மறுத்திருத்தலும் கூடும். இராமனிடமிருந்த பித்தால் தன்னையும் நிராகரித்து அரசைக் கைப் பற்றுமாறு இராமனைத் தூண்டுகிற தசரதன் தன்னையொத்த முடி மன்னனாகிய கேகயனிடம் செய்த வாக்குறுதியை எண்ணியிரானேல் அவன் கைகேசியைப் படாதபாடு படுத்தித் தன் எண்ணத்தைக் கட்டாயம் ஈடேற்றியேயிருப்பான். நேரில் வாக்குறுதி வாங்கிய கேகயன், சூழ்ச்சியை யறிந்தால் என் செய்வது? தனது குடிகளும், உலகமும் அறிந்தால் என் செய்வது? என்ற பெரிய அச்சமே தசரதனுடைய வாயையும் கையையும் கட்டுப்படுத்தி கைகேசி செய்த செயல்களையெல்லாம் வெறுப்புடன் பார்த்து வாளாயிருக்கச் செய்தது. இராமன் காடேகியவுடன் பரதனையழைத்து முடிசூட்ட வேண்டும். அப்போது கேகயனும் வருவான் சனகனும் வருவான், உடனே தசரதனுடைய இழி செயல்களையெல்லாம் உலகம் அறியும், அதனால் அவனை அனைவரும் நேரில் இகழ்ந்து நகையாடுவர் என்பதை நினைக்க நினைக்க தசரதனுடைய மனம் உடைவதாயிற்று. மேலும் தன் காதலுக்குரிய இராமனும் சுயநலம் கருதி தன் சொல்லுக்கெல்லாம் இணங்காமல் காடேகிவிட்டான். இவ்விருதுன்பங்களும் தசரதனுடைய மனதை முற்றிலும் உடைத்து விட்டதனாலேயே தசரதன் மாண்டு மடிகிறான்.

தசரதன் மடிந்தவுடன் அச்செய்தியை கேகய மன்னனுக்கு அறிவுறுத்த வேண்டுவது இன்றியமையாத கடமையாக இருக்க வழி வழி ஆசானும் ஆன்றமைந்த அறிவுடை முதியோனுமாகிய வசிட்டன் அக்கடமையைச் செய்யாமல் பரதனை மட்டும் உண்மையைக் கூறாமல் அழைத்துவரச் செய்கின்றனன். தசரதன் மாய்ந்த செய்தியைப் பரதன் கேகயத்திலிருக்கும்போது தெரிவித்தால் எவ்வாறாவது பரதன் தானே பிறப்பால் நாட்டுக்குரிய மன்னவன் என்

பதை அங்கே அறிந்து கொள்ளுவான், அதனுல் தசரதனும் தானும் செய்த சூழ்ச்சி நிறைவேருது போமெனவே வசிட்டன் அவ்வாறு செய்தனன். அதிலும் வசிட்டன் வெற்றி பெறுகிருன், உண்மை யுணராத சிறுவனுகிய பரதன் மூத்தவனுகிய இராமனே பட்டத்துக் குரியவனுயிருக்க தன் தாய் கைகேசி அநியாயமாக அவனே நாடிழக் கச் செய்ததோடு நில்லாமல் காட்டுக்கும் அனுப்பிவிட்டாளே என்று மனம் துடித்து உலகம் தன்னே இகழுமே, அதிலும் முடியும் சூட்டிக் கொண்டால் மிகவும் அதிகமாக இகழுமே என உண்மையாகவே உணர்கிருன். அதனுல் தகாத செயலேச் செய்த தன் தந்தையையும் தாயையும் இகழ்கிருன். தந்தை தப்பிதமான வழியில் நடந்தால் செம்மைப்படுத்த வேண்டியது மகனுடைய கடமையெனவும் அவன் கூறுகிருன். அவ்வாறே பரதன் இராமனே அழைத்துவந்து தான் கருதுமாறு அரசாள உரிய மூத்தவனுகிய அவனேயே அரசனுக்க முந்துகிருன்.

சூழ்ச்சியில் வல்லவனுகிய இராமன் இவ்வளவையும் எதிர் பார்த்தே முரட்டுத்தனமாக நாடுபெற ஏவிய தசரதனுடைய சொல்லேயும் தட்டி, நாட்டைப்பெற்று நிலேபெற வழி காடேகுவதே எனப் போகின்றனன். தான் எண்ணியபடி பரதன் தன்னே அழைத்துப்போக வருவதைக் கண்டு பெருமகிழ்ச்சியடைந்து இலக் குவனிடம் பரதன் வருவது தன்னே அழைத்துப் போகவே எனக் கூறுகிருன். பின்னுல் வருவதையெல்லாம் நன்முக எண்ணித் துணியும் தன்மையாளனுகிய இராமன் பரதனே எவ்வாறு கைவசப் படுத்தி நாட்டைப் பெறுவதெனத் தான் முன்னுல் ஆராய்ந்து வைத்தபடியே நடக்கிருன்.

பரதனிடம் வாக்கு வாங்கிக்கொண்டு பின்னர் உண்மையை அவனுக்கும் பிறருக்கும் உரைக்கவேண்டுமென்பது இராமனுடைய சூழ்ச்சி. பரதன் வந்தவுடன் அவனே நோக்கி இராமன் "நீ ஏன் இங்கே வந்தாய்? உன்னேப் பிரிந்தால் தந்தை இறப்பாரே! உன்னேப் பிரிந்து அவர் இறந்துவிட்டனரா? குடிகள் உன்னிடம் அன்பு குறைந்து நாட்டைப் பிடுங்கிக் கொண்டு கைகேசி என்னேக் காட்டுக் குப்போகச் சொன்னதற்காக உன்னே நகரத்திலிருந்து துரத்திவிட் டார்களா? அல்லது தந்தைக்குப் பணிவிடை செய்ய மனமில்லாமல் வந்து விட்டனேயா? உன் தாய் கைகேசி தன் எண்ணப்படி காரியம்

முடிந்து நலமாக இருக்கிறாளா?" என பரதனை மறுமொழி கூறுவதற்குக்கூட இடங் கொடுக்காமல் விடாது தொடர்ந்து பல வினக்களை வினவி பரதனுடைய மனதை மிகவும் புண்படுத்தித் துடிக்க வைக்கிறான். இவ்விடத்தில் மொழிபெயர்ப்பாளர் சீனிவாசய்யங்கார் குறிப்பு கவனிக்கத் தக்கது. அவை வருமாறு:—பக்கங்கள் 362, 363 "குடிகள் பரதனைத் துரத்தியிருந்தால் பரதனுடன் சைனியமும் பரிவாரங்களும் சுமந்திரரும் மற்றவர்களும் எப்படி வந்திருக்க முடியும்? பரதனைவிட்டுப் பிரிந்த துக்கத்தால் தசரதர் இறந்திருந்தால் அவன் கேகயத்துக்குப் போன உடனேயே இறந்திருக்கவேண்டும். தன்னை விட்டுப் பிரிந்ததால் அவருக்கு மரணம் நேரிடுமென்று இராமனுக்குத் தெரியாதா என்பதைக் கவனிக்கவும் ..............பரதனைப் பற்றி இப்படி இராமன் சந்தேகப்படுவதும் அதை அவனிடத்திலேயே சொல்லுவதும் ஆச்சரியமே................ இங்கே இராமன் கைகேசியைப் பற்றிக் குறிப்பிட்டு அழுத்திச் சொல்லுவது கவனிக்கத் தக்கது."

இதனை ஆராயுமிடத்து பரதனுடைய மனதைச் சுட்டுக் கைகேசியின் செயலில் தன்வெறுப்பைக் காட்டி விரைவில் பரதனிடமிருந்து நாட்டைத்தர வாக்கு வாங்கவே இராமன் இவ்வாறு பேசியவன் என்பதைச் சிறுவரும் அறியாதிரார். இல்லையென்றால் இராமன், பரதனோடு சுமந்திரனும் பெருஞ்சேனையும் வந்திருப்பதை அறிந்துகொண்டே அவனைக் குடிகள் நாட்டைவிட்டுத் துரத்திவிட்டனரா என்று வினவுவானா? இது ஒன்றே இராமனை வஞ்சகனென்று நிலை நாட்டுவதற்குத் தகுந்த சான்றாகுமன்றோ? பின் பரதன் தந்தையிறந்ததைக் கூறியது கேட்டுத் தண்ணீரிரைத்து வந்து தாய்மார்களும் சேனை முதல் யாவரும் வந்தபிறகு மறுபடியும் பரதனை எதற்காக வந்தனை என வினவினன் இராமன். பரதனோ, பட்டத்துக்கு மூத்தவனாதலால் உரிமையுடைய இராமனை அழைத்துப் போக வந்ததாகக் கூறுகிறான். இராமன் "உன்னைப்போலும் உத்தமன் நாட்டிற்கு ஆசைப்பட்டு அண்ணனுக்குத் தீங்கு செய்வானா? இருந்தாலும் தந்தையின் கட்டளையின்றி எதையும் ஏற்றுக்கொள்ளேன்." என்று பேசி நாட்டைத் திரும்பத்தர வாக்களிக்கும் நிலைமைக்குக் கொண்டு வருகின்றனன். இதனால் பரதன் அரசாள இராமனுக்கு ஒரு நாளும் எண்ணமிருந்திருக்காது என்பது வெள்

ளிடை மலையே யன்றோ? இன்னும் இதனால் பரதன் அரசாள்வ னேல் இராமனுக்குத் தீங்கு செய்தவனுவனென பரதனுக்கு இரா மன் எடுத்துக் கூறியவனுமாவான். பரதனும் இராமன் எதிர் பார்த்தபடியே உணர்ந்து "நீர் கொடுத்த அரசை நான் உமக்குத் திரும்பக் கொடுக்கிறேன். கைகேசியைச் சமாதானப்படுத்தி யிருக் கிறேன். அரசாளும்" என்று வாக்களித்து வேண்டுகின்றனன். இதனையே இராமன் எதிர்பார்த்தது. இராமன் கைகேசியிடம் வாக் களித்து அரசைப் பரதனுக்குத் தந்தை கைகேசியாலறிந்த பரதன் தனக்கு வந்த அரசாட்சியை திரும்ப இராமனுக்குத் தருவதாக வாக்களித்திருக்கின்றனன். இவ்வாக்கால் இராமன் அரசைத் தன்னதாக்கிக்கொண்டு திரும்பவும் தந்தை கட்டளையை மீறுதல் கூடாதென்று பாசாங்கு பண்ணுகிறான். பரதன் தசரதனை இகழ்ந்து மறுபடியும் இராமனை வேண்டுகின்றனன். தாய்மார்களும் குடிகளும் அவ்வாறே இராமனை வேண்டிக்கொள்கிறார்கள்.

இவ்வாறு தனக்கு மிகுந்த பலத்தைத்தேடி அணைபோட்டுக் கொண்ட இராமன் இதன் பின்னரே, தசரதன் கேகயமன்னனிடம் கைகேசிக்குப் பிறக்கும் மகனுக்கே நாடளிப்பதாக வாக்குறுதி செய்ததை மெல்லக்கூறுகின்றனன். இராமனுடைய வஞ்சகச் சூழ்ச்சிதானென்ன? இவ்வாறு கூறும்பொழுதே பரதனுக்கு வேறு வகையான உணர்ச்சி வராமலிருக்கும்படி "பரதா! நீ நாட்டை ஆள், நான் காட்டையாள்கிறேன்; நீ மக்களை ஆள், நான் மிருகங்களை ஆள்கிறேன்; நீ குடை நிழலில் இரு, நான் மரநிழலில் இருக் கிறேன்" என்று அவன் மனம் உருகுமாறு பலபட விரித்துரைக் கின்றான். இப்போது தான் வஞ்சகனாகிய வசிட்டன் இராமனை அரசேற்கவேண்டுகிறான். பரதனுக்கு இதையெல்லாம் பார்த்து எப்படியாவது இராமனை அப்போதே நாட்டுக்கழைத்துப்போக வேண்டுமென்ற உணர்ச்சியுண்டாகிறது. இராமன் வந்தால் தான் எழுந்திருப்பதாகக் கூறிக் குடிசைவாசலில் அவன் படுக்கிறான். இராமன் அதற்காகப் பரதனைக் கண்டிக்கிறான். பரதனுக்கு அத னால் உணர்ச்சி மிதமிஞ்சியெழக் குடிகளை நோக்கி இராமனை வற் புறுத்தியழைக்க வேண்டுகின்றனன். பரதனே பிறப்பால் அர சாட்சிக்குரியவ னென்பதை உணருமுன் இராமனை வேண்டி வற் புறுத்திய குடிகள், உணர்ந்தபின் பரதனுடைய வேண்டுகோளுக்கு

"இராமன் வரமாட்டேனென்று கூறுவது நியாயமே. ஆதலின் நாங்கள் அவனை அழைக்கமாட்டோம்" என்று கூறி மறுத்துவிட்டனர். இவ்வாறு குடிகள் மறுத்ததை உணர்ந்த வஞ்சக இராமன் ஒருவேளை குடிகளின் கூற்றுப்படி இராமனை விட்டுவிட்டுத் தானே அரசாள எங்கே பரதன் ஒருப்பட்டுப்போய் விடுகிறானோ என்று மிக அச்சமடைகிறான். அதனால் உடனே பதறிப்போய் "நான் பதினான்காண்டுகள் காட்டில் வாழ்ந்தபின் நாட்டுக்கு வந்து முடி சூட்டிக்கொள்கிறேன்" என்று கூறிவிடுகிறான். பின் பரதன் இராமனை அப்போதே வரவேண்ட இராமன் மறுத்துரைக்கின்றனன். இராமன் அப்போதே வருகிறத்தற்கும் இணங்கியிருப்பான். ஆனால் உண்மையுணர்ந்த குடிகள் இராமனுடைய வஞ்சனையையும் தீய் சிந்தையையும் கண்டு உடனே இராமனுக்குத் தீங்கு விளைக்க முனைந்திடுவரோ என அஞ்சியே பின்னும் பதினான்காண்டு தந்தை சொற்படி காட்டிலிருந்து பின்னர் நாடேற்பதாக இராமன் கூறுகிறான். பின்னர் இராமன் ஆராய்ந்து செய்த சூழ்ச்சி அவனுக்கு அவன் எண்ணிய நலன் முழுதும் பயப்பதாயிற்று. முன் கூனி கைகேசியிடம் எடுத்துக்கூறியாங்கு இராமன் தன் அறிவுடைமையால் வாழ்வடைந்தான், பரதன் தன் அறிவின்மையால் நாடிழந்தான். அறிஞர் இதனை நன்கு சிந்தித்து உண்மையைக் கடைப்பிடிப்பார்களாக.

இராமன் முதலில் பரதனை நோக்கிக் கூறியபோது "உன் மனைவிமார்களை இன்சொற்களால் மகிழ்வித்து நலம்புரிகின்றனையா? அவர்கள் பிற ஆண்களுடன் கலந்துபேசாமல் மிகவும் பத்திரமாகப் பாதுகாக்கின்றனையா? அவர்கள் சொல்வதை உண்மையென்று நம்பாமலிருக்கிறாயா? மிகவும் சஞ்சலமான தன்மையுடையவர்களாகையால் மறைபொருள்களை அவர்களுக்குச் சொல்லாமலிருக்கின்றனையா? உன் மனைவியர்கள் சம்போக சுகத்தைக் கொடுப்பதனாலும் நற் பிள்ளையைப் பெறுவதனாலும் பயன் படைத்திருக்கின்றனரா?" என்று வினவுகிறான். இதனால் பரதனுக்குப் பல மனைவியரிருந்தனரென நாம் முன் எடுத்துக்காட்டிய உண்மை நிலைபெறுகிறது. மேலும் இராமனும் பல தாரங்களை உடையவனாக இருந்திருக்க வேண்டுமென்று ஊகிக்க இருப்பதோடு முன் இராமன் பலதார

கமனன் என்று எடுத்துக் காட்டிய உண்மையை நிலைநாட்டுவதாகு மெனவும் அறியலாம்.

மேலே இராமன் கூறிய கூற்று அவன் பெண்களைப்பற்றி எவ்வளவு இழிவான எண்ணம் வைத்திருந்தானென்பதையும் ஆரியர் எவ்வாறு பெண்களைப்பற்றிக் கருதினரென்பதையும் எடுத்துக் காட்டுகின்றது. பெண்களைப் பிற ஆடவருடன் பேசுதற்கேனும் இடந்தராது பாதுகாக்கவேண்டும். இல்லையானால் அவர்கள் பிற ஆடவரோடு வசப்பட்டுக் கூடிக் கணவனைக் கைவிடுதலும் கூடுமெனவும், பெண்கள் மறை (அந்தரங்கம்) காக்க வல்லமையில்லாதவர்களாகையால் அவர்களிடம் மறை கூறல் கூடாதெனவும், பெண்கள் பேச்சில் நம்பிக்கை வைத்தல் பிசகெனவும், பெண்கள் சம்போகிக்கவும் பிள்ளைபெறவும் மட்டும் உள்ள கருவிகளெனவும் இராமன் உண்மையாகவே நம்பியவனாதல்வேண்டும். ஆரிய மக்களிற் சிறந்தவனெனக் கருதப்படும் இராமனே இவ்வாறு கருதியிருப்பனேல் பிற ஆரிய மக்களுடைய கொள்கையைக் கூறவும் வேண்டுமோ? தமிழ் மக்களோ பெண்களுக்குச் சம உரிமை கொடுத்து நம்பிக்கை மிகக்கொண்டு நல்ல முறையிலே அவர்களை நடத்திவந்தவராவார். தமிழ்ப் புலவர் திருவள்ளுவரும்,

> "சிறைகாக்கும் காப்பு எவன் செய்யும் மகளிர்
> நிறைகாக்கும் காப்பே தலை" என்றருளினர்.

பெண்களை அடைத்து வைத்துச் சிறைக்காவலைப்போலக் காத்துவருவது மடமையேயென்றும், அவர்களுடைய நிறை அவர்களைக் காப்பதே சிறந்ததெனவும் தமிழ்மக்கள் உணர்ந்து ஒழுகிய பேரறிஞர். 'பெண்களுக்கு அவரவர்களுடைய முந்தானையே காவல்' என்று பழமொழியும் தமிழ்நாட்டில் வழங்கிவருகிறது. பல பெண்களை மணந்துகொண்டு அவர்களெல்லோரையும் காப்பதென்பது முடியாத காரியமே. ஒரு ஆண்மகன் பல பெண்களைக் கூடத் துணிவனேல் ஒரு பெண்மகள் பல ஆண்களைக் கூடத் துணியாமலிருப்பளோ? ஒருவன் ஒருத்தியையே காதலித்துப் பிற பெண்களைத் தாய்மார்களாகவும் உடன்பிறப்பாகவும் கருதுவனேல், அவளும் பிற ஆடவரைத் தந்தையாராகவும் உடன்பிறப்பாகவும் கருதி நடப்பாள். ஆண்மகன் பிழைபட நடந்துகொண்டு பெண்மகளை

மட்டும் அவள் விருப்பத்துக்கு மாறாகக் கட்டுப்படுத்த முனைவதி லும் மடமை வேறுளதோ? ஆண் மக்கள் பெண் மக்கள் சொல்லை நம்பாதிருப்பரேல் பெண் மக்கள் ஆடவர் சொல்லையும் நம்பார். நம் பிக்கையில்லாத இடத்து ஒற்றுமையோடு கூடிய இன்ப வாழ்வு எங் கிருந்து வரும். கலகமும் துன்பமுமே மிகுவனவாம். இத்தகைய தீய எண்ணங்களெல்லாம் தமிழ்மக்களிடை ஆரியர் கூட்டுறவா லேயே படிப்படியாக நுழைவனவாயின. இத்தீய எண்ணங்கள் ஒழிந்து ஒருவன் ஒருத்தியையும் ஒருத்தி அவ்வொருவனையுமே நம்பி வேறுபாடில்லாமல் வாழத்தொடங்கும்போதுதான் உண்மை இன்பவாழ்வு தோன்றுவதாகும். அறிஞர் அத்தகைய இன்ப வாழ்வை நம்நாடு அடைந்துவாழ வேண்டுமாறு முயன்று நலம்புரிய முன் வருவார்களாக.

இராமன் தசரதனுக்குத் தர்ப்பணம் செய்தபோது புரோகித ராகிய வசிட்டருதவியில்லாமலே தானே தண்ணீரைக் கோரிவிட்டுப் பிண்டமும் போடுகிறதாகத் தெரியவருகிறது. ஆரியருள் பின்னரே புரோகிதர் இன்றியமையாதவராயினர் போலும்!

சாபாலி முனிவன் கூறுவதை உற்று நோக்கினல் நாம் திதி கொடுத்தலைப்பற்றிப் போன கட்டுரையில் ஆராய்ந்த உண்மைகள் பல புலனாகின்றன. அறிஞர் சிந்தித்துத் தெளியுமாறு மறுமுறை யும் சாபாலி முனிவன் கூற்றைப் படிக்கவேண்டுகின்றோம். ஆத லின் அக்காலத்திலும் புரோகிதர்களுடைய புரளியை உணர்ந்த அறிஞர் இருந்தனரெனவும், அப்புரளிகளை விளங்க எடுத்து அவர்கள் கூறிவந்தனரெனவும் தெரியவருகிறது. புரோகிதராகிய வசிட்ட முனிவர் இதைக் கூறி இராமன் சாபாலியைக் கண்டித்தனனென வும் கூறுகிறார். இராமன் கண்டித்ததில் வெறும் பேச்சே உள தன்றி அறிஞர் ஒப்புக்கொள்ளத்தகுந்த காரணம் அதில் ஒன்றுமே காணவில்லை. சாபாலி தான் கூறியது பிழையென மன்னிப்புக் கேட்டதாக வால்மீகி கூறுவனவெல்லாம் மக்களை அறிவைக்கலைத் துப் புரோகித வசமாக்கும் படிற்றுரைகளே யாம். இனிக் கம்ப ருடைய புரளியைக் காண்போம்.

இராமன் ஏவலால் இலக்குவன் மரத்தின்மேலேறிப் பரதன் வருகையை யுரைத்ததாக வால்மீகி கூறக் கம்பரோ அவன் தானு

கவே ஒலிகேட்டு மலைமேல் ஏறிப்பார்த்து உண்மையுணர்ந்து குதித்தோடி வந்து இராமனிடம் கூறுகின்றனன் என்பர் கம்பர். பரதனைக் கண்டவுடன் இராமன் கூறிய வெறுக்கத்தகுந்த வரலாறுகளையெல்லாம் கம்பர் மறைத்தார். மேலும் சுமந்திரனோடு இராமன் ஆற்றுக்குப்போய் நீர்க்கடன் கழித்தனனெனவும் இராமனுடைய தாய்மார்களைப் பின்னர் வசிட்டன் அழைத்து வந்தனனெனவும் வால்மீகி கூற அதற்குமாறாக வசிட்டன் இராமனைத் தேற்றி அழைத்துச்சென்று புரோகிதனாக இருந்து தசரதனுக்குச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்வித்தான் எனவும் சுமந்திரன் இராமனுடைய தாய்மார்களை அழைத்து வந்தனனெனவும் கம்பர் நேர்மாறாகக் கூறுகிறார். இதனால் இவர் புரோகிதத்தை நிலை நாட்டவே இவ்வாறு கதையை மாற்றியவராவர். என்னே இவர் தம் இழிமதி இருந்தவாறு ?

தசரதன் செய்த வாக்குறுதியை இராமன் கூறிய பின்னரே பரதன் தனக்குரிய நாட்டை இராமனுக்குத் தந்ததாகக் கூறினனெனக் கம்பர் கதையைக்கூறி இராமனுடைய சூழ்ச்சிகளையெல்லாம் மறைத்து அவனை மிகவும் நல்லவனைப்போலக் காட்டுகிறார். மேலும் பரதன் இராமனை அழைத்துப்போக வாயிலிற் படுத்து அவன் குடிகளை இராமனையழைக்குமாறு ஏவியதையும் குடிகள் மறுத்ததையும் கம்பர் மறைத்துவிட்டனர்.

தசரதனுடைய மனைவியரனைவரும் வந்ததாகவும் அவர்களெல்லோரையும் இராமன் வணங்கினனெனவும் வால்மீகி கூறுகிறார். கம்பரோ உடன்கட்டையேறலாகிய தீய வழக்கத்தின்படி தசரதனுடைய மனைவியரனைவரையும் தீயிலிட்டுக் கோஞத்தியதற்கேற்ப கோசலை சுமத்திரை கைகேசி ஆகிய மூவரும் வந்தனர் என்றுக் கூறுகின்றார்.

பரத்துவாச முனிவன் இராமனைப் பார்க்க வரவில்லையெனவும் பரதன் அயோத்திக்குப்போகும் வழியில் நடந்த வரலாற்றை அம்முனிவனைக் கண்டு கூறினனெனவும் கூறுகிறார் வால்மீகி. கம்பரோ அம்முனிவன் இராமனைக்காண உடன் வந்து திரும்பினன் என்பர். சாபாலி முனிவன் பேசியது முதலிய வரலாறுகளையெல்லாம் கம்பர் மறைத்துவிட்டனர். மேலும் பரதன் அயோத்திக்குப்போய் தசரத

னுடைய அரண்மனை புகுந்து அங்கே தனது தாய்மார்களை விட்டு விட்டு நந்திக்கிராமம் போயினன் என வால்மீகி கூறுகிறார். கம்பரோ அவன் அயோத்தி நகரத்திலேயே புக்கிலன் நந்திக்கிராமம் போயின னென்பர்.

---

## பதினைந்தாம் அத்தியாயம்.

---



பரதன் போனபின்பு சித்திரகூடத்திலிருந்த முனிவர்கள் வேறிடத்திற்குப் போகவேண்டுமென்று ஆவல் கொண்டிருப்பதையும், எதையோ கண்டு பயப்படுவதையும், அவர்களுடைய சொற்களாலும் குறிகளாலும் இராமன் அறிந்தனன். அவர்கள் சங்கைப்பட்டு இராமனைக் கண்ணாலும், புருவத்தாலும் சாடையால் சுட்டிக்காட்டி ஒருவருக்கொருவர் மெதுவாகக் குசுகுசுவென்று சொல்லி அவனைக் குறித்து இரகசியமாக என்னென்னவோ கதைகளைப் பேசிக்கொண்டிருந்தனர். இராமன் தன்னிடத்தில் அவர்கள் ஏதோ சந்தேகப்படுவதாக அறிந்து முனிவர் தலைவனைக் கண்டு காரணம் வினவினன். அதற்கு அம்முனித் தலைவன் "இங்கிருக்கும் முனிவர்களுக்கு உங்களுடைய நிமித்தமாக அரக்கர்களால் துன்பங்கள் விளைகின்றன. அவைகளுக்கு அஞ்சி முனிவர்கள் ஒருவருக்கொருவர் தனித்து ஏதோ கதைகளைப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். இதற்கருகிலுள்ள ஜனஸ்தானத்தில் (மக்களிடம்) இராவணனுடைய தம்பியாகிய கரன் வாழ்கிறான். அவன் அங்கிருக்கும் முனிவர்களையெல்லாம் துரத்துகிறான். உன்னிடத்திலும் அவனுக்கு வெறுப்புண்டாயிருக்கிறது. நீ இந்த இடத்திற்கு வந்ததுமுதல் அரக்கர் எங்களைத் துன்புறுத்துகின்றனர். நீ இங்கிருக்கும் வரையும் அவர்கள் எங்களைத் துன்புறுத்திக்கொண்டேயிருப்பார்கள். அதனால் இந்த முனிவர்கள் வேறிடம் போகத் துணிந்திருக்கிறார்கள். நாங்கள் முன் வாழ்ந்த ஓரிடத்திற்

குப் போகிறோம். கரன் மிகுந்த வலிமையுடையவனுதலால் உன்னை யும் துன்புறுத்துவான். வேண்டுமானுல் நீயும் வரலாம். நீ வல்லவ னுனுலும் நீ உன்னுடைய மனைவியுடன் இங்கே வந்திருப்பதால் எப் பொழுதும் உனக்குத் துன்பம் விளையும். ஆகையால் நீ இங்கே வாழ்வது துன்பத்திற்கே இடமாம்" என்றனன். இராமனுல் அம் முனிவர்களைத் தடுக்க முடியவில்லை. அவர்கள் போய்விட்டார்கள்.

இராமன் "இவ்விடமானது பரதனைப்பற்றிய நினைவை அடிக்கடி உண்டாக்குகிறது. மேலும் சேனைகளால் அசுத்தம் அடைந்துளது" என்று சிந்தித்துப் பல காரணங்களால் அவ்விடத்தைவிட்டுப் புறப் பட்டு அத்திரி முனிவன் குடிசையை அடைந்தான். அம்முனிவன் தன் மனைவி அனுசூயையைப்பற்றி மிகவும் புகழ்ந்து பேசி அவளைப் பணியுமாறு சீதையைத் தூண்டினுன். சீதை அனுசூயையை வணங் கினுள். அனுசூயை சீதைக்குக் கலவைச் சாந்து, அணிகலன்கள், பட்டாடைகள் தந்து இராமனை மணந்த வரலாற்றை வினவினுள். சீதை "அம்மே! கலப்பையால் நிலத்தை உழுதுகொண்டிருந்த சனகமன்னர்முன் நிலத்தில் தோன்றினேன். அவர் உடம்பு முழு வதும் புழுதி படிந்துள்ள என்னைப் பார்த்து எடுத்து வளர்த்தார். மணப்பருவம் எனக்கு வந்ததைப் பார்த்து வறியவன் பணமில்லா மையாற் சிந்தனையடைவதுபோல் சிந்தனையடைந்தார். பெண்ணின் தந்தை பெண்ணை மணம் செய்துகொடாமலிருந்தால் அவமானமடை வான். மன்னவர் அம்மாதிரியான அவமானம் தமக்கும் சமீபத்தி லிருப்பதாக ஆலோசித்துக் கவலைக் கடலில் மூழ்கியவராய் புணை யில்லாதவன்போல் கரையை அடையவில்லை. அவர் என்னை உலக வழக்கப்படிப் பிறவாதவளாக அறிந்து ஒத்த குலத்தையும் குணத் தையும் உடையவனும் எனக்குத் தக்கவனுமானக் கணவனை ஆலோ சித்து எவ்வளவு சிரமப்பட்டுத் தேடியும் கிடைக்கவில்லை. அதனுல் வில்லை வளைப்பவனுக்கே என்னைக் கொடுப்பதாக ஏற்பாடு செய்த னர். ஒருவராலும் அது முடியவில்லை. நெடுங்காலம் சென்றபின் இராமர் வந்து வளைத்தார். ஆனுல் என் தந்தை தாரை வார்க்கப் போனபோது இராமர் மறுத்துத் தமது தந்தையின் கருத்தை யறி யாமல் என்னை ஏற்கமுடியாதென்றுர். எனது தந்தை அவ்வாறே தசரதரை வரவழைத்து அவருடைய சம்மதி பெற்று என்னை இராம ருக்கு மணமுடித்தார்" என்று விவரித்துரைத்தாள். பின் சீதை

விடைபெற்று இராமனிடம் வந்தாள். அவள் பெற்ற பரிசுகளைக் கண்டு இராமன் மகிழ்ந்தான். மறுநாட்காலையில் இராமன் அம்முனிவர்களிடம் விடைபெற்றுத் தண்டகாரணியத்தில் நுழைந்தான். முனிவர்கள் அரக்கரின் துன்பத்தைச் சொல்லி வழியனுப்பினர். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

இராமன் சித்திரகூடத்தைவிட்டுப் புறப்படுமுன்னரே அங்கிருந்த முனிவர்கள் அவனைவிட்டுப் பிரிந்து வேற்றிடம் சென்றுவிட்டனர். இராமன் சித்திரகூடம் வந்த நாள் தொடங்கி அரக்கர்கள் அங்கிருந்த முனிவர்களைத் துன்புறுத்திவந்தனரெனவும், அதற்குக் காரணம் இராமன் வந்ததே என்றும், இராமனிடத்தில் அரக்கர் தலைவனும் கரனுக்கு வெறுப்பென்றும், இராமன் அங்கிருக்கும் வரையும் அவர்களை அரக்கர் துன்புறுத்திக்கொண்டேயிருப்பார்களென்றும், அதனால் அம்முனிவர்கள் வேற்றிடம் போக நேர்ந்ததென்றும், இராமன் அவனுடைய மனைவியுடன் வந்திருப்பதால் எப்பொழுதும் அவனுக்குத் துன்பம் விளையுமென்றும் முனிவர் தலைவன் இராமனிடம் நேரிலே கூறியதைக் கவனிக்குமாறு அன்பர்களை வேண்டுகின்றோம். இதனால் இவ்வாறு அரக்கரால் விளைந்த துன்பமனைத்தும் இராமனையும் சீதையையும் குறித்ததே எனவும், அரக்கர் அவர்கள் பொருட்டாகவே முனிவர்களைத் துன்புறுத்தினரெனவும் அறியலாம். இதன் காரணத்தைச் சிறுவரும் உணராதிரார். முனிவர்கள் இராமனிடம் சங்கைப்பட்டு, அவனைக் கண்ணாலும் புருவத்தாலும் சாடையால் சுட்டிக்காட்டி ஒருவருக்கொருவர் மெதுவாகக் குசுகுசுவென்று சொல்லி அவனைக் குறித்து இரகசியமாக என்னென்னவோ கதைகளைப் பேசிக்கொண்டிருந்தனரென்னும் செய்தியைக் கவனிக்குமிடத்து அக்கதைகள் யாவையாயிருக்கலாமென்ற சிந்தனை உண்டாகிறது. அவை எத்தன்மையனவாயிருந்தாலும் அவர்கள் அவற்றைப் பிறரறியாது பேசினபடியால் இராமனையும், சீதையையும், இலக்குவனையும்பற்றிய கேவலமான வெறுக்கத்தகுந்தக் கதைகளாகவே இருத்தல் வேண்டும். இல்லையானால் அவைகளை அவர்கள் இராமன் முதலியோர் அறியாது பேசக் காரணமில்லை. அச்செயல்கள் கரன் முதலியோருக்கு மனதில் வெறுப்பை விளைத்திருத்தல் கூடும். அதனாலேயே அவர்கள் முனிவர்களை வந்து துன்புறுத்தியிருக்கின்றனர். அவ்விடமெல்லாம் கரனுக்குச் சொந்தமாயிருக்க

வேண்டும். அவ்விடத்தில் இராமனும் சீதையும் இலக்குவனும் பன்றி முதலிய மிருகங்களைக் கொன்று தின்றதோடு நில்லாமல் காடுகளிலும் ஆற்றிலும் அவர்கள் காட்டு மிருகங்களைப்போல காமுற்றுத் திரிந்தனரென நாம் முன்பு ஆராய்ந்துளோம். அறிஞர் வெறுக்கத்தகுந்த இத்திய செயல்களைத் தமிழ்மன்னனும் கரன் முதலியோர் கண்டே மட்டிலடங்காத வெறுப்பைக் கொண்டு துன்புறுத்தத் தொடங்கினர்போலும்! இச்செய்திகளைப் பேரறிவாளர் சிந்தித்துத் தெளிய வேண்டுகிறோம்.

இராமனால் அம்முனிவர்களைத் தடுக்க முடியவில்லை. அவர்களுக்கு அவனுடத்தில் நம்பிக்கையில்லாது போனபின்பு அதிலும் அவனாலேயே தங்களுக்குப் பல தாங்கமுடியாத துன்பங்கள் விளைகின்றன என்ற உணர்ச்சி மீதூர்ந்தெழுந்தபின்பு அவர்களைத் தடுத்துரைக்க யாவரே வல்லவர்? அதனால் சிலநாளில் இராமனும் பல காரணங்களை முன்னிட்டு அவ்விடத்தினின்றும் நீங்கித் தெற்கே போகிறான். போனவன் அத்திரி முனிவனைக் காண்கிறான். அம்முனிவன் தனதுமனைவி அனுசூயையையே வானளாவப் புகழ்கிறான்.

அனுசூயையினுடைய வேண்டுதலின்படி சீதை தனது முன் வரலாற்றைக் கூறுகிறாள். இவ்வரலாற்றினால் அவள் சனகன்முன் புழுதி படிந்து கிடந்தனளென அறியலாம். கணவனையிழந்த கன்னிகையோ அல்லது மணமாகாத கன்னியோ பெற்றபிள்ளையே இவ்வாறு கதியற்றுப் புழுதி படிந்து கிடந்தது என்று நாம் முன்னர் ஆராய்ந்த செய்தி இதனால் வலியுறுகின்றது. மேலும் அவளை வளர்த்த சனகன், அவள் மணப்பருவம் அடைந்தபோது மிகவும் கவலையடைகிறான். சீதை மற்றைப் பெண்களைப்போலப் பிறந்தவள் இல்லையாதலால் அவளை மணக்க முன்வருவார் இலராகின்றனர். சனகன் மிகவும் முயன்றும் கிடைக்கவில்லை. கடைசியாக வில்லை வளைப்போர்க்கு அவளை மணம் செய்விப்பதென அவன் முடிவு கட்டியும் நெடுங்காலம்வரை அவளை மணக்க மணாளன் வரவில்லை. அப்போது தான் இராமன் வருகிறான். இராமன் அப்போது பதினாறுட்டைப் பிராயத்தான். சீதையோ மணப்பருவமடைந்து நெடுங்காலம் மணமில்லாமலிருந்தவளாதலால் அவளுக்குக் குறைந்தது வயது முப்பதுக்குமேற்பட்டதென்பது நாம் முன்னர் பாலகாண்டத்தில் நன்றாக

ஆராய்ந்து நிலைநாட்டிய செய்தியே. வயதில் மிக இளையவனாகிய இராமன்கூட சீதையை மணப்பதற்குமுன் தன் தந்தையின் சம்மதம் பெறத் துணிந்து நிற்கிறான். இதுவும் அவள் பேர் ஊர் குலம் தெரியாத நிலைமையிலிருந்தமையினாற்றான் போலும்! நிற்க, கம்ப ரது புரளியை ஆராய்வோம்.

பொய்யர் தலைவராம் கம்பர் பரதன் போனபின் சித்திரகூடத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறுவரோ? அவருக்கு இராமனைத் தெய்வமெனக் காட்டி உலகை ஏமாற்றவேண்டுமே! அதற்காக அவர் இராமனைப்பற்றிய பழிப்புக்கிடமான வரலாறுகளாகிய முனிவர்கள் இராமனைப்பற்றிக் கூடிக்கூடிப் பேசிப்பிரிந்தது முதலிய செய்திகளையெல்லாம் மறைத்தார். முழுப்பூசனிக்காயைச் சோற்றில் மறைத்ததுபோலும் இது. இராமன் சித்திரகூடத்தை விட்டுப் புறப்பட்ட காரணங்கள் வேறாக இருக்க, கம்பர் தனது தம்பி முதலியோர் அடிக்கடி வருவார்கள் என்ற எண்ணத்தால் இராமன் அதைவிட்டுப் போனான் எனப் புதுக்கதை எழுதுகிறார்.

வால்மீகி முனிவருடைய கதைப்போக்கை விடுத்துக் கம்பர் தமது இராமாயணத்தில் சித்திரகூடத்தைவிட்டு இராமன் புறப்பட்டான் என்ற அளவில் அயோத்தியா காண்டத்தை நிறுத்திக் கொண்டு, அவன் அத்திரி முனிவனைக்கண்ட வரலாற்றை ஆரணிய காண்டத்தில் பாடுகிறார். வால்மீகியோ அத்திரியைக்கண்டு விடை பெற்று இராமன் ஆரணியத்தில் புகுந்தான் என்பதை அயோத்தியா காண்டத்தில் கூறி, ஆரணியம் புகுந்தபின் நிகழ்ச்சிகளை ஆரணிய காண்டத்தில் கூறுகிறார். ஆதலின் வால்மீகியதே பொருத்தமான வரலாறும். சீதை அனுசூயையிடம் கூறிய முன்னைய மண வரலாறுகளைக் கம்பர் கூறாது விடுத்தார்; அது சீதையின் தெய்வத் தன்மையை நிலைநாட்டக் கேடாமாதலின். உண்மை மறைப்பதே இவர் இயல்புபோலும்!

இக்கட்டுரையை முடிப்பதன் முன் நமது ஆராய்ச்சியைப் படிக்கும் அன்பர்களுக்கு ஒன்றுகூற விரும்புகின்றோம். நாம் வால்மீகி இராமாயணத்தின்கண்ணுள்ள உண்மைகளைத் தொடர்பாக எடுத்துக்காட்டி அதனால் இராமன் முதலிய ஆரிய மக்களின் நிலைமைகளை விளக்கி வருவதோடு கம்பர் அவ்வரலாற்றை எவ்வாறு

மாற்றியோ திரித்தியோ புதுவதுபுனைந்தோ உலகத்தை ஏமாற்று கிறார் என்ற உண்மைகளை எடுத்தியம்பி வருகின்றோம். இது மெய் யறிவாளர்களுக்கு உண்மைத் தோற்றத்தால் இன்பமும் வியப்பும் தோன்றி அவர்களுள்ளத்தை மகிழ்விக்கும் என்பதில் ஐயம் அணு வளவுமில்லை. ஆனால் அறிஞரேனும் கற்று வல்லார்போலத் தம் மைக் காட்டிக்கொள்ளும் பண்டிதர் ஒருவரிருவருக்கு இவ்வாராய்ச்சி மன எரிச்சலை உண்டாக்கியிருக்கிறதென்பதிலும் ஐயம் அணுவளவு மில்லை. ஆதலின் அவர்களுள் இரண்டொருவருக்கு மனப்புழுக்கம் அதிகமாகி வெளிவந்து நம்மைத் தூற்றவும் தலைப்பட்டுளர். ஆனால் அப்பண்டிதர்கள் உண்மையில் அறிவாளிகளேல் அவர்களுக்கொன்று கூற விரும்புகின்றோம். நீங்கள் உண்மையில் வால்மீகி இராமா யணத்தையும் கம்ப இராமாயணத்தையும் படித்திருக்கின்றீர்களா? உங்களுக்கு ஆரியர் தமிழர் என்று கூறப்பெறும் வகுப்பினரைப் பற்றிய ஆராய்ச்சி உண்டா? நீங்கள் அவ்விரு வகையில் எவ்வகை யினர்? அல்லது இரண்டும் கலந்த புது வகையினரா? இவ்வாராய்ச்சி களில் நுழைந்தாய்ந்து காய்தலுவத்தலின்றி வால்மீகியையும் கம் பரையும் படித்து உண்மை தெளிந்து பின்னர் குறையுளதேல் கூற முன் வாருங்கள். யாம் எடுத்துக் காட்டுவது உண்மையாகப் புலப் படின் அவ்வுண்மைகளை உலகினர்க்கு எடுத்துக்காட்ட முன் வாருங் கள். ஒன்றும் செய்யாது சரியானபடி நூல்களையும் படியாது உண்மை தெரியவேண்டுமென்ற உணர்ச்சியுமில்லாது கம்பர் புரளி யில் மயங்கி வாயில் வந்ததையெல்லாம் கூறி, ஐயோ நமது தெய் வங்களாகிய இராமனையும் சீதையையும் அநியாயமாகத் திட்டுகிறார் களே என்று நீலிக்கண்ணீர் வடித்துப் பொது மக்களை ஏமாற்றி வயிறு வளர்த்துத்திரிய முன் வராதீர்கள். ஏனெனில் கெட்டிக் காரன் புளுகு எட்டு நாட்களில் தெரியும். பல நாள் திருடன் ஒரு நாள் அகப்படுவான். ஆதலின் பொதுமக்களை உங்களால் எத்தனை நாள் தான் ஏமாற்றித் திரியமுடியும்? பொதுமக்கள் கல்வியறி வடையத் தொடங்கும் காலம் வந்துவிட்டபடியால் இனி உங்கள் மாமாயமெல்லாம் அவர்களிடைச் செல்லாது. வால்மீகி இராமா யணமோ ஒருவரிருவரால் மட்டுமென்று, பலபேரால் மொழிபெயர்த்து வெளி வந்துலாவுகின்றதாயிற்று. அம்மொழிபெயர்ப்புக்களிற் பல அவ்வாரியருள்ளும் திருமாலடியராம் ஐயங்கார்களாலேயே மொழி

பெயர்த்தனவாயுள. ஆதலின் உங்களுடைய நீலிக்கண்ணீரைக் கண்டு இனி பொது மக்கள் ஏமாறுர், ஏமாறுர்.

அன்பும் அறிவு மிக்க நண்பர்களே ! நீங்கள் உங்களிடை வந்து பொய்ம்மையைப் பரப்பி மெய்ம்மையை மறைக்க முன்வரும் பண்டிதரிடம் "ஐயா, பண்டிதரே! நீர் வெறும் பேச்சுக்களை நிறுத்தி தகுந்த ஆதாரத்தோடு முன்வாரும். வால்மீகி இராமாயணத்தைக்கொண்டு சந்திரசேகரப்பாவலன் கூறுவனவற்றுள் எவ்வெவை பொய்யோ அவைகளை எடுத்துக்காட்டும். அவ்வாறு ஒழுங்கான வழியில் நுழையாமல் ஏன் வெற்றுரையாடித் திரிகின்றீர்" என்று வினவுங்கள். அப்படி அறிவாளிகள் முன் வந்தாலே பொய்ம்மைப் பண்டிதர் பொய்ம்மையைப்போல நிலைபெறுது ஓடி ஒழிவர். உண்மையே என்றும் வெல்வது, என்றும் அழியாதிருப்பது, என்றும் நலம் தருவது. ஆதலின் உண்மையை நாடுமாறு உங்களை வேண்டுகின்றேம்.

"யாமெய்யாக் கண்டவற்று ளில்லையெனைத் தொன்றும்
வாய்மையி னல்ல பிற"

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

இத்துடன் இராமாயணம் அயோத்தியாகாண்ட ஆராய்ச்சி முற்றுப்பெறுகிறது. இனி ஆரணியகாண்ட ஆராய்ச்சி தொடர்ந்து வெளிவருவதாகும்.



# "குடி அரசு" புத்தகாலயம்.



| | | | | |
|---|---|---|---|---|
| கைவல்யம் அல்லது கலைக்கியானம். இது கைவல்ய சாமியார் கட்டுரைத் தொகுதி. | .... | 0 | 8 | 0 |
| மனுநீதி மருமம். .... | .... | 0 | 2 | 0 |
| இராமலிங்க சுவாமி பாடல் திரட்டு .... | .... | 0 | 2 | 0 |
| சுயமரியாதைத் தாலாட்டு .... | .... | 0 | 2 | 0 |
| சோதிடப் புரட்டு .... | .... | 0 | 2 | 0 |
| திரு. ஈ. வெ. இராமசாமியின் சீர்திருத்த மகாநாட்டு சொற்பொழிவு (2-ம் பதிப்பு.) .... | .... | 0 | 2 | 0 |
| சுயமரியாதைப் பாடல் .... | .... | 0 | 2 | 0 |
| தர்ம பரீக்ஷை அல்லது புராண ஆபாசம் | .... | 0 | 3 | 0 |
| பங்கஜம் அல்லது பார்ப்பனக் கொடுமை | .... | 0 | 4 | 0 |
| ஞானசூரியன் .... | .... | 0 | 4 | 0 |
| இராமாயணத்தின் ஆராய்ச்சி (பாலகாண்டம்) | .... | 0 | 4 | 0 |
| ஷை இரண்டாம் பாகம் (அயோத்தியா காண்டம்) | .... | 0 | 8 | 0 |
| மேயோ கூற்று மெய்யா? பொய்யா? (2-ம் பதிப்பு) | .... | 0 | 3 | 0 |
| கடவுளை நிந்திக்கும் கயவர்கள் யார்? | .... | 0 | 2 | 0 |
| * இயற்கை மதம் .... | .... | 0 | 8 | 0 |
| * சுயமரியாதைத் தத்துவ கீதங்கள் .... | .... | 0 | 4 | 0 |
| * திருக்குறள் 1330 குறளுக்கு உரையுடன் | .... | 0 | 8 | 0 |
| * சுவாமிகளின் அடிமை .... | .... | 0 | 12 | 0 |
| * சிதம்பர இரகசியம் .... | .... | 0 | 8 | 0 |
| * சுதந்திரப் போர் அல்லது உப்பள முற்றுகை | .... | 0 | 4 | 0 |
| * சுயமரியாதைக் கப்பல் .... | .... | 1 | 0 | 0 |

☞ * இந்தப் புள்ளி உள்ள புத்தகங்கள் விற்பனைக்காக நமக்கு அனுப்பப்பட்டவைகள்.

புஸ்தகங்களுக்கு ஸ்டாம்பு வைத்து அனுப்புகின்றவர்கள் புஸ்தகக் கிரயத்திற்கு மேலாகப் புஸ்தகம் ஒன்றுக்கு ஒன்றரை அணு ஸ்டாம்பு அனுப்பவேண்டும். 8 அணுவுக்குக் குறைந்த ஆர்டருக்கு வி. பி. அனுப்பப்படமாட்டாது. ஆர்டர்களுக்குப் பாதித்தொகையாவது முன்பணம் அனுப்பவேண்டும்.

ஏனெனில், புதிய உத்தரவுப்படி வி. பி. கள் மூன்று நாட்களில் வாபீஸ் செய்யப்படுவதால் அநேக வி. பி. கள் வாபீசாகிவிடுகின்றன. ஆதலால்தான் ஆர்டருடன் பகுதியாவது முன்பணம் அனுப்பி ஆர்டர் செய்யவேண்டும் என்று விரும்புகிறோம்.

## "குடி அரசு" "ரிவோல்ட்" மாலைகள்.

"குடி அரசு" மாலைகள் கோர்வையாக முதல் வருஷத்திலிருந்து சென்ற வருஷம் வரை 5 வருஷகாலம் வெளியான மலர்களைத் தனித் தனி வருஷமாக பைண்ட் செய்து புஸ்தகமாக வைக்கப்பட்டிருக்கிறது.

| | |
|---|---|
| ஒவ்வொரு வருஷ மாலை கிரயம் | ரூ. 5—0—0 |
| "ரிவோல்ட்" ஒரு வருஷ மாலை பைண்ட் செய்தது. | ரூ. 5—0—0 |

ஆர்டருடன் ஒரு ரூபாய் முன்பணமனுப்பவேண்டும்.

மானேஜர்,

"குடி அரசு" புத்தகாலயம், ஈரோடு.



குமரன் பிரஸ், காஞ்சீபுரம். 1538—6.

# நாலிரு நவீனக் களஞ்சியம்.

## கலைமகள் எழுதியது.

---

இது புதிய முறையில் எழுதப்பட்டது. பெண்களின் மாண்பையும் அவர்களின் முன்னேற்றத்தையும் குறியாகக்கொண்டு ஆங்கிலத்திலும் தமிழிலும் வல்ல ஒரு மாதரசியால் எழுதப்பட்டது.

### இதிலடங்கிய விஷயங்கள்.

1. விருப்பற்ற காதலர் அல்லது மகளிர் மாண்பு:—(1) ஆழ்ந்த ஆலோசனை (2) கன்னெஞ்சு படைத்த காதலிகள் (3) நேடால் பிரயாணம் (4) அன்றன்று; அவர்கள் நன்னெஞ்சு வாய்ந்த நங்கையரே! (5) ஒன்றுபட்ட இல்வாழ்வின் ஒப்பற்ற இன்பம்.

2. ரோஜா திருந்தியது:—(1) மின்னுவதெல்லாம் பொன்னல்ல (2) இன்பத்தின்மேல் துன்பம் (3) வறுமையும் செல்வமும் ஒருவழி நில்லா (4) பிரிந்தவர் கூடினுல் பேசல் வேண்டுமோ? (5) இதென்ன நாணு சீமாட்டி?

3. தேவகானம்:-(1) சாவாரை யாரே தவிர்ப்பவர்? (2) ஐயோ! என்னுல் உயிர்விட முடியாது. (3) மாண்டுபோக மனவிருப்பம்.

4. ஆச்சர்யமான சமயம்:—(1) மின்னல் மின்னி மறைந்ததே. (2) இதுதான் ஆச்சர்யமான சமயம்.

### இதைப்பற்றி பத்திரிகைகளின் அபிப்பிராயம்.

நாம் படித்தமட்டில் அறிவு, உண்மை, தத்வம் முதலியவைகளை போதிக்கக்கூடிய கதைகள் உலக நடைக்கேற்றவை இதில் அடங்கி இருக்கின்றன. தமிழ் நடை எளிதாயும் ரசமாயுமிருக்கிறது.

சுதேசமித்திரன்.

படிப்போர்க்குப் பல நல்லெண்ணங்களைத் தோற்றுவிக்கும் தன்மையில் இது எழுதப்பட்டிருப்பது பாராட்டத்தக்கது. இதனைத் தமிழ் நாட்டார் ஆதரிப்பாராக. நவசக்தி.

இப்புத்தகம் மக்களனைவரும் நன்கு உணருமாறு மிக எளிய நடையில் நன்ருக எழுதப்பட்டுள்ளது. இதில் பண ஆசையின் கேட்டையும், உண்மைக்காதலன் மேன்மையையும், ஸ்திரீகளின் மாண்பையும் பெரும்பாலும் பெண்கள் முன்னேற்றத்தையும் விளக்கிக்காட்டும் நான்கு கதைகள் அடங்கியிருக்கின்றன. தாருல் இஸ்லாம்.

இன்னும் பல.



# சுயமரியாதை இயக்கப் பத்திரி

## 'குடி அரசு' வாரப்பதிப்பு.

| | |
|---|---|
| உள்நாடு வருடசந்தா | 3—0—0 |
| வெளிநாடு வருடசந்தா | 4—0—0 |

ஆசிரியர் ஈ. வே. இராமசாமி.

விலாசம்:—மானேஜர், "குடி அரசு" ஈரோடு.

## 'குமரன்' வாரப்பதிப்பு.

| | |
|---|---|
| உள்நாடு வருடசந்தா | 5—0—0 |
| வெளிநாடு வருடசந்தா | 6—0—0 |

மாதப்பதிப்பு.

| | |
|---|---|
| உள்நாடு வருடசந்தா | 0-12—0 |
| வெளிநாடு வருடசந்தா | 1—0—0 |

ஆசிரியர் சோ. முருகப்பா.

விலாசம்:—மானேஜர், "குமரன்" காரைக்குடி.
ராமநாதபுரம் ஜில்லா.

## 'புதுவைமுரசு' வாரப்பதிப்பு.

| | |
|---|---|
| உள்நாடு வருடசந்தா | 3—0—0 |
| வெளிநாடு வருடசந்தா | 5—0—0 |

ஆசிரியர், S. குருசாமி B. A.,

விலாசம்:—மானேஜர், "புதுவைமுரசு"
4-லல்லிதொலாந்தால் வீதி, புதுச்சேரி.

## 'நாடார் குலமித்திரன்' வாரப்பதிப்பு.

| | |
|---|---|
| உள்நாடு வருடசந்தா | 3—0—0 |
| வெளிநாடு வருடசந்தா | 5—0—0 |

ஆசிரியர், சு. அ. முத்து நாடார்,

விலாசம்:—மானேஜர், "நாடார் குலமித்திரன்"
அருப்புக்கோட்டை, ராமநாதபுரம் ஜில்லா.

## 'சண்டமாருதம்' வாரப்பதிப்பு.

| | |
|---|---|
| உள்நாடு வருடசந்தா | 3—0—0 |
| வெளிநாடு வருடசந்தா | 4—0 0 |

விலாசம்:—ஆசிரியர், அ. பொன்னம்பலம்,
மானேஜர், "சண்டமாருதம்" கோட்டையூர்,
ராமநாதபுரம் ஜில்லா.

---

குமரன் பிரஸ், காஞ்சிபுரம்.